# சைவசித்தாந்த ஒழுக்கவியல் அடிப்படைகள்





திருமதி. கலைவாணி ராமநாதன்
சிரேஷ்ட விரிவுரையாளர்
இந்து நாகரிகத்துறை
யாழ். பல்கலைக் கழகம்

# சைவசித்தாந்த ஒழுக்கவியல் அடிப்படைகள்

**(Fundermentals of Saivasiddhanta Moral Philosophy)**

(இந்து நாகரிகம் - உயர்தர வகுப்பு, பல்கலைக்கழக உள்வாரி, வெளிவாரி
பட்டப்படிப்பு மாணவர்கள் பயன்படுத்தலாம்)

*திருமதி. கலைவாணி இராமநாதன்,* M.A
சிரேஷ்ட விரிவுரையாளர்,
இந்து நாகரிகத்துறை,
யாழ்ப்பாணப்பல்கலைக்கழகம் .

*அச்சிட்டோர் :-*
கார்த்திகேயன் பிறைவேட் லிமிட்டெட்
501/2 காலி வீதி
கொழும்பு 6. ஸ்ரீலங்கா

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சைவசித்தாந்த ஒழுக்கவியல் அடிப்படைகள்.<br>(Fundermentals of Saivasiddhanta Moral Philosophy)<br>(Fundermentals of Saivasiddhanta Moral Philosophy) |
| முதற் பதிப்பு | : | வைகாசி, 1997 |
| FirstEdition | : | May,1997 |
| பதிப்புரிமை | : | ஆசிரியருக்கே. |
| வெளியீடு | : | திருமதி. கலைவாணி இராமநாதன், M.A<br>இந்து நாகரிகத்துறை,<br>யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்,<br>இலங்கை.<br><br>சுதுமலை வீதி, தாவடிச் சந்தி<br>கொக்குவில்,<br>யாழ்ப்பாணம். |
| நூலின் விலை | : | 140/= |
| அச்சிட்டோர் | : | கார்த்திகேயன் (பிறைவேட்) லிமிட்டெட்<br>501/2, காலிவீதி, கொழும்பு- 6.<br>ஸ்ரீலங்கா, 1997 |


**திரிகரண சுத்தியும் காரியசித்தியும் தருவாய்!**



**ஓம் சிவகுமாராய தஸ்மை**
**ஸ்ரீ குருவே நமஹ!**

## காணிக்கை

*மறைந்த எனது தாயார்*

*திருமதி. சி. வல்லிபுரம்*

*அவர்கட்கு*

*இச் சிறு நூல்*

*காணிக்கை*

## நூலின் பொருள் :

# ஆசியுரை

**சுவாமி ஆத்மகனாநந்தா**
**ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன்**
**40, இராமகிருஷ்ண வீதி, கொழும்பு - 06**

யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில், இந்து நாகரிகத் துறையில், சிரேஷ்ட விரிவுரையாளராகப் பணியாற்றும் திருமதி கலைவாணி இராம நாதன் அவர்கள் எழுதிய ''சைவசித்தாந்தத்தில் ஒழுக்கவியல் அடிப்படைகள்'' என்னும் இந் நூலுக்கு ஆசியுரை வழங்குவதில் மகிழ்ச்சியடைகின்றேன்.

எல்லா சமயங்களிலும் இரு நிலைகளை அல்லது படிகளைக் காணலாம். ஒன்று சடங்கு நிலை, மற்றது அன்புநிலை. சடங்கு, ஆரம்ப நிலையென்றால், அன்பு முடிவு நிலை. சடங்கு நிலையிலிருந்து அன்பு நிலைக்கு உயர ஒழுக்கம் அல்லது சுயநலமின்மை என்பது அத்திவாரமாக அமைகிறது. ஒழுக்கம் இல்லாத சமய வாழ்க்கை, மூடநம்பிக்கை மற்றும் சுயநலதேடுதல்களின் இருப்பிடமாகி, மனித சமுதாயத்தை அமைதியின்மையிலும் குழப்பங் களிலும் ஆழ்த்திவிடுகிறது. இன்று மனித குலத்தில் காணப்படும் அமைதியின்மைக்கு இதுவே காரணம். எனவேதான் 'இன்று மனித குலத் திற்குத் தேவையானது ஒழுக்கமே' என்று அடிக்கடி தனது சொற்பொ ழிவுகளில் மிகவும் வலியுறுத்திக் கூறியுள்ளார் சுவாமி விவேகானந்தர்.

இந்நூலிலும் இக்கருத்தைத் தெளிவாகக் காட்டியுள்ளார் இந்நூலா சிரியர். ஒழுக்கமற்றவனது பூசை வீணானது என்பதை, அப்பர் சுவாமிகளின் திருவாக்கை மேற்கோள்காட்டி இந்நூலில் விளக்குகிறார்.

''பொக்கமிக்கவர் சொரியும் பூவும் நீரும் கண்டு
நக்கு நிற்பர் நாயகர் அவர் தமை நாணியே''

''பொய்யும் வஞ்சனையும் நிறைந்த மனதுடையார் ஆற்றும் பூசை யினைக் கண்டு, அவர்களது மறைந்தொழுகும் ஒழுக்கத்தைப் பார்க்கும் ஈசன் தனக்குத்தானே நகைப்பதுடன் அப்பூசைக்கு வெட்கப்பட்டு விலகி நிற்பர்.

திருமதி கலைவாணி இராமநாதன் ஏற்கெனவே 'வேதபாரம்பரியமும் சைவசித்தாந்தமும்' மற்றும் 'இந்து தர்மமும் வர்ண தர்மமும்' என்னும் இரு நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். இந்நூல் அவரது மூன்றாவது படைப்பு. அவரது எழுத்துப் பணி மேலும் விரிவடைய அவரை வாழ்த்துகிறேன். அவருக்கு இறைவன் சகல நலன்களையும் அருளப்பிரார்த்திக்கிறேன்.

ஒழுக்கத்தை வளர்த்து சமயத்தைக் காப்போம். அப்பொழுது மனிதகுலம் அமைதியிலும் சமாதானத்திலும் நிலைபெறும் என்பதில் ஐயமில்லை.

**சுவாமி ஆத்மகனாநந்தா**

***திகதி : 12.05.1997***

# வாழ்த்துரை

**கார்த்திகேசு சிவத்தம்பி**
**சிரேஷ்ட பேராசிரியர், யாழ்ப்பாணப் பல்லலைக்கழகம்,**
**அதிதிப் பேராசிரியர், கிழக்குப் பல்கலைக்கழகம். மட்டக்களப்பு**

இலங்கை வரலாற்றில், மேனாட்டாட்சியின் தாக்கத்திலிருந்து விடுபடுவதற்கான முதல் துலங்கல் மதம் - மொழி நிலைப்பட்டதா கவே அமைந்தது (சைவம் - தமிழ், பௌத்தம் - சிங்களம்). இந்த ஒரு செல்நெறி காரணமாக மதநிலை ஆய்வுகள் பல்கலைக்கழக மட்டத்துக்கு வந்த வேளையிலும் சுயமத ஆய்வுப்போக்கே காணப்பட்டுவந்துள்ளது. இதனால் மதங்களில் சமூக அடிப்படைகள் பற்றிய ஆய்வுகளிலும் பார்க்க அவற்றின் சாஸ்திரீய, மெய்யியல் அடிப்படைகள் பற்றியதேடலே மேலோங்கியது.

திருவாட்டி கலைவாணி இராமநாதன் அவர்களது இந்த நூலிலும் அந்நோக்கு அடித்தளமாக அமைகின்றது. அத்தகைய ஆதர்ச மெய்யியல் நோக்கினுள்ளே, ஓர் அகண்ட விரிந்த கண்ணோட்டத் தினை இந்நூலில் வரும் கட்டுரைகள் எடுத்துக் காட்டுகின்றன.

திருவாட்டி கலைவாணியிடம் காணப்படும் மிகச்சிறந்த புலமைப்பண்பு அவர் தொடர்ந்தும் புலமைத் தேடலுடைய ஒரு மாணவராக இருப்பதே. அது இந்த நூலில் நன்கு தெரிகிறது. இந்தப் புலமைத் தேடல் அவருக்கு மேலும் பல சிறப்புக்களை நல்குவதாக.

திருவும் சீரும் பொலிக

**கார்த்திகேசு சிவத்தம்பி**

***திகதி : 20.05.1997***

# வாழ்த்துரை

**பேராசிரியர். கலாநிதி. அ. சண்முகதாஸ்**
**பீடாதிபதி/கலைப்பீடம், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்**
**திருநெல்வேலி, யாழ்ப்பாணம்.**

திருமதி கலைவாணி இராமநாதன் நீண்டகாலமாகச் சைவசித்தாந்தச் சிந்தனையுடையவராயுள்ளார். இவர் சைவசித்தாந்தத்தை ஆய்வு நெறியாகவும், பயில் நெறியாகவும் கொள்வது மட்டுமன்றி வாழ்வு நெறியாகவும் கொள்ள வேண்டுமென்ற எண்ணமுடையவர். அவர் கற்பித்தலில் இருபது வருடங்கட்கு மேலான அனுபவமுடையவர். பல்கலைக்கழக முது நிலை விரிவுரையாளர் என்ற வகையிலே ஆய்வு நெறியாகச் சைவ சித்தாந்தத்தை நோக்க வேண்டிய ஒரு துறைசார் தேவை இவருக்குண்டு இந்த வகையிலே இவர் சைவசித்தாந்தம், இந்து சமய விழுமியங்கள் தொடர்பாக எழுதிய கட்டுரைகளின் தொகுப்பாகச் 'சைவசித்தாந்தத்தில் ஒழுக்கவியல் அடிப்படைகள்' என்னும் இந்நூல் அமைகின்றது.

எங்கள் கலைப்பீடத்தைச் சார்ந்த ஆசிரியர்கள் கற்பித்தல் மாத்திரமன்றி ஆய்வு செய்து கட்டுரைகள், நூல்கள் வெளியிடுவதிலும் ஆர்வமுடையவர்களாயிருக்க வேண்டும் இந்த முறையில் திருமதி கலைவாணி இராமநாதனின் நூல் வரவேற்கத்தக்கது இளம் விரிவுரை யாளர்கள் ஆய்விலே ஈடுபடுதற்கு இத்தகைய வெளியீடுகள் உந்து சக்தி களாக அமையுமென நம்புகிறேன்.

இந்நூலுக்கு இச்சிறிய வாழ்த்துரையை எழுதுவதில் மிகுந்த மகிழ்ச்சிடைகிறேன்.

நூல் பலருக்கும் பயன்படத் தக்கதாயமைய வேண்டுமென வாழ்த்துகிறேன்.

பேராசிரியர். கலாநிதி.
**அ. சண்முகதாஸ்**

திகதி : 24.05.1997

# என்னுரை

சைவசித்தாந்தத்திலே அறநெறி சார்ந்த ஒழுக்கவியலையும் சமூகவியலையும் பிரித்து நோக்குவது கடினம். ஒரு சிறந்த மனித விழுமியங்களைக் கொண்ட சமுதாயத்தின் அதியுன்னத பரிமாணமே அதன் அறவியல் வெளிப்பாடாகத்தான் இருக்க முடியும். சைவசித்தாந்த அறநோக்கின் அத்திவாரமே மனித நேயப்பண்புகளை மக்களிடையே ஊக்குவித்து வளர்த்தெடுக்கும் பணியிலே தன்னை அர்ப்பணிப்பதாகும். ஆயினும் சமுதாய வாழ்விலே அவற்றினை நடைமுறைப்படுத்துவதிலே நமது சமய அமைப்பின்கண் பல பின்னடைவுகள் இருப்பதனை மறுக்கமுடியாது.

சமயக் கல்வியின் அடிப்படைகள் சமூகசேவையையும் உயிரிரக்கத்தினையும் உள்ளடக்கியதாக இருக்கவேண்டும். கல்வியும் ஒழுக்கமும் இணைத்திருப்பதே மானிட சமூகத்தின் உயர் நிலை மனிதத்துவ மெனலாம். 'கடமையைச் செய்வதும் அறம்' என்பது இந்து சமய நூல்களின் உட்பொருளாக விளங்குகின்றது.

அறத்தின் மேலாணையை (Ethical law) விளங்கிக் கொள்ளும் ஒரு பகுதியாகவே சைவசித்தாந்தத்திலே ஒழுக்கவியல் மார்க்கங்களும் அமைக்கப்பட்டுள்ளன. தற்காலக் கல்வி முறையிலே ஒழுக்கக்கல்வியின் அழுத்தம் குறைந்துள்ளதால் ஆசிரிய மாணவ உறவுகள் சீர்குலைய இதுவும் ஒரு காரணம் எனப் பெரியோர்வேதனை அடைகின்றனர். ஞானம் அல்லது அறியும் நெறி என்பது சித்தாந்தத்தில் வாழும் நெறி அல்லது வாழ்வியல் பற்றிய அளவை முறைகளையே கொண்டுள்ளதாகக் கூறலாம். சகல மக்களையும் உள்ளடக்கிய ஓர் சமயாதீத சன்மார்க்க நெறியாக சைவசித்தாந்தம் மலர வேண்டும் என்ற திருமந்திர நூலின் உட்பொருளே இந்நூலினதும் உயர் குறிக்கோளாகும்.

ஒழுக்கவியலுடன் கன்மக் கொள்கை இணைந்துள்ளதால் இந்நூலில் இடம் பெற்ற கட்டுரைகளில் பல இடங்களில் அது பற்றிய விமர்சனங்கள் அடிக்கடி இடம் பெறுவதும், சில மேற்கோள்கள் திரும்பத்திரும்ப வருவதும் தவிர்க்க முடியாத தாயிற்று அழுத்தம் கொடுக்க வேண்டிய விடயங்களை மீண்டும் மீண்டும் கூறுவதனால் அவைமேலும் விளக்கம் பெறும் என்பதும் அதற்கு ஓர் காரண மெனலாம்.

இந்து நாகரிகத்துறையைச் சார்ந்திருப்பதனால் சுயமதத்தேடல், அதன் ஆழம், அகலம் பற்றிய ஆய்வு எமது துறையின் முதற் தேவையாகும். அத் தேவைகட்கு முதன்மையளிக்கும் கடப்பாடும் எனக்குண்டு. அவற்றினை உள்ளடக்கியதாகவே இந்நூலாக்கம் அமைகின்றது. இந்தநூலில் இடம் பெற்ற கட்டுரையாக்கங்கள் ஏலவே சில சஞ்சிகைகளில் வெளிவந்தவை; சில யாழ்ப்பாணப் பல்கலைக்கழக ஆய்வரங்கு, சைவசித்தாந்தக் கருத்தரங்குகள் என்பனவற்றிலே வாசித்தளிக்கப்பட்டவை. இந்து சமயம் என்றாலும் சைவசமயம் என்றாலும் ஒரு மரபினைச் சுட்டும். இரண்டினது அடிப்படை நோக்கமும் ஒன்றே யாதலால்; இந்து சமயம் சைவ சித்தாந்தம் சார்ந்த கட்டுரைகள் ஒன்றாக இந்துநூலில் இடம் பெற்றுள்ளன.

அனைத்துக் கட்டுரைகளினதும் பொது இலக்கு; ஒழுக்கவியல்-மனித விழுமியங்கள் இணைந்த 'அறவியற்சார்பு நிலையாதலால்-அனைத்தையும் ஒரு நூல்வடிவில் வெளியிடத் துணிந்தோம். கிரியைகளும் சடங்குகளும் அன்றாட வாழ்விலே மக்களிற்கு ஆன்மீகப் பயிற்சியளிக்கும் சில சாதனங்களாக அமைந்துள்ளன ஆகவே வெறும் புறப்பூசைகளுடன் மட்டும் நின்றுவிடாது ஆன்மீக வாழ்வையும் விருத்தியுறச் செய்வதுடன் அவை சமய பாலபாடத்தி லிருந்து தத்துவ ஞான உயர் வகுப்பிற்கு மக்களையிட்டுச் செல்லும் ஒரு வாகனமாகவும் பயன்படவேண்டும். இத்தகைய சைவசித்தாந்த நோக்கினை அவை எங்ஙனம் கற்பிக்க முயல்கின்றன என்பதனை ஆராயும் ஓர் கண்ணோட்டம் இந்த நூல் எனக்கூறினும் பொருந்தும், ஒழுக்கம், அறம், தருமம், நீதி என்பவற்றுக்கிடையிலான கருத்துச் சிக்கல்கள் சில இடங்களில் எழுவதும் இயல்பே, உயர் வகுப்பு, பல்கலை மாணவர்கட்கும் எளிதில் விளங்கும் பொருட்டு இயன்ற வரை கலைச்சொற்கள் தவிர்க்கப்பட்டதுடன் எளிமையாக எடுத்த பொருளை விளக்க முயன்றுள்ளேன். அறிஞர் பெருமக்கள் இந்நூலின் கண்ணுள்ள குறைநிறைகளைச் சுட்டிக்காட்டினால் மனமுவந்து ஏற்றுப் பரிசீலிப்பேன்.

இந்நூற் கருத்துக்களில் சைவசித்தாந்த சமூகவியல் அடிப்படைகளைத் தெளிவுபடுத்தும் முயற்சியே முக்கியம் பெற்றுள்ளதெலாம். இத்தகைய சமூக சமய சிந்தனை மரபானது இனிவரும் அறிஞர்களை மேலும் ஆழமாகச் சிந்திக்கத் தூண்டுதற்கு இந்நூலிற் காணும் கருத்துக்கள், சிந்தனைகள் உந்து சக்தியாக இருக்குமானால் அதுவே பெரும் பயன்தரும் மகிழ்வாகும்.

இறுதியாக அனைவருக்கும் நன்றியுரைப்பது என் தலையாய கடமையாகும், இந்நூலிற்கு மனமுவந்து ஆசியுரை வழங்கிய இராமகிருஷ்ணமிஷன் தலைவர் தவத்திரு ஆத்மகனாநந்தா சுவாம்ஜி அவர்கட்கு முதற்கண் நன்றியுடன் கூடிய வணக்கங்களைச் சமர்ப்பிக்கின்றறேன் சுவாம்ஜி அவர்களை சென்று நான் சந்திக்கும் போதெல்லாம் இவ்விதமான ஒழுக்க நியமங்களை யாவருமறியும்படி எழுதி வரவேண்டுமென அடிக்கடி ஊக்கப்படுத்துவார் அவர்கட்கு மீண்டும் எனது நன்றிகள் பல எங்கள் கலைப்பீடாதிபதி பேராசிரியர் கலாநிதி அ. சண்முகதாஸ் அவர்கள் பல்வேறு வேலைகட்கு மத்தியிலும் கேட்டவுடன் இந் நூலிற்கு வாழ்த்துரை வழங்கினார்கள். பீடாதிபதியவர்கட்கு எம் மனப்பூர்வமான நன்றிகளைத் தெரிவித்துக் கிறேன்.

எங்களுடைய சிரேஷ்ட பேராசிரியர் கலாநிதி க. சிவத்தம்பி அவர்களும் இந்நூலிற்கு ஓர் வாழ்த்துரை தந்துதவினார்கள், பேராசிரியர் அவர்கட்கும் எமது நன்றிகள் உரித்தாகட்டும். வழக்கம் போல இந்நூலாக்கத்திற்கு எனது கணவர் டாக்டர் பொ. இராமநாதன் அவர்களின் ஒத்துழைப்பும் ஆதரவும் சொல்லும் தரமன்று. பல வழிகலும் தனது அலுவல்களையும் பொருட்படுத்தாது என்றும் என்னை இத்துறையில் ஊக்கப்படுத்திவரும் என் கணவரது பங்களிப்பினையும் நன்றியுடன் நினைவு கூருகிறேன்.

இந்த நூலினை நன்கு அச்சேற்றி உதவிய அச்சக உரிமையாளர் திரு. ந. குருபரன் அவர்கட்கும், அச்சக உதவியாளர்கட்கும், நூலின் பக்கவடிவமைப்பிலே பெரிதும் உதவிய திரு.விஜய.கிருபாகர் அவர்கட்கும் எனது மனமார்ந்த நன்றிகளைக் கூறுகின்றேன். இந் நூலினை முழுவதுமாக நிறைவு செய்ய என்றும்போல் பெருங்கருணைபுரிந்தவரும் எனது சத் குரு. சிவகுருநாதனையும் வணங்கிக் போற்றுதல் செய்கிறேன்.

இந்துநாகரிகத்துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்,
திகதி : 23.05.1997

**கலைவாணி இராமநாதன்**

# திருமந்திரம் காட்டும் மனித நேயம்

சங்கத் தமிழ் நூல்கள் காதலையும் போரையும் பாடின. சங்ககாலத்தை அடுத்தெழுந்த பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள் அறத்தையும் பாடின. அத்தகைய அறநூல்கள் எழுந்த காலமாகிய கி.பி. 4 ம்-6 ம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்திலேயே திருமந்திரம் எழுதப்பட்டதாக ஆய்வாளர் கருதுவர். சித்தாந்த நூல்கள், தோத்திர நூல்கள், சாத்திர நூல்கள் என இருவகையாக நோக்கப்படும். திருமந்திரம் அந்த இருவகை அமைப்பிலும் அடங்கும் சிறப்பு வாய்ந்ததாகும் களப்பிரர் காலப் பகுதியில் எழுந்த திருமந்திரம் தத்துவ நூலாகமட்டுமல்ல-அற நூல் வரிசையிலும் வைத்தெண்ணப்படும் தகுதிவாய்ந்ததாக உள்ளது. திருமந்திரத்திலே பொதுப்பாயிரம், சிறப்புப் பாயிரம் எனவரும் பகுதிகளில் உலகம் தழுவிய மக்கள் வாழ்க்கை நலமும், சமூகநீதிகளும், தருமத்தின் சிறப்பும் விதந்துரைக்கப்பட்டுள்ளன.

## அன்பு நெறி

திருமந்திரம் பற்றியும் அதன் ஆசிரியர் திருமூலர் பற்றியும் விரிவான ஆய்வுகள் இன்னும் வெளிவர இடமுண்டு. துடிசைகிழார், அ.சிதம்பரனார், மா.இராசமாணிக்கனார், இரா. மணிவாசகம், சுத்தானந்த பாரதியார் போன்றோர் தமிழில் இந்நூல் பற்றி சில ஆய்வுகள் நடத்தியுள்ளனர். திருமந்திரம் பத்தாம் திருமுறையாகச் சைவத்திருமுறை வரிசையில் இடம் பெற்றுள்ளது. இந்நூலின் கண் உள்ள முதலாம் தந்திரமானது 166 பாடல்களைக் கொண்டது. இப்பகுதி முழுவதிலும் அறத்தின் இயல்புகளும் மனிதநேயத்தின் சிறப்புகளும் நயம்பட உரைக்கப்பட்டுள்ளன. அற அடிப்படைகள் முப்பொருள் உண்மைகளை மையமாகக் கொண்டவை எனலாம். இறைவன், உலகம், உயிர்கள் போன்ற அடிப்படைப் பொருட்களில் முதற்கண் நம்பிக்கை வைத்து ஒழுகுதல், அடுத்ததாக ஒவ்வொரு மனிதரும் இறைமையினைத் தம்மிடத்திலேயே விசுவாசித்து சகல உயிர்களிடத்தும், இயற்கைப் பொருள்களிடத்தும் அன்பு செலுத்துதலுமாகும். அன்புணர்வினைப் பேணும் சமூகமானது அவற்றின் ஆரம்பமாகத் தெய்வத்தை நம்புதல், கீழ்ப்படிதல், பிறர்க்குதவுதல், அன்பு செலுத்துதல், வேற்றுமை பாராட்டாதிருத்தல், கொல்லாமை, பிறன்மனை நயவாமை போன்ற ஒழுக்கங்களைப் பேணுவதும் அவசியம் எனப்பட்டது.

'திருநெறிய தமிழ்' எனச் சம்பந்தரால் சிறப்பிக்கப்பட்ட தமிழிலே உருவாக்கப்பட்ட நூல் திருமந்திரம், ஆதலால் 'மூலன் உரைசெய் மூவாயிரம் தமிழ்' எனவும், 'தமிழ் மூவாயிரம்' எனவும் இந்நூல் போற்றப்படும். 'என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே' என்றார் திருமூலர் இந்நூலுக்குத் திருமந்திரமாலை, தமிழ் வேதாகமம் என்ற சிறப்புப் பெயர்களும் உண்டு.

''திருக்கோவில் செல்வார் திருமந்திர நூல்
உருக்கமுடன் கொண்டு சென்றோதில்
பெருக்க அருள் முதலாம் ஐந்தும்.....
......அருள்வான் முக்கண்ணன்''

என அப்பர் சுவாமிகளும் திருமந்திரம் ஓதுவார் பலன்களை எடுத்துக்காட்டினார். எனவே அப்பர் சுவாமிகள் காலத்திற்கு முற்பட்டது திருமந்திரம் என்பதும் புலப்படும்.

''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளர்ந்த
மறை மொழி தானே மந்திரம் '' (தொல்காப்பியம்)

என்பதற்கமைய திருமந்திரமானது மறைமொழிகள் பலவற்றைத் தம்முள் கொண்ட பரமனது திருவருள் ரகசியங்களை மறைபொருளாகக் கொண்டுள்ளது. 'மறை' என்றால் பக்குவமற்ற மாந்தர்கட்கு எட்டாவண்ணம் புனிதமான சில விடயங்களை தன்னகத்தே மறைத்து வைத்திருத்தல்' எனப்பொருள் கொள்ளலாம். நிறைமொழி மாந்தருள் ஒருவரான திருமூலர் என்னும் சித்தரால் திருமந்திரத்திலே அனேகமான ஆன்மீகரகசியங்கள் மனிதநேயமிக்க மனிதர்கள் சிந்தனைக்கு வைக்கப்பட்டுள்ளன.

கடவுளைக் காணமுயல்பவர்கள் பக்தர்கள் எனில் - கடவுளைக் கண்டு தெளிந்தவர்கள் சித்தர்கள் எனலாம். சித்தர்போக்கு சிவன் போக்கு என்றவாறு அன்பு நிலை ஒன்றே அவர்களது உயர்ந்தகோட்பாடாகவுள்ளது. உயிர்களிடத்துறையும் பரம் பொருள் ஒன்று அது அன்பெனும் வடிவமானது-மனிதர்கள் அனைவரும் ஒருவரை ஒருவர் நேசித்தல் என்பது சிவப்பொருளை நேசித்தல் என்பதே. அதனை,



''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலர்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலர்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே''

எனத் திருமூலர் அருமையாக எடுத்துரைத்தார். 'சித்தமலர் ஏத்தும் பரமன் பழையனூர் மேவிய அத்தன்' என்றார் சுந்தரர். அன்பு, மானிடத்துவம், சமத்துவம், சகோதரத்துவம் என்பவற்றினை எடுத்துரைக்கும் காலத்தால் முற்பட்ட அரும்நூல்களில் தலையாயது திருமந்திரமாகும். அன்புசெலுத்தலாவது அனைவரையும் சமநோக்குடன் நேசிப்பது, அறவழிக்குத் தீங்கு நேரும் போது அஞ்சாமையுடன் எடுத்துரைப்பது, தருமமே இறைமை என எண்ணிப் பிறர்க்குதவுதல், சமுதாய சேவையே வழிபாடு என உணர்ந்து இவற்றினை நடைமுறையிலே பின்பற்றியொழுகுதல் இவையே அன்பின் பரிமாணங்கள் என உணரப்பெறுவதே உன்னதமான சமயநெறி எனத் திருமந்திரம் போதிக்கின்றது. குறிப்பாக இந்நூலின் இரண்டாம் தந்திரம் இரு நூற்றியெட்டுத் திருப்பாடல்களில் கல்வியறிவு, கல்லாமை, பொருள் தேடல் பற்றியும், முன்னூறு பாடல்களையுடைய மூன்றாம் தந்திரத்தில் இறைவன் இறைவி என்பதனை ஒத்த இல்வாழ்வென்னும் தவநிலையும், ஆறாம் தந்திரத்தில் சற்குரு துணையும், ஏழாம் தந்திரமானது உடலுக்கும் உள்ளத்திற்கும் ஆரோக்கியமும், ஆன்ம பலமும் புத்துணர்ச்சியும் வழங்கும் யோகப்பயிற்சி பற்றிய செய்திகளையும் நிறையவே கொண்டுள்ளன. இத்தகைய சிந்தனைகளினூடாகத் திருமந்திரம் மனிதநேயம் பற்றிய பல்வேறு கருத்துக்களையும் வாழ்க்கைமுறைக்குத் தேவையான பல பண்புகளையும் உலகினர்க்கு உணர்த்தி இருக்கின்றதெனக் கூறலாம்.

## அறநெறி ஆட்சி

சகல மனிதர்களிடத்தும் அன்பு செலுத்துவதுடன் எல்லாருக்கும் எல்லாம் கிடைக்கும் வகையில் அன்றாட வாழ்வினை எவ்வாறு அமைக்கலாம் என்பதற்குப் பின்வருமாறு திருமந்திரம் அறிவுரை வழங்குகின்றது:-

''யாவர்க்குமாம் இறைவற் கொருபச்சிலை
யாவர்க்குமாம் பசுவிற்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும்போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரை தானே''

என்ற நியதியிலே ஒவ்வொருவரும் வாழ்ந்து வருவாராகில் உலகில் இல்லாமை என்பதே இல்லாத நிலை தோன்றிவிடும். அதனால் திருமூலர் தன்னைப்போலப் பிறரையும் நேசித்தல் அவசியம் என்பதனை;

''யான் பெற்ற இன்பம்-பெறுக இவ்வையகம் ''

எனவும் வாழ்த்தினார். இவ்வாறே 'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவேயல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே' என இக் கருத்தினைத் தாயுமானாரும் வலியுறுத்தினார். இத்தகைய நோக்கமே சம்பந்தர் சுவாமிகளாலும் ''வையகமும் துயர் தீர்கவே'' என்று தேவாரப்பதிகங்களிலும் ஓங்கி ஒலித்தது.

இவ்வாறு திருநெறிய சிவநெறியின் மனிதமேம்பாட்டு சிந்தனைகள் காலம் தோறும் வெளிப்படுத்தப்பட்டு வந்துள்ளன. கச்சியப்பசுவாமிகளும் நாட்டிலே நல்லாட்சியும் அறநெறியும் சிறந்து விளங்கினால் மக்கள் நலமடைந்து இன்புறுவர் என்பதனை

''குறைவிலாது உயிர்கள் வாழ்க,
நான்மறை அறங்கள் ஓங்க''

என முறைப்படி எடுத்துரைத்தார். கோன்முறை அரசு செய்தாலே அறம் வளரும் பாவம் தேயும். அறவழி நில்லாது ஆண்டவனை நினைவினிற் கொள்ளாது மருள் வழி ஒழுகும் மன்னனால் நாட்டிற்கும் சமூகத்திற்கும் பெரும்கேடு விளையும்- அத்தகைய அரசன் பல கற்றும் கல்லாதவர்க்கே சமமாவான், கல்லா அரசனைக் காட்டிலும் முறைமை வழுவாத காலன் மிக நல்லவன் என்பதனைத் திருமந்திரம்;

''கல்லா அரசனும் காலனும் நேரொப்பர்
கல்லா அரசனில் காலன் மிக நல்லன்''

எனக்கூறியது. ஔவையாரும் 'கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டிலும் - கடும் புலி வாழும் காடு நன்றே' என்று கூறியதும் இங்கு நோக்கத்தக்கது.



''முறை செய்து காக்கும் மன்னவன் -மக்கட்கு
இறை என்று வைக்கப்படும் ''

என்றார் திருவள்ளுவர்.

## இயற்கையைப் பேணுதல்

நல்லாட்சி முறையின் அவசியமும், அவற்றினை வழங்குவதற் குப் பொருட் பெருக்கத்தின் தேவைகளும் அவசியம் என்பது மேற்கூறியவற்றால் அறியலாம். தற்காலத்திலே காடழிக்கப்படுத லும்-இயற்கை மாசடைதலும் பல இன்னல்களை தோற்று விக்கின் றன. இவையெலாம் மரம்நடுவோம், காடு வளர்ப்போம், மழை வளம் பெறுவோம், சுத்தமான காற்றினால் சுகாதார வாழ்வை அமைப்போம் என்றிவ்வாறு இயற்கை வளத்தைப் பெருக்கும் முயற்சிகளை ஊக்குவிப்பதவசியம் என்பன போன்ற ஆரோக்கிய சிந்தனைகள் திருமந்திரம் எழுந்த காலத்திலும் ஓங்கி ஒலிக்கப்பட் டன. இருக்கருத்தானது;

''அமுதூறும் மாமழையும் நீரதனாலே
அமுதூறும் பனைமரம்.....கமுகு தெங்கு கரும்பொடு வாழை
......பார்மிசை தோற்றும்''

என்னும்படி மரங்கள் கற்பகதரு எனத் திருமந்திரம் கூறியது. அனைத்து நாடுகளிலுமுள்ள மக்கள் சமாதானம் பேசுகிறார்கள். ஆனால் அவர்களது செயல்கள் பேச்சுக்கு மாறாக உள்ளன. அவர்கள் ஒருவகையில் சமாதானம் பேசுகிறார்கள். மறு கையில் அணுகு ண்டை வைத்திருக்கின்றார்கள். முழு உலகமும் சூழல் மாசடை வதாக அலறுகிறது. நட்சத்திரப் போர் பற்றிய பேச்சு விண்வெ ளியை மாசுபடுத்தற்கான பயமுறுத்தலாகின்றது. அன்பும் சமாதானமும் முதலிலே மனித மனங்களிலே விதைக்கப்பட வேண்டும். நல்லொழுக்கம் என்னும் நீரூற்றி அதனை வளர்க்க வேண்டும். மனித மனங்கள் வெறும் காடும் முட்களும் நிறைந்த பற்றைகளாக இருப்பதனை மாற்ற வேண்டும். அப்போது தான் இயற்கை நியதிகளைப் பேணிக் காக்கும் பக்குவம் வளர முடியும் என்பது திருமந்திரம் போன்ற நூல்களின் உட்பொருளாகும்.

## கல்வி பற்றிய சிந்தனை:

கல்வி பற்றிய சமுதாய சிந்தனைக் கருவூலமும் திருமந்திரத் திலே உண்டு. ஒழுக்கக் கல்வியும் ஆன்மீகக் கல்வியும் மனிதனைச் சுயகட்டுப்பாட்டுடன் முறையான வாழ்வு வாழ வழிவகுக்கும். வறியவர்கட்கு உதவாத கல்வி - அதைக் கல்வி என்று சொல்லலாமா என்றார் விவேகானந்தர். சுய கட்டுப்பாட்டைப் போதிக்காத கல்வி - அது கல்வி என்றே குறிப்பிடத்தகுதியற்றது என்றார் பகவான் சத்தியசாயி பாபா.

'கற்றும் சிவஞான மில்லாக் கலதிகள்
சுற்றமும் வீடார் துரிசறார் மூடர்கள்....
கற்ற அன்பில் நிற்போர் கணக் கறிந்தார்களே'

என்றது திருமந்திரம். கல்வி கற்றவர் இதயத்திலிருந்து பிறரிடம் பரிவும் அன்பும் தானே சுரக்க வேண்டும். கற்ற பின் அன்பில் நிலை பெற்றவர்களே முறைமை அறிந்து வாழ்பவர்கள். ஏனையோர் என்ன கற்றும் கல்லாத மூடர்களே என்பது சித்தர் திருமூலர் உள்ளக் கருத்தாகும். சமூக சேவையே கல்வி முறையின் அத்திவாரமாக அமைய வேண்டும். கல்வியும் ஒழுக்கமும் சேர்ந்திருக்க வேண்டும் என்பதனை உணர்த்தவே 'வேதம் உரைத்தானும் வேதியன் ஆகான்' எனத் திருமூலர் விளக்கினார்.

''இன்றைய கல்வி முறையானது உள்ளத்தை புத்தக உள்ளடக்கத்தால் நிரப்புவதும் பரீட்சை மண்டபத்தில் அவற்றினை வெளியேற்றிவிடுதலும் பின்னர் வெற்று உள்ளத்தோடு வீடு திரும்புவதுமாக அமைகிறது. உண் மைக்கல்வி உள்ளத்தைப் பண்படுத்துவதனைத் தன்ன கத்தே கொண்டுள்ளது. நீங்கள் கற்பவை முழுமையாக இருப்பதற்குரிய பூரணத்தின் ஒரு பகுதியாக இருக்க வேண்டும்''

என மனிதமேம்பாட்டுக் கல்வி விழுமியம் பற்றி சாயிபகவானும் விளக்கியுள்ளார்.

அப்பொழுதே ஒருவன் மனநிறைவுடன் கூடிய சிந்தனையிலும் சொல்லிலும் செயலிலும் முழுமையான அசைவை ஏற்படுத்த முடியும். அத்தகைய முழுமையைக் கொண்ட மனிதர்களே



இன்றைய நாட்டின் தேவையாகும். இதுவே;

''கற்பன கற்று கலைமன்னு மெய்யோகம்
முற்பதஞானம் முறைமுறை நண்ணியே
சொற்பத மேவி துரி சற்றுமேலான
நற்பதம் கண்டுளோர் சைவ சித்தாந்தரே''

என்னும் திருமந்திர உண்மையுமாகும். எனவே கல்வியானது பண் பாளர்களை உருவாக்க வேண்டுமேதவிரப் - பணக்காரர்களை அல்ல வாம். பொருளாசை மனிதனுக்கு இருக்க வேண்டும். முன்னேற்றத் திற்குப் பொருள் இன்றியமையாததே. 'பொருளில்லார்க்கு இவ்வுல கமில்லை' என்பதும் ஞானிகளின் கணிப்பீடுதான். ஆனால் பொரு ளாசை தன்னையும் பிறரை அழிக்கும் பேராசையாக மாறக்கூடாது.

''மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசை செல்லும் கலம்போல''

என்றும், ஆதலால் உடனுக்குடன் அறம் செய்ய வேண்டும், அப்ப டிச் செய்யாதார் செல்வம்,

''எட்டிபழுத்த இருங்கனி வீழ்ந்தன்ன
ஒட்டிய நல்லறம் செய்யாதார் செல்வம்''

என்பதனை உணர வேண்டும் எனவும் திருமூலர் கூறினார்.

## பொருட் செல்வமும் அற வாழ்வும்;

கிடைக்கின்ற பொருட்செல்வமானது அறச் செல்வத்தை வளர்க்க அனுசரணையாக அமைய வேண்டும் என்பதே திருமந் திரத்தின் இலட்சியம் எனலாம்,

''ஆர்க்கும் இடுமின் அவர் இவர் என்னன்மின்
பார்த்திருந்துண்மின் பழம்பொருள் போற்றுமின்
........................................................
காக்கை கரைந்துண்ணும் காலம் அறிமினே''

என்றவாறு எள் எனினும் ஏழாகப் பகிர்ந்துண்பது போன்ற இரக்க மும், தயையும் காக்கையிடமிருந்து ஒற்றுமை உணர்வையும் மனிதர்கள் கற்றுக்கொள்ள வேண்டும் என்றார் திருமூலர். அதனால்

''அவ்வியம்பேசி அறம் கெட நில்லன்மின்
வெவ்வியனாகி பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்வியனாகி சிறந்துண்ணும்போது
நவ்வி கொடுமின் தலைப்பட்டபோதே''

என்றபடி துன்பம் செய்து அறமுறை வழுவுமாறு நிற்க வேண்டாம். பேராசை கொண்டு பிறர் பொருள்விரும்ப வேண்டாம். எல்லா வகையிலும் நற்பண்புடையராகி உண்ணும்போது வருவோர்க்கும் ஒருகை உணவு கொடுத்து ஆதரிக்க வேண்டும் என்ற திருமந்திரக் கருத்து பாரதியாரையும் கவர்ந்தது;

''வேதவானில் விளங்கி அறம் செய்மின்
சாதல்நேரினும் சத்தியம் பூணுமின்
தீதகற்றுமின்.... .... ....''

என்ற திருமூலர் கருத்தானது ''தனி ஒருவனுக்குணவில்லை எனில் ஜகத்தை அழித்திடுவோம்'' என்ற பாரதி பாடலாகவும் மலர்ந்த தெனலாம். பசித்தீயின் கொடுமையே சகல பாவங்களையும் விதைக்கிறது. 'மானம், குலம், கல்வி, தாளாண்மை, வண்மை, புகழ் முதலிய பத்தும் பசிவந்திடப் பறந்து போகும் என்றார் ஒளவையார். ஆதலால் தானங்களிற் சிறந்தது 'அன்னதானம்' என்றா யிற்று. இவ்வாறு இரக்கம், அன்பு, கருணை என்பன மனிதரிடம் மேம்பட்டு விளங்கினால் வறுமையும் பிணியும் அகலும் எனத் திருமூலரும் விளக்கினார்.

## சகலரும் சமத்துவம்

சாதி, குலம் என்பதும் மனிதர் செய்த சதி என்பதே சித்தர் கொள்கை ஆகும். பிறப்பினால் உயர்வு தாழ்வு வருவதில்லை. மனிதரது செயல்களே அவர்களது உயர்வினை நிர்ணயிக்கின்றன. அதனால் தெய்வமும் ஒன்று அத்தெய்வத்தின் முன் சகல மாந்தரும் ஒன்று தான் என்ற உண்மையினைத் திருமந்திரம்;

''ஒன்றே குலம் ஒருவனே தேவன்
நன்றே நினைமின் நமனில்லை நாளுமே''

என மனித சமத்துவத்தின் உயர்வினை எடுத்துக்காட்டியது. 'ஒன் றென்றிரு தெய்வம் உண்டென்றிரு' என்றார் பட்டினத்தார். 'நட்ட



கல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்' என்பது சிவவாக்கியர் போதனை. 'உள்ளக் கமலமடி உத்தமனார் வேண்டுவது' என விபு லானந்த அடிகளும் விளம்பினார். 'தெய்வம் பலப்பல சொல்லிப் பகைத்தீயை வளர்ப்பவர் மூடர் ' என்றார் பாரதியார். திருமூலரும்,

''உள்ளம் பெரும் கோயில், ஊனுடம்பு ஆலயம்.....
தெள்ளத்தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்''

என இயம்பினார். 'ஈசன் எனக் கருதி எல்லா உயிர்களையும் நேசத் தால் நீநினை' என்பது ஞானவெட்டியான் பாடலாகும். அன்பினால் உயிர்களை ஈசனின் அம்சம் என உணர்ந்து நேசிப்பதே உயர்ந்த தெய்வக்கொள்கை எனவும் சித்தர்கள் விளக்கினார்கள். அவர்களது மனிதநேயம் கடலை விட அகிலத்தைவிடப் பெரியது. வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடியவர் வள்ளலார். சாத்திரம், குலம், கோத்திரம், சடங்குகள், கடவுளர்கள் கோபம் என்ற போர்வையில் எல்லாம் போலிச் சமயவாதிகள் அப்பாவிமக்களை அறியாமை இருளில் அமிழ்த்துவதைத் திருமூலர் கண்டித்தார்.

'சாத்திரத்தைச் சுட்டெரித்தால்' அவனே சித்தன் என்றார் அகத்தியர். 'சாத்திரம் பேசும் சழுக்கர்காள் கோத்திரமும் குலமும் கொண்டென் செய்வீர்' என அப்பர் சுவாமிகளும் வினாவினார். அன்பும் சத்தியமுமே உண்மையான கடவுள் வீண் ஆரவாரமும், மூட நம்பிக்கைகளும் சாதி வேற்றுமைகளும் மக்களைக் கடவுளிடம் அழைத்துச் செல்லாதெனத் திருமூலர் போன்ற சித்தர்கள் அறிவுறுத்தினர். அதனால் கோபமடைந்த போலிச்சமயவாதிகள் சித்தர்களைக் கடவுள் மறுப்பார்கள் என மறுத்து விமர்சனம் செய்தனர்- அவமதித்தனர்- ஏளனம் செய்தனர். அன்பின் உயர் வினை அறியாத இத்தகையோரால் மனித சமூகம் சமயப்பிரிவு களால் பிளவுண்டு சமரசத்தின் பேராலேயே சமூக நீதி மறுக்கப் பட்டு மனிதநேயத்தையும் மதியாத அறிவிலிகளால் உண்மைச் சமய வாழ்வும் மனிதநேயமும் சிதறிப்போவதாயிற்று. இந்நிலையினைச் சித்தர்களே ஓரளவு சரியான சமயத்தில் தடுத்தாட்கொண்டனர் எனலாம். இவர்கட்கெல்லாம் திருமூலரும் ஒரு வழிகாட்டியாய் அமைந்தார்.

திருமூலரது சமயாதீதம் கடந்த மனிதநேய சகோதரத்துவமானது மக்கள் அனைவரையும் ஓர்குலமாக அன்பினால் பிணைப்பதாகும். அதனை

'மலமில்லை மாசில்லை மானாபிமானங்களில்லை.......
அன்பினில் பதித்து வைப்போர்க்கே''

என்னும் பாடலில் அழகுறத் திருமந்திரம் எடுத்துக் காட்டியது.

சமரச சன்மார்க்கம்

பொதுவாகச் சித்தர்கள் சமயம் கடந்த ஞானசமரச நிலையிலே நிற்பவர்களாவர். இவர்களது சமயம் 'சமரச சன்மார்க்கநெறி' எனலாம். இவர்கள் அனைவரும் 'வேதாந்த சித்தாந்தச் சமரசநிலை கண்ட வித்திகச் சித்தர் கணம்' எனப்படுவோராவர். அச் சமரசமார்க்கம் சிவ மார்க்கமே என்பதில் சித்தர்கள் அசையாத நம்பிக்கை கொண்டிருந் தாகள் அதனால் சைவசமயமே சித்தர்களது உயர் நெறி எனப்பட்டது. சிவநெறியும்-அதன் தூய அன்பு நெறியும் சித்தர்களது சித்தாந்தமாகக் கருதப்பட்ட முறைமையே திருமந்திரத்தில் 'சொற்பதமேவி துரிசற்று மேலான நற்பதம் கண்டுளோர் சைவசித்தாந்தரே, என உறுதி செய் யப்பட்டிருக்க வேண்டும்.,

''அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில்புகும் அரசே
அன்பெனும் வலைக்குட்படும் பரம் பொருளே
அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொளியே''

என அந்த அன்பின் அமுதத்தை வள்ளலார் போற்றினார். வாழ்வில் எப்போதோ ஒரு சமயத்திலே அறிவும் ஆற்றலும் ஒருவரைய றைக்குட்பட்டனவே என என்றோ ஒரு நாள் புலப்படும் போது அறிவு தோற்று விட்ட நிலையிலே ஆணவம் அழிகிறது. அன்பு வெல்கின்றது. அந்த பணிவான அன்பு நிலையிலே இறைமையின் தோற்றம் தெரிகின்றது. அதனாலேயே அன்புதான் இன்பஜோதி, அன்புதான் உலகமகாசக்தி எனப் புத்தபெருமானும் போற்றினார்.

அத்தகைய அன்பின் பரிமாற்றம் முதற்கண் இல்லறத்திலே கணவன் மனைவியர் உறவிலே மலர்கிறது. தாய்மையாகப் பின் பூரணத்துவம் அடைகிறது. 'தாயினும் இனிமையாகத் தண்ணருள் புரிவாய் போற்றி' என்றார் ஓர் முருகபக்தர். துறவியர் பலர் இல்ல றம் மேற்கொண்டமையினை பிறசமயத்தோர் சிலர் இழிவாக நோக்குவதுண்டு. துறவு என்பதன் பொருள் சரியாகப் புலப்படா மையே இந்நிலைக்குக் காரணம் எனலாம். துறவு என்பது காட்டுக்



குப் போவதல்ல. நாட்டில் இருந்து வீட்டுக்காகவும், மக்கட்காகவும், தேசத்திற்காகவும் உழைத்து அனைவர்க்கும் வழிகாட்டுவதுடன் - தன்னிடத்தேயுள்ள ஆசை, கோபம்,மதம், மாற்சரியம் (வெறுப்பு) போன்ற துர்க்குணங்களைத் துறப்பதும் ஒரு துறவேயாகும். அதுமட்டுமல்ல-அதர்மம், அநியாயம், அறியாமை, சமூக அநீதி ஆகியவற்றிற்கெதிராக அறக்குரல் எழுப்புவதும் மக்களிடையே சமத்துவம், சகோதரத்துவம் என்பவற்றை வளர்ப்பதுடனும் நில்லாது அவற்றிற்கு மாறான செயல்களைத் துறந்துவிடுவது எனவும் இதனைக் கூறலாம். இதன் சிறப்பினை,

''இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு''

எனத்திருக்குறள் விளக்கியுள்ளது. தத்தம் கடமைகளைச் சரிவர ஆற்றுவதே அறம் என்பதற்கு ஒரு அர்த்தமாகவுமுள்ளது 'கடமை யைச் செய் பலனில் உனக்கு அதிகாரமில்லை' எனக் கீதை சொல்வது யாதெனில் பலனை எதிர்பார்ப்பவன் பிறருக்கு பணி யாற்ற முடியாது. பலனைத் துறந்த செயலாக இருப்பின் அந்த ஒருவனால் அனைவருக்குமாக உழைக்க முடியும். இதனையே 'கடமை என்றால் மக்கட்குச் சேவை செய்தல்' என்பதே அதனுடைய முழுமையான அர்த்தமெனவும் புரிந்து கொள்ளலாம்.

சமுதாயத்திலே தனிமனிதனாகப் பிறந்து அதிலேயே வளருவ தால் சமூகத்தை விட்டு விலகி வாழ்வது இயலாத காரியம் எனலாம். சமூகமும் நலமுடன் இருந்தால் தான் குடும்பம் நலத்துடன் இருக்கும். குடும்பம் நலமுடன் இருந்தால் 'தான்' என்ற தனி நபரும் நலமுடன் இருக்கமுடியும். நன்றே நினை மின் நமனில்லை என்பதே திருமந்திரவாக்காகும்.

துறவிகளும் 'ஒருமையுள் ஆமைபோல் உள்ளைந்தடக்கி இருமையும் கண்டிருந்தார் புரையற்றே' எனத் துறவிகள் பெரு மைபேசினார் திருமூலர். மிக உயர்ந்த துறவிகள் ஆமைபோல எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் ஐம்புலன்களை அடக்கி அமைதி யைத் தேடிக் கொள்ளும் உயர்ந்த பக்குவம் பெற்றவர்களாவர். தனியாக இருந்தாலும் கூட்டத்திலே இருந்தாலும் மனதை நிலை நிறுத்தித் தியானத்தில் ஈடுபடும் மனதிட்பம் வாய்ந்தவர்கள் ஆதலால் இல்லறத்திலும் துறவு நிலையைக் கண்டு பாதுகாக்கவும்

அவர்களால் முடியும்.

ஆதலால் சமூக நலன் பேணுவதனையே திருமந்திரமும் உயர் லட்சியமாகக் கொண்டு தனது தத்துவக் கருத்துக்கள் வாயிலாக மிக உயர்வான உலகம் தழுவிய மனிதநேயம் மலர்வதற்கு எத்தகைய செயல்கள் அவசியம் என்பதனை அழகுற எடுத்து விளக்கியுள்ள தெனக் கூறுவது பொருத்தமானதே.

## உசாத்துணை நூல்கள்


1. திருமூலர், திருமந்திர விளக்கவுரை, பகுதி 1, 11, திருநெல் வேலி சைவசித்தாந்தக் கழக வெளியீடு, 1974.
2. திருமந்திர விளக்கம், சுவாமி சுத்தானந்த பாரதியார், சுத்தா நந்தப் பதிப்பகம், கொழும்பு, 1953.
3. சைவசமய வளர்ச்சி, டாக்டர் மா. இராசமாணிக்கனார், பாரி நிலையம், சென்னை 1972.

திருமந்திர காலம் பற்றி;

1. Origin and Early History of Saivaism, in south India C.V. Narayanaswami Iyer, University of Madras, 1936, p.213.
2. வேதபாரம் பரியமும் சைவசித்தாந்தமும், கலைவாணி இராமநாதன் ஸ்ரீ ரங்கா பிரிண்டர்ஸ் மதுரை, 1992.
3. திருமந்திரம், டாக்டர் இரமணசாஸ்திரி, முன்னுரை, பக்.5-8;
4. Saiva school of Hinduism, S. Sivapadasundaram, P. 19.




# இந்து சமயக் கிரியைகளின் அடிப்படையும், சைவசித்தாந்தக் கிரியை மரபும்

வாழ்வின் மேலான குறிக்கோள் விடுதலை அடைதல் என்பதே சான்றோரது கருத்தாகும். விடுதலை என்றால் 'சுதந்திரம்' எனவும் பொருள் கொள்ளப்படும். சமய நோக்கிலே பாசங்களினின்றும் விடுபடுதல், துன்பங்களினின்றும் விடுபடுதல், பற்றுக்களில் இருந்து விடுபடுதல்-விடுதலை அல்லது சுதந்திரம் அல்லது ''மோட்சம்'' எனப் பேசப்படும். எதுவாக இருந்தாலும் ஆன்ம சுதந்திரமே அவற்றின் உயர்நிலை இலட்சியமாகும். இவற்றினை ஒருமுகமாகச் சுருக்கிக் கூறுவதனால் அனைத்துச் செயல்களினின் றும் - அவற்றின் பலாபலன்களிலிருந்தும் ஒருவன் தன்னை முழுவ துமாக விலக்கிக் கொள்ளுதல் என்பதே அதன் தாற்பரியமாகின்றது. கருமமாற்றுதல், தொழிலாற்றுதல்; செயலாற்றுதல்; என்னும் சொற்கள் அனைத்தும் ஒரே பண்பினைச் சுட்டும் பல்வேறு சொற்களாகும். இவ்வகையிலே உண்பது, உடுப்பது, உறங்குவது, தொழில் செய்வது, நடப்பது, ஆடுவது, பாடுவது, சமைப்பது, கற்பது, எழுதுவது, வழிபடுவது, வரம் கேட்பது, வணங்குவது, விரதமிருப்பது, பூசை செய்வது, என்றின்னோரன்னவையெல்லாமே கிரியை (செயல்)களாகத்தான் இருக்கின்றன.

ஆயினும் பொதுவாகக் கோயில்களில் நடைபெறும் பூசைக ளும், விழாக்களும் இல்லங்களில் கொண்டாடப்படும் சடங்குக ளுமே கிரியைகள் என்னும் பொருளிலே நடைமுறையில் காணப்படுகின்றன. இல்லத்திலே நடைபெறுவன பூர்வக்கிரியை-அபரக்கிரியை எனவும் ஆலயங்களிலே நிகழ்வன நித்தியக்கிரியை நைமித்தியக்கிரியை எனவும், தனிமனிதன் ஒருவனால் ஆற்றப்படு வன காமியக்கிரியை நிஷ்காமியக் கிரியை எனவும் சமய நூல்ககள் பாகுபடுத்தியுள்ளன. நித்திய, நைமித்தியக் கிரியைகள் ஆன்மார்த் தம், பரார்த்தமாகவும் நடைபெறுவதுண்டு. தன் சொந்த ஆன்ம நலன்கட்காகச் செய்யப்படுபவை ஆன்மார்த்தக் கிரியைகள் எனவும். பிறரதும், சமூக நலன்கட்காகவும் செய்விக்கப்படுவன பரார்த்த கிரியைகள் எனவும் வழங்கப்படும். பூர்வக்கிரியைகள் என்பன இல்லங்களிலே நன்மைதரும் நிகழ்வுக்காக ஒவ்வொரு குடும்பத்த

வராலும் ஆற்றப்படுவனவாகும். இவற்றிலே திருமணம், குழந்தைப்பேறு, நாமகரணம், சாதககர்மம்,கேசம்குறைத்தல், அன்னப்பிராசனம், காதுகுத்தல், ஆண்டு நிறைவினைக் கொண்டாடுதல், வித்தியாரம்பம், பூப்படைதல், கிருகப்பிரவேசம் முதலியன இந்துக்களால் சிறப்பாக மேற்கொள்ளப்படும் பூர்வக்கிரியைகளாகும். வேதகால முதல் இவற்றின் ஆரம்பத்தைக் காணலாம்.

அபரக்கிரியையானது குடும்பத்திலே நடந்த துக்க நிகழ்வாக அமையும் இறந்தோருக்காக ஆற்றப்படும் கிரியைகளாகும். இவை ஒருவன் இறந்தபின் அன்னாரது ஆன்மசாந்திக்காக பிள்ளைகளாலும் உறவினராலும் நடத்தப்படும். அ-பரம் என்றால் பிந்தியது. அதாவது இறந்த பின்னால் செய்விக்கப்படுவது அ-பரம் எனவும் ஒருவிதத்தில் பொருள் கொள்வர். இவற்றிலே சரீரசுத்தி, ஆன்மசுத்தி என இருவகையுண்டு. சரீரசுத்தி என்பது அபிசேகமும், உத்திராந்தியும் சிவாக்கினி தகனமுமாகும். ஆன்ம சுத்தியில் அஸ்தி சஞ்சயனம், அந்தியேஷ்டி, சிரார்த்தம், தர்ப்பணம், மகாளயம், ஆண்டுத்திவசம் முதலிய கிரியைகள் முக்கிய இடம் பெறுகின்றன. இவ்வாறாகப் பெற்றோர்கள் பிள்ளைகளது வாழ்க்கை முன்னேற்றத்திற்காகவும், பிள்ளைகள் தமது பெற்றோர்கள் சாந்திக்காகவும், சந்தோஷத்திற்காகவும் ஆற்றப்பட வேண்டியவைகளே மேற்கூறப்பட்ட கிரியைகளின் உட்பொருளாகும் என்பதனை அனைவரும் உணரமுடியும்.

கிருஹம் என்பதும் வீடு என்பதும் ஒரு பொருள் தரும் இரு வேறு சொற்களாகும். கிரியைகளை ஆற்றுகின்ற இடம் கிருஹம், ஆதலால் புதிதாக வீடுகட்டிக் குடிபோகும் சடங்கு கிருகப்பிரவேசம் என ஆயிற்று. இந்துமதக் கிரியைகள் யாவுமே மனிதனானவன் ஆன்மீகம்; லௌகீகம் இரண்டிலுமே விரும்பிய பயன்களையும் உயர் நிலை அடைவிப்பதனை இலட்சியமாகக் கொண்டும் முன்னோர்களால் உருவாக்கிக் கொடுக்கப்பட்டனவாகும். உலகியல் வளர்ச்சியில் உயர்வினை அடைய வழிப்படுத்தும் இல்லறக் கிரியைகளைப் போன்று ஆன்மீகத்தில் மட்டுமன்றி உலகமக்கள் அனைவரின் உயர்வுக்கும், அமைதிக்கும், ஆன்ம சாந்திக்குமாக சான்றோர்களால் ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டவையே ஆலயக்கிரியைகளாகும். விடுதலையைத் தருவது வீடுபேறு எனபதனாற் போலும், சிற்றின்பங்களையே வழங்கிவரும் வீட்டிலிருந்தும், உலக இன்பங்களிலிருந்தும், குடும்பப் பந்தபாசங்களிலிருந்தும்



ஒவ்வொருவரும் தம்மை விடுவிப்பதுடன்; ஆன்ம விடுதலையடைவதனை இலக்காகக் கொண்டே ஆலயக்கிரியைகளையும் இந்து மதம் பேரின்ப வீட்டு நெறியினைச் சேர்ப்பிக்கும் ஒரு மார்க்கமாக அறிமுகப்படுத்தியிருக்கின்றது.

இந்தவகையிலே வேதநூல்களும், சிவாகமங்களும் கிரியை மரபுகள் பற்றியறிவதற்குப் பெரிதும் துணைபுரிவனவாக உள்ளன. இன்று நடைமுறையிலுள்ள திருக்கோயிற் கிரியைகளிற் பல வேதமரபு, சைவமரபு சார்ந்தவையாகத் திகழ்கின்றன. இயற்கை சக்திகளைத் தெய்வீக நிலைப்படுத்தி வழிபடும் பொருட்டு வேதநூல்கள் யாகக்கிரியை, அக்னிவழிபாடு, படையல் போன்றவற்றை எடுத்துக்காட்டியுள்ளன.யாகத்திலே உரிய தெய்வங்களைக் கூவியழைத்து அக்கடவுளர்க்குரிய அவிர்பாகங்களை அக்கினிமூலம் வழங்குவதே இதன் முக்கிய அம்சமாகும். அக்கினியே வழிபடுவோனையும் தெய்வத்தையும் இணைக்கும் பாலமாக விளங்கியது. அக்கினியிலே போடப்படும் தானியங்கள் பால், தயிர், நெய் முதலிய அபிஷேகப் பொருட்களை அக்கினி தேவன் மேலெடுத்துச் சென்று தெய்வங்களிடம் சேர்ப்பிப்பது மட்டுமன்றி, பின் அவ்வவ் மக்கட்குரிய பலன்களையும் கீழிருந்து பூவுலகத்தோருக்குச் சேர்ப்பிப்பதாக நம்பப்பட்டது. அதனால் அக்கினியைத் தேவதூதனாக வழிபடும் மரபு பூவுலகிலே நிலை பெறலாயிற்று. அக்கினி ஒளி வடிவமானது என்பதால் அது தீயவைகளை எரித்து அழிப்பதுடன்; நன்மைகளையும் உணவு சமைத்தல், மின்சக்தி, இருள் நீக்கல், ஒளியூட்டல் என இன்னும் பலவற்றை ஆக்கியளிக்கும். ஆதலால் ஆக்குவதும் அழிப்பதும் ஒரு இறைமையின் இருபண்புகளாகக் கருதப்பட்டு அக்கினி வழிபாடு சிவவழிபாட்டின் முன்னோடியாக வரலாற்றில் இடம் பிடித்துக் கொண்டது. அதனால் சிவனை ‘ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய்’ என்றார் மாணிக்கவாசகர். வேதச்சடங்குகளில் ஒளிரும் பண்புடையனவாக இடம் பெற்ற சூரியன், சந்திரன், அக்கினி என்பன சிவனின் மூன்று கண்களாகவும் பின்னர் உவமிக்கப்பட்டன. வேதகால கிரியைகளது வழிபடு நோக்கம் மக்கட்பேறு, ஆடுமாடுகள், பகைவரை அழித்தல் என்பனவற்றைப் பெறுவதனையே இலக்காகக் கொண்டிருந்தன.

வேதகால முற்பகுதியில் இடம் பெற்ற எளிய கிரியைகள் பிற்பட்ட வேத மந்திரங்களில் பல்கிப் பெருகிப் பிராமண காலத்தில் வேள்விகளாக, பெரும் பொருட் செலவுடைய ஆடம்பர

யாகங்களாக பாரிய பெரு வளர்ச்சி கண்டிருந்தன. மக்கள் நலம் ஒன்றையே வேண்டி நிற்கும் இக்கிரியைகள், வேள்விச்சடங்குகள் யாவும் காலப் போக்கிலே அகவளர்ச்சிக்குதவாத அன்பினை வளர்க்காத - சிற்றுயிர்களைப் பலி கொள்ளும், சாதாரண மக்களை வருத்தும் புறச்சடங்குகளாக மாறிவிட்டன. அத்துடன் இயற்கை சக்திகள் கடவுளர் என்ற நிலைமாறித் தமது அடிமைகள் என்றவாறு வேள்விகளின் நோக்கங்களும் மாற்றமடைந்தன. வேள்விகளை ஆற்றிக் கொடுப்போர் கடவுளர் என்ற நிலைக்குமாற்றப்பட்டனர். பிரஜைகளின் தலைவனே யாகாதிபதி என்னும் அளவிற்கு இயற்கை சக்திகள் சிறுதெய்வங்களாகும் நிலை தோன்றியது. இயற்கையை உதாசீனம் செய்ததனால் அவற்றிலே பல அனர்த்தங்களும், தீய விளைவுகளும் ஏற்பட்டதுடன் மனித சமுதாயத்தையும் அத்தகைய எதிர்விளைவுகள் சமூகத்தீமைகளாகப் பற்றிக் கொண்டதன் காரணமாகக் கிரியை நெறிகட்கு மறுப்பான சிந்தனைகள் முதன் முதலாகத் தோன்றியது மட்டுமன்றி பௌத்தம், சமணம் முதலிய புறச் சமயங்களும் தோற்றம் பெற வேண்டிய நிர்ப்பந்தத்தையும் தவறாகப்பயன்படுத்தப்பட்ட பிராமண காலக் கிரியைமுறைகள் தோற்றுவிப்பதாயின.

இந்தநிலையினைச் சமன்படுத்தவும், ஆன்மீக விழுமியங்களில் உயர் நிலை மாற்றங்களை ஏற்படுத்தவும் சமுதாய ஒழுக்கநிலை களைச் சீராக்கவும் உபநிடத இலக்கியங்கள் இந்து சமயத்தில் உருவாக்கம் பெற்றன. யாகங்கள் அனைத்தையும் ஆத்ம தியாகங் களாக மாற்றிக் கொடுத்த பெருமை உபநிடதங்களையே சாரும். புறச்சமயங்கள் எழுச்சிபெற்ற அதே காலப்பகுதியிலேயே உப நிடதங்கள் கிரியைகட்கு மாற்றீடாக தவக்கிரியை, யோகக்கிரியை, ஞானக்கிரியை என்பவற்றை இந்துசமயக் கிரியை மரபிலே ஏற்படுத்தி கிரியை முறைகளில் ஒரு மறுமலர்ச்சியை உண்டாக்கின. அத்துடன் பிறருக்காகத் தியாகம் செய்வதும், அன்பை வளர்ப்பதும், கடமைகளைச் செய்வதும் வழிபாடாகும் என்பதும் உபநிடதங்க ளால் சாதாரண மக்களும் பின் பற்றக்கூடிய உயர்கிரியை நெறிக ளாகப் பயிற்றுவிக்கப்பட்டன. அகம்பிரம்மாஸ்மி, தத்துவமஸி, அயமாத்மா பிரமம், போன்ற மகாவாக்கியங்களின் மூலம் மக்களும் சேவையால், விழிப்புணர்வினால் மெய்யுணர்வு சார்ந்த அறிவு நிலைப்பட்டால் தெய்வமாகலாம் எனவும் சமத்துவம், சகோதரத்து வம், சமூக சேவை போன்றவற்றினால்தான் ஒரு மனிதன் கடவுட்கு



நிகரானவன் ஆகலாம் எனவும் வற்புறுத்தின.

இவ்வாறாக இந்து சமயக்கிரியை மரபிலே மாபெரும் மறு மலர்ச்சியை ஏற்படுத்தியவர்களாக உபநிடதகால ரிஷிகளும், சித்தார்த்தர் (புத்தர்), ஜனகர், அஜாதசத்துரு போன்ற சத்திரிய மன் னர்களும் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தவர்களாகக் காணப்பட்ட னர். ஆனால் உபநிடதங்கள் வேதமரபினை அடியொற்றித் தனது கிரியாநிலைப்பாடுகளைக் கூறியது. சித்தார்த்தர் போன்ற சிலர் வேதமரபுகளைப் பொருட்படுத்தாது பல செயல்திட்டங்களை ஒழுக்க நெறிகளை முன்வைத்ததன் காரணமாக சித்தார்த்த மன்னன் கௌதமபுத்தராக மலர்ந்ததும் அவரது ஒழுக்க நெறிகளின் பெயரா லேயே ஒரு சமயத்தை உண்டாக்கும் அளவிற்கு மக்களின் ஆதரவு புத்தபெருமானுக்கு இருந்ததையும் வரலாறு காட்டுகின்றது. இயற்கை சக்திகளைக் குறைத்து மதிப்பிடும் கருவிகளாகக்கிரியைமுறைகள் மாறியமையும், வர்ண அமைப்பானது சாதியமைப்பாக மாற்றமுற்ற காரணத்தினாலும் பலவும் சேர்ந்து கிரியைகளிலும், கடவுட் கொள்கையிலும் வெறுப்பினைத் தோற்றுவிக்கும் ஒருகாலமாக அக்காலச் சூழ்நிலை அமைந்தது.

இத்தகைய ஒரு நிலைமாற்றம் சமூக மக்களின் எதிர்ப்பிற்குக் காரணமானதே தவிர சமயக்கிரியைகளின் உள்நோக்கம் தூய்மையா னதாகவே இருந்ததனை; பிற்காலத்தெழுந்த சிவாகமங்கள் சிவால யக்கிரியைகளினூடாக வகுத்துக்காட்டியமை இந்து சமயத்திலே மீண்டும் கிரியா நெறி மேன்மையடையத் தூண்டுகோலாயிற்று. சிவாலயங்களில் நிகழும் கிரியைகள் நித்தியக்கிரியை, நைமித்திக யக்கிரியை, காமியக்கிரியை என மூன்று வகைப்படும். இவற்றிலே அதிகமான கோயில்கள் ஆறு காலப் பூசைகளை நிகழ்த்துவனவாக உள்ளன. இவை ஷட்கால பூசை எனப்படும். அவையாவன உஷத் காலம், காலைசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, இரண்டாம் காலம் அர்த்தசாமம் எனப்பெயர் பெற்றுள்ளன. இத்தகைய நாளாந்தப் பூசை முறையே நித்ய பூசை எனப்படும். இவை உலகசேமத்திற்கா கவும், சகல மக்களின் உயர்வுக்காகவும் தினந்தோறும் ஆற்றப் படவேண்டிய பூசைகள் எனச் சிவாகமங்கள் கூறும், அவற்றினை யாற்றிக் கொடுக்கின்ற அந்தணப் பெருமக்களை முப்போதும் திருமேனி தீண்டும் பேறு பெற்ற உத்தமர்கள் என இந்துசமுதாயம் ஏற்றம் கொடுத்துள்ளது. தன்னலமற்ற பூசைகளை ஆற்றிக் கொடுத்து உலகிலே அறம் தழைக்க வழி காட்டுபவர்கள் ஆதலால் 'அந்தணர்

என்போர் அறவோர்' எனத் திருக்குறளும் போற்றியது. ஆகமங்களின் நாற்பாதங்களில் ஒன்றான கிரியாபாதம் என்ற பகுதியே கிரியை நெறிகள் பற்றிச் சிறப்பாகக் கூறுகின்ற பகுதியாகும். இது குறிப்பாகச் சைவசித்தாந்தக் கிரியை மரபை உள்ளடக்கிய ஒன்றெனலாம். இந்து சமயக் கிரியை முறைகள் பல விஞ்ஞான விளக்கங்களை உள்வாங்கியிருப்பனவாகும். உதாரணமாக ஆலய வழிபாட்டிலே கோயிலை வலம் வருதல் ஒரு முக்கிய நடைமுறையாகும். இயற்கையமைப்பிலும் பூமி சூரியனை இடமிருந்து இடமாகவும், இருதயத்திலே குருதிச் சுற்றோட்டமும் இடமிருந்து வலமாகவும் உடலில் பாய்வதையும் யாவருமறிவர். அவ்வாறே ஆகமங்களும் இறைமை என்னும் பேராற்றலை இடமிருந்து வலமாக வலம் வருதலால் மனிதர்களது ஆத்ம சக்தி பெருகுவதாகவும் கருத்திற் கொண்டே இவ்வாறு வகுத்துத் தந்துள்ளன என்பதனைப் புரிந்து கொள்ளலாம்.

நைமித்தியக்கிரியை என்பது விசேடகிரியை எனவும்படும். குறிப்பிட்ட சில விசேட நாட்களில் மட்டும் இக்கிரியைகள் நடைபெறும். சில வாரத்திற்கொருமுறை, இருவாரத்திற் கொருமுறை, மாதத்திற்கொருமுறை, சில மாதங்கட்கொருமுறை, வருடத்திற்கொருமுறை, பலவருடங்கட்கொருமுறை என நிகழும் நைமித்தியக்கிரியைகளும் உண்டு. இவற்றிலே சதுர்த்தி, சஷ்டி, சங்கிராந்தி, அஷ்டமி பூசை, அமாவாசை, பௌர்ணமி, பிரதோஷம், கிருத்திகை, நவராத்திரி, சிவராத்திரி, வாரவிரதம், நட்சத்திரவிரதம் வருடம் தோறும் நடைபெறும் மகோற்சவங்கள் என அவை பலவகைப்படுகின்றன. இவை நிஷ்காமியமாக அமைவதே சிறப்பானதென சிவாகமங்கள் உணர்த்துகின்றன. ஆனால் பலன்களை அவாவியே ஒவ்வொரு செயலைச் செய்வதும் மானிட இயல்பாகும். அக்காரணம் பற்றியே மகோற்சவம் தவிர்ந்த நைமித்தியக்கிரியைகள் பலவும் காமியக்கிரியையில் அமைந்த நைமித்தியமாகவே இன்று காணப்படுகினறன. நிஷ்காமியக்கிரியைகள் என்பன பற்றற்ற, பலனை எதிர்பாராத, உலக நலம் ஒன்றினையே குறிக்கோளாகக் கொண்ட பூசைக்கிரியைகளாகும். இத்தகைய கிரியை முறைகட்கும் சிவாகமங்கள் வித்திட்டுள்ளன என்பதனை இந்து சமுதாயம் எண்ணிப்பார்ப்பது இன்று குறைவாகவேயுள்ளது. கிணறு தோண்டுதல், குளம் வெட்டுதல், கோயில்களை அமைத்தல், புனருத்தாரணம் செய்தல், அன்னதானம் கொடுத்தல், நந்தவனங்களை அமைத்தல் என்பன பெரும் சமுதாய உயர்வினை



ஏற்படுத்தும் உன்னதமான நிஷ்காமியக் கிரியைகளிற் சிலவாகும். உலக நன்மை என்ற பலனை எதிர்பார்ப்பதும் பயன் கருதிய செயலாகக் கொண்டு சிலர் இவற்றினை நிஷ்காமியம் எனக் கொள்ள மறுப்பதுமுண்டு.

நிஷ்காமிய கர்மம் என்பதன் தெளிவான விளக்கத்தை கீதையில் நன்கு காணலாம். 'ஈசனோடாயினும் ஆசை அறுமின் ' எனக்கூறும் உயர்ந்த நிஷ்காமியச் செயலைத் திருமந்திரமும் எடுத்துக்கூறத் தவறவில்லை. 'கடமையைச் செய் பலனில் உனக்கு அதிகாரமில்லை' என்பதே கீதை காட்டும் உயர்ந்த நிஷ்காமிய கருமமாகும். அங்கும் 'தருமம்' என்ற பொருளை அருச்சுனன் அவாவி நிற்பதாக கூறுவாராயினும் அதுவே இயற்கையின் நியதி என்பதனை மறுக்கமுடியாது. அவ்வாறே கடமைபுரிவதே மானுடராகப் பிறந்த ஒவ்வொருவரதும் இயற்கை தர்மமாகும். பலனை நாடாத - பற்றில்லாத கடமை இது கீதையின் உயர்வான கிரியா தர்மமாகும். எல்லாவகையான செயல்களைச் செய்தபோதும் அவற்றினால் கடவுளை வழிபடுவதாகவே எண்ணி அவற்றினை அர்ப்பணிக்கும் மனப்பக்குவத்தை வளர்ப்பதே நிஷ்காமிய கருமத்தின் பண்பென்பது இங்ஙனமாகப் புலப்படுத்தப்படுகின்றது. இன்னோர் வகையில் கூறுவதனால் 'கர்மசன்னியாசம்' எனப்படுவதும் இதுவே. அதாவது செயலினைத் துறந்து கடமையினை மறந்து சன்னியாசம் போவதல்ல; செயலிலே துறவுமனப்பான்மையினை வளர்க்கின்ற ஒரு நோன்பாகும். இது பூரணசரணாகதி எனப்படும் பிரபத்தி நெறியாகும். தன்னையும் தான் செய்யும் செயல்களையும் இறைவனுக்கு அர்ப்பணித்துச் செயற்படுவது எனலாம். இதனையே அப்பர் 'என் கடன் பணி செய்வது உன்கடன் அடியேனைத் தாங்குதல்' என்றார். இதுவும் ஒருவகைப்பக்தி செலுத்தும் கிரியை மரபாகும்.

ஆன்மவிடுதலை அடைவதற்குத் தேவையான ஒழுக்கநிலைப்பாடுகளை சைவசித்தாந்தம் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்காக வகைப்படுத்தி உள்ளது. இவற்றிலே சரியை ஆணவத் தடிப்பினைக் குறைப்பது-பணிவினையும் கீழ்ப்படியும் பண்பினையும் வளர்ப்பது. எல்லா உயர்களிடத்தும் அன்புகாட்டுவது. சரியா பூசை ஆகும். உழவாரத்தொண்டிலே சூழல் சுத்திகரிப்பையும் சுகாதார சேவையினையும் உணர்த்திய பெரும்பக்தர் நாவுக்கரசர். அன்பேசிவம் என்னும் திருமந்திர மார்க்கத்தை செயல்வழி வாழ்ந்து காட்டிய உதாரண புருசனுமாவார். கிரியா நெறியானது எல்லா

உயிர்களையும் தன்னுயிராகப் பாவித்து அவ்வுயிரின் ஒளியில் இறைவனைக் காண்பதாகும். கடவுட்குப் பூசைகள் மட்டும் செய்வ தல்ல. அவரது உயிர்கட்குச் சேவையும் செய்வதனையே சம்பந்தரது கிரியா நெறி எடுத்துக் காட்டுகின்றது. பெற்றோரது துன்பம் துடைக்க இறந்த பெண்ணை உயிர்ப்பித்தது; கூட்டுப்பிரார்த்தனை மூலம் சகல மக்களையும் ஒன்றுகூடச் செய்து ஒற்றுமையுணர்வினை ஏற்படுத்துவது, தன் திருமணம் காணவந்த அனைவரையும் தம் மைப்போல் சிவசோதியில் கலந்து ஆனந்தமடையச் செய்வது போன்ற பேருபகாரங்கள் யாவும் கிரியை நெறியின் சில இலட்ச ணங்கள் எனலாம்.

யோக நெறியானது உயிர்க்குயிராய்க் கலந்து நின்று மக்களை நல்வழிப்படுத்தல், வழிகாட்டுதல், என்பதனைக் குறிக்கும். இவர்கள் தமது யோக மகிமையால் உலகம் முழுவதற்குமான ஆதார சக்தியை வழங்குபவர்கள்-பிரார்த்திப்பவர்கள். ஒழுக்கவி யலின் முக்கிய பகுதிகளாக யோக நெறியின் முதல் மூன்று பகுதிக ளும் விளங்குகின்றன. தீயவற்றினை நீக்குவதாகிய இயமம்-இதன் கண் அகிம்சை, சத்தியம், நேர்மை, இரக்கம், பரிவு, ஆன்மசுத்தி, பொறுமை, தைரியம், கடமையில் ஈடுபாடு உடல் சுத்தி இவை அனைத்துப் பண்புகளும் அடங்குகின்றன. நியமம் என்ற பகுதி யிலே வழிபாடு, பிரார்த்தனை, ஜெபம், பிற உயிர்களிடத்து அன்பு செலுத்துதல், தவம், சீலம் முதலியன இடம் பெறுகின்றன. இத்தனை நற்காரியங்களை முற்றும் துறந்த யோகியர் தமக்காக ஆற்றுவதில்லை-உலகத்தவர் உய்தற் பொருட்டுத் தன்னை வருத்தும் பண்பாளர் இவர்களாவர். இத்தகைய நற்பண்பு வாய்ந்தவர்கட் காகவே தான் உலகம் இன்றும் இயங்குகின்றது என்பது ஆன்றோர் வாக்கு. மனத்தூய்மை உடற்தூய்மை இரண்டினையும் உருவாக்கு வதன் மூலம் நல்ல பிரஜைகளாக நற்குண மிக்கோராக ஒவ்வொரு பிரஜைகளும் உருவாக இத்தகைய சமயநெறிகள் வழிகாட்டுவ னவாக அமைகின்றன. யோகம் என்பது வெறும் மூச்சடக்கித் தியானத்தில் ஆழ்வது மட்டுமல்ல-பிறரிடம் சாந்தமாக இருப்பது. இனிமையாகப் பேசுவது. பொறுமையுடன் சகித்துக் கொள்வது ஆகிய பிரேமையின் குண இயல்புகளை வளர்த்தெடுத்து உலகி லேயே சத்திய நெறியை நிலைநாட்டுவதே இக்கிரியை பூர்வமான செயல்களின் நிலைப்பாடாகும்.



ஞானக்கிரியா நிலை என்பது இறைவனின் ஞானக்கிரியா சக்தியினை நினைவூட்டுவதாகும். மனம், புத்தி, சித்தம்,அகங்காரம் நான்கையும் கடந்த செயல் வழியே ஞானமாகும். சரியையாளர் தொண்டர்; கிரியையாளர் பக்தர், சாதகர் யோகி, ஞானியர் சித்தராம் இயல்பினர் என இவர்களை இனம் காண முடியும்.

''விரும்பும் சரியை முதல் மெய்ஞானம் நான்கும் அரும்பு
மலர் காய் கனியன்றோ பராபரமே''

எனத் தாயுமானவர் இந்நெறியாளரின் மனப்பக்குவநிலைப் பாட்டினைச் சிறப்பாக வகுத்துக்காட்டினார்.

''ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை,
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று''

எனத் திருமூலரும் ஞானமே கிரியை நெறியின் இறுதி லட்சியம் எனவும் - அதை விட்ட அற நெறி வேறில்லை எனத் திருமந்திரமும் கூறியது. நிறை ஞானியர்க்கு இறைவனின் நாமசங்கீர்த்தனமே நிறைந்த சத்துணவு போன்ற ரொனிக் (Tonic) ஆகும். அது சகல ஆன்மநோய்களையும் நீக்குவதுடன் மனித நேயம் நிறைந்த சேவை மார்க்கத்தில் மனிதனை நிலை பெறச் செய்யும் பெற்றி வாய்ந்த தாகவுமுள்ளது. இதுவே கிரியாநெறி என்பதன் அடிப்படைத் தாற்பரியமுமாகும்.

பரார்த்தக் கிரியையின் பயன்பாட்டிலே கூட சிவாச்சாரியர் உபயகாரர் இருவரின் கூட்டுபொறுப்பும் இதனையே துலக்குவதா யுள்ளது. கிரியை பற்றிய செயற்பொறுப்பு சிவாச்சாரியாருக்கும் தார்மீகக் கூட்டுப் பொறுப்பு இருவரையும் சாருகின்றது. அத்துடன் உபயகாரர் ஒரு குடும்பத்தின் பிரதிநிதி மட்டுமன்றி ஒரு இனத்தின் பிரதிநிதியாகவும் தன்னைப் பாவிப்பது அவசியமாகும். அதனால் பரார்த்த பூசையின் பயன் உபயகாரரை நிமித்தமாகக் கொண்டு ஒரு சமூகத்தவர் அனைவரையும் உள்ளடக்குவதால் வழிபடவரு வோர்க்கும் சகல மக்கட்கும் அவற்றின் பயனில் பங்குடையவ ராகும் வாய்ப்பளிக்கின்றவராகின்றார். ஆலயங்களில் பூசைக்கிரி யைகளின் போது மந்திர ஒலி, பண்ணிசை என்பன ஒத்தவாறு ஒலிக்கவைப்பதுதான் ஆங்கு இறைசாந்நித்யம் ததும்பவைக்கும் சிறந்த சாதனமாகும். வருடம் தோறும் நடைபெறும் உற்சவங்களில் இவ்வம்சத்திற்கு அதிகமான சிறப்பளித்தல் நல்ல பலனைத் தரமுடியும்.

மெய்ஞானம் என்பது மெய்ப்பொருளை உணர்வதற்கான ஆறாவது அறிவாகும். மெய்ப்பொருள் என்பது இயற்கையின் அடிப்படை நியதியாகும். அவ் இயற்கைநியதி ஆதி நிலையாகவும், அணுநிலை, என்ற அசைவாகவும் பிரபஞ்சம் என்ற கோவை யாகவும், உயிர் நிலை என்னும் இயக்கசக்தியாகவும், நான்கு வகையில் மலர்ந்து இயங்கிக் கொண்டிருப்பது ஆகும். இவ்வகை யினை உணர்ந்து கொண்டால் ஒவ்வொரு செயலிலும் ஒவ்வொரு விளைவு இருக்கின்றதென்பதும் எச்செயலில் எந்தவிளைவு ஏற்படும் என்பதனையும் இயற்கை நியதியைக் கொண்டு அறிய முடியும். இதுவே காரணகாரிய விதியாக (Course and effect Theory) விஞ்ஞானத்திலும் சத்காரிய வாதக்கொள்கையாக மெய்ஞானத்திலும் விளக்கம் பெற்றுள்ளது. எனவே சுரக்காய் விதைத்தால் பாவற்காய் விளையாது என்பது போல இன்னது செய்தால் இன்னது விளையும் என்பதனை அறிந்து, அவ்வப்போதும் சேவைகளை தொண்டுகளை நல்லமுறையிலே ஆற்றவும் அமைத்துக் கொள்ளவும் இயற்கையின் ரகசியத்தை இயற்கை அமைப்பின் நுணுக்கத்தை, இயற்கையின் வளங்களை உள்ளவாறு உணர்ந்து கொள்வதவசியமாகும்.

இவ்வம்சங்களின் ஒரு துறையினை விளக்குவதாகவே இந்து சமயக் கிரியைகளின் தத்துவார்த்தங்களும் அமைந்திருக்கின்றன. இயற்கையில் கரந்துறையும் அனைத்து சக்திகளையும் ஒன்றுதிரட்டி அதன் தார்மீக மையத்தை இறைமையாக்கி ஆலயங்களின் மூலப் பகுதியில் முன்னோர்கள் தெய்வீகசக்தியாகத் தேக்கிவைத்தனர். இயற்கையை வழி நடத்தும் மாபெரும் பேராற்றலை - பேரறி வினை வணங்கிப் பெறுவது அதனுடைய சக்தியை உபயோகப்ப டுத்துதற்கு சாதகமானது. ஆகம முறையிலே இறைவனுக்கு நிகழ்த்தப்படும் உபசாரக் கிரியைகள் அனைத்திலும் இயற்கையின் அம்சங்கள் விரவியுள்ளன, என்பதனை உணர வேண்டும். திரவியங் கள், சந்தனம், கிழங்கு, பழம், புஷ்பம், போன்றவற்றிலே மண் ணின் தொடர்பினையும், தீர்த்தம், பால், தயிர் போன்றனவற்றிலே நீரின் தொடர்பினையும்-நவரத்னம், தீபம்,சூடம் போன்றவற்றிலே அக்கினியின் தொடர்பையும் தூபம், சாமரம், என்பவற்றிலே வாயுவின் தொடர்பினையும் மணி, கானம், வாத்தியம் என்பன வற்றிலே ஆகாசப்தத்தின் தொடர்பினையும் கண்டு கொள்ளலாம். இறைவனுக்குச் செய்யப்படும் ஐம்பூத உபசாரக்கிரியைகள் ஐம்பூதங்களின் ஆக்கமாகவே இருக்கின்றன. தென்னாட்டிலே



இத்தகைய தொடர்பானது ஐம்பூத தலங்களாகப் பிரசித்தி பெற்றுள்ளது. திருவாரூர் பிருதுவி தலமாகவும், திருவண்ணாமலை அக்னி தலமாகவும் (தேயு) திருக்காளத்தி வாயு தலமாகவும், திருவானைக்கா அப்பு (நீர்) தலமாகவும், சிதம்பரம் ஆகாச தலமாகவும் சிறப்பிக்கப்பட்டுள்ளமை இயற்கையும் இறைமையும் ஒன்றாயும், வேறாயும் உடனாயும் உறைகின்ற சித்தாந்த உட்பொருளை விளக்கு வனவாகவும் காணப்படுகின்றன.

இயற்கையானது மனித சமுதாயத்திற்கு உணவு முதல் வாழ் விட வசதிகள் வரை சகலவற்றையும் பிரதிபலனை எதிர்பாராது ஓயாது வழங்கி வருகின்றது. இயற்கையின் இந்த அறக் கொடை யினை மனிதன் நினைத்துப் பாராது இயற்கைக்கு ஊறுவினை விப்பதனாலேயே தனக்கு இழைக்கப்படும் அபவாதங்களையும், தீங்குகளையும் மீண்டும் மனித சமுதாயத்திற்கு நோய்களாகவும், பஞ்சம், வறுமை, என்பனவாகவும் திருப்பி உருவாக்கி விடு கின்றன. நாம் எதனைச் செய்கிறோமோ அதனையே மீண்டும் பெறுகிறோம். என்ற தத்துவ நியதியினை இந்நிலை உணர்த்துவ தாயுள்ளதால் 'நல்லதையே செய்யுங்கள் நல்லனவே மீண்டும் கிடைக்கும்' எனப் பெரியோர் உபதேசித்தனர். இயற்கையில் இருந்து அறிவியலைக் கற்றுக் கொள்ளும் மனித சமுதாயம் அதனிடமிருந்து அறவியலையும் கற்றுக்கொள்ள வேண்டுமென்பதே கிரியைகள் ஆற்றுவதன் அடிப்படைத் தத்துவமாகும். ரிதம் என்ற பெயரிலே வேதகாலம் போற்றப்பட்ட இயற்கை ஒழுக்க நியதியும் இதுவேயெனலாம். இதனை உணரும் மனித சமுதாயம் கோயில் களில் திருவிழாக்கள் செய்வதிலும், திருப்பணிகள் ஆற்றுவதிலும் காட்டும் ஆர்வம் போன்று அறப்பணிகளையும் தருமசேவைக ளையும் ஆலயங்களினூடாக ஊக்குவித்து வளர்ப்பதற்கும் இந்துக் கள் அனைவரும் முன்வர வேண்டும். மனிதநேயம் தழைப்பதற்குப் பூசைக் கிரியைகளைப் போல தருமக்கிரியைகளையும் புனர மைப்புச் செய்யும் வண்ணம் ஆலய நிர்வாகமானது புனரமைப்புப் பெறுவது விரும்பத் தக்கதாகும்.

மத்தியகால இந்துக்கோயில்களில் கிரியைகளும், பூசைகளும், மகோற்சவங்களும் பல்கிப்பெருகியது போல அக்கோயில்கள் ஆதரவற்றோருக்கு அபயநிலையங்கள் ஆகவும், நோயுற்றோருக்கு மருத்தவ நிலையங்களாகவும், கல்வியறிவற்றோருக்கு கல்வி அறிவூட்டுவனவாகவும், வறியமக்கட்கு உணவு வழங்கும் அன்ன

தான நிலையங்களாகவும் செயற்பட்டு வந்துள்ளன. இன்றைய கோயில்களில் திருவிழாக்கட்காக - மற்றும் ஆலயக்கிரியைகட்காகச் செலவிடப்படும் பல்லாயிரக்கணக்கான பொருளின் ஒரு பகுதியினை ஆலய நிர்வாகமானது மக்கள்து தருமகைங்கரியங்கட்காகவும் வழங்க முன்வருவதே கோயில் கிரியைகளின் முழுமையான நோக்கத்தினை நிறைவு செய்யும் அறப்பணியாக அமையும்.

இந்து ஆலயங்கள் யாவும் கிரியைகளையும், மகோற்சவங்களையும் பாதுகாப்பது மட்டுமன்றி, அறவழிச்சேவைகள் தரும நிதியங்களை வளர்த்தெடுக்க வேண்டிய பாரிய சமூகப் பொறுப்புணர்வுள்ள மையங்களாதலால்- தற்காலங்களில் ஆலயங்களில் ஏற்பட்டுள்ள நிதிச்சண்டைகள், நிர்வாகச் சண்டைகட்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும். ஆலயங்கள் வெறும் புறக்கிரியைகளையே ஆற்றிக் கொண்டு அவற்றின் புனிதத்தன்மைக்கு இழுக்கு வருமாறு சச்சரவுகளின் இருப்பிடமாகத் தொடர்ந்துமிருந்தால் அவற்றினை மக்கள் புறக்கணிக்கும் நிலை ஏற்படும் என கடந்தகால வரலாறு கற்பித்த உண்மைகளை இந்துக்கள் எவரும் இலகுவில் மறந்து விடமுடியாது. அடுத்து கிரியைகளின் அணுகு முறை பற்றிச் சைவசித்தாந்த நிலைப்பாட்டினை நோக்கலாம்.

## சைவசித்தாந்தக் கிரியை மரபு

சைவ சித்தாந்தம் தத்துவமல்லவா கிரியை வழிபாடு சமய நெறிக்குரியதல்லவா! என்னும் ஐயப்பாடு சிலரிடத்து எழுவது இயல்பே. இந்து தத்துவங்கள் அறிவு நெறிசார்ந்த ஆய்வுமுறைமைகளையே அடித்தளமாகக் கொண்டு அமைந்திருப்பனவாகும். சைவசித்தாந்தமும் இவ்வாறான ஓர் தத்தவமுறைமை சார்ந்ததே. பூர்வமீமாம்சை தவிர்ந்த வைதீக தரிசனங்கள் யாவும் அறிவினால் இறைவனையடைவதனையே இலட்சிய நோக்காகக் கொண்டுள்ளன. எனவே அங்கெல்லாம் சமயம் வேறு தத்துவம் வேறு எனக் கருதும் நிலை இந்து தத்துவங்களில் குறைவாகவே காணப்படுகின்றது. வேதாந்தமும் கிரியை முதலிய புறப்பூசைகளை விட ஞான மார்க்கத்தினையே தனது உயர்நிலை விழுமியமாகக் கொண்டுள்ளது. ஆயினும் அனைத்துத் தரிசனங்களும் வேத இலக்கியங்களினைத் தமது அதிகார நூல்களாகக் கொண்டிருப்பது அவற்றின் பொதுத் தன்மையின் சிறப்பியல்பெனலாம்.



பூர்வமீமாம்சை வேதாந்தத்தின் முற்பாதியாகக் கொள்ளக்கூடிய உத்தரவேதாந்தமாகக் கொள்ளப்படும். இத்தத்துவ மரபானது வைதீகதரிசனங்களில் ஒன்றாக வைத்துப் பேசப்பட்டாலும் உண்மையில் பூர்வமீமாம்சை வேதக் கிரியை மரபு பற்றியே பேசுகின்றது. கிரியை நெறி ஒன்றே விடுதலைக்கு வழியாகும் என்பது அதன் முடிபாகும்.[1] இருந்தபோதும் அது சமய நெறிகளுள் ஒன்றாக அன்றி இந்து தத்துவமரபுகளில் ஒன்றாகவே வைத்தெண்ணப்படுவதனால் இந்து தத்துவங்களில் சமயம் வேறு தத்துவம் வேறு எனப்பிரித்துப் பார்க்கும் பண்பு குறைவாகவே தென்படுகின்றது. வேதாந்தம் ஞான காண்டப்பகுதியை முதன்மைப்படுத்தும் போது. பூர்வ மீமாம்சை கர்ம காண்டப்பகுதியை முதன்மைப்படுத்துகின்றது. ஆயினும் பூர்வமீமாம்சை சமயமா? தத்துவமா என யாரும் விமர்சிப்பதில்லை. அத்வைத வேதாந்தம் வளர்ச்சியடைந்ததும் உத்தரவேதாந்தமான பூர்வமீமாம்சை செல்வாக்கிழக்க நேரிட்டிருக்கலாம். வேதத்தின் கருமகாண்டமான சம்கிதை, பிராமணங்கள் வழக்கிழந்து போவதற்கு வேதத்தின் ஞான காண்டமாகிய உபநிடதங்களும் ஓர் காரணமென்பது வரலாற்றுண்மையாகும்.

இத்தகைய சமயதத்துவங்களின் எழுச்சியினை கிரியைகட்கெதிரான புரட்சி, எதிர்ப்பு, வீழ்ச்சி என்றும், அக்கால சமய இலக்கியங்களில் எல்லாம் விலாவாரியாகப் பேசப்பட்டன. ஆனா[illegible] அவையாவும் கிரியை முறைகளின் பரிணாம வளர்ச்சி என்பதுட[illegible] மாற்றங்களையேற்று அறிவின் முடிவுகளைப் பக்குவமா[illegible] படிப்படியாக மக்கட்கு அறிவியல் ரீதியாகப் புகட்டும் பாரம்ப[illegible] வளர்ச்சி என்பதுதான் இயல்பாக நடை பெற்ற வரலாற்று நிகழ்ச்சியாகும். பல்வேறு இயற்கைச் சக்திகளை நோக்கி வழிபாடுகள் வளர்ச்சியடைந்த காலம் ஒரே ஒரு உள்பொருள் பற்றிய ஆய்வில் உபநிடதங்கள் ஈடுபட்டிருந்தன. யாகக்கிரியைகள் பல்கிப் பெருவளர்ச்சியுற்ற காலம் சமுதாயத்திலே தானம், தவம், தியானம், புலனடக்கம் முதலிய ஒழுக்க நெறிகள், ஞானத்தேடல் என்பவற்றை முதன்மைப்படுத்தி உபநிடதங்கள் மனிதர் உயிருடன் இருக்கும் போதே துன்பத்தை வெற்றிகொள்ள முடியும் என்னும் பாதையிலே ஜீவன் முக்தி நிலையினை அடையக்கடைப்பிடிக்கும் உபாயங்களைத் தெளிவுபடுத்த முயன்றன.

வழிபாட்டுக் கிரியைகளின் ஆரம்ப நிலையிலே ஐம்பூத வழிபாடு, சடங்குகள், கிரியைகள் என்பனவற்றிலே அதிக நாட்டம்

கொண்டிருந்த சமூகம் அறிவு நிலைத்தேட்டம் முதன்மை பெறத் தொடங்கியதும் அறிவியல் நாட்டம், ஆன்மீகத் தேடல், அறவொழுக்கம், பிரமச்சாரியம் போன்றவற்றில் அதிக அக்கறை செலுத்துவதனை உபநிடதங்கள் உணர்த்துவதாயுள்ளன இதனைச் சமன்படுத்தும்பணியிலே உபநிடதங்கள்,

> ''சாத்திரங்களில் விதிக்கப்பட்ட கிரியைகளை மட்டும்
> விடுதலைக்கு வழி எனக் கடைப்பிடிப்போர்
> காரிருள் நிறைந்த உலகங்களை அடைகின்றனர்,
> அறிவுவழியினை மட்டும் பின்பற்றுவோர் அதனையும்
> விட இருளான உலகினை அடைகின்றனர். [2]

என்றிவ்வாறு அறிவுரை பகர்வதனை ஈசாவாஸ்ய உபநிடதத்தில் அவதானிக்கலாம். இதே கருத்தோட்டமானது.

> ''யாகக் கிரியைகள் என்பன ஸ்திரமற்றவை இவற்றினையே பெறற்கரிய பேறாகக் கருதுவோர் மீண்டும் மீண்டும் பிறவிகட்காளாகின்றனர்''[3]

என முண்டக உபநிடதத்திலும் உணர்த்தப்பட்டது.

இவ்வாறாகச் சமயமானது தனது வழிபாட்டுக் கிரியை நெறிகளிலிருந்து படிப்படியாக அறிவாராய்ச்சி முறைமைகட்கு மாறுவதனைக் காணமுடிகின்றது இத்தகையதொரு காலகட்டத்திலே கிரியை முறைகட்கும் தத்துவமுறைகட்கும் ஓர் சமன்பாட்டினை ஏற்படுத்துவதாவே சைவ சித்தாந்தக் கோட்பாடும் அமைந்தது அது சிற்றிவுடைய மக்கட்குச் சமயமாகவும் அறிவியல் அணுகுமுறையினை நாடுவோர்க்குத் தத்துவமாகவும் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டது. சடங்குகள், (Ceremonies) கிரியைகள் (Rituals) என இருபதங்கள் சமயத்துறையில் பிரயோகத்திலிருக்கின்றது. இவற்றிலே உலகியற் கொண்டாட்டங்களை வீடுகளில் சடங்குகள் எனவும், ஆலயங்களில் நிகழ்வனவற்றைக் கிரியைகள் எனவும் சமூகவியலாளர் நோக்குவர். சைவசித்தாந்தத்தின் சிறப்பு நூல்களாக விளங்குவன சிவாகமங்களாகும். இவை நான்கு பாதங்களாக வகுக்கப்பட்டுள்ளன. அவை சரியாபாதம், கிரியாபாதம், யோக பாதம், ஞானபாதம் எனப்படும் அவற்றிலே சைவசித்தாந்தக் கிரியை மரபிற்கு ஆதாரமாய் விளங்குவன கிரியாபாதம் எனப்படும்



பகுதியாகும். சிவாகமங்கள் வாழ்வியல் அடிப்படை நோக்கிலே ஒழுக்கநியமங்களை வளர்த்தெடுக்கும் நோக்கமாகவே கிரியைகளை வீட்டுக்கிரியைகள், கோயிற்கிரியைகள் என இரு பிரிவுகளாகக் அமைத்துக் கொடுத்துள்ளன.[4] வீட்டுக்கிரியைகள் பூர்வக்கிரியைகள், அபரக் கிரியைகள் எனவும், கோயிற்கிரியைகள் நித்தியக்கிரியைகள், நைமித்தியக் கிரியைகள் எனவும் சிவாகமங்கள் தனித்தனியாக விளக்கியுள்ளன. ஒரோவிடங்களில் காமியக் கிரியைகள், நிஷ்காமியக் கிரியைகள் எனவும் வழங்கப்படும் 'இலக்கியம் எழுந்த பின்னரே அதற்கு இலக்கணம் வகுப்பதனைத் தமிழ் இலக்கிய வரலாற்றில் காண்பது போல - சைவசித்தாந்தத்திலே சமயக் கிரியைகள் இலக்கியமாகவும் தத்துவமானது அதன் இலக்கணமாகவும் அமைந்திருப்பது அதன் தனிச்சிறப்பியல்பெனலாம்.

சைவ சித்தாந்த வாழ்வியல் தத்துவத்தில் சரியை, கிரியை இரண்டுமே உலகியல் வாழ்விலே மேனிலை அடையவிரும்பும் பக்தர்கட்காகச் சிவாகமங்கள் ஏற்படுத்திக் கொடுத்த நெறிகள் எனலாம் அன்றாட வாழ்விலே அல்லல்படும் மக்களையும் ஆலயவழிபாட்டிலே ஈடுபடச் செய்வதற்கு இவ்விருமார்க்கங்களும் சிறந்த உபாயங்கள் எனவும் கருதலாம். ரௌரவம், சுப்பிரபேதம், கிரணாகமம், மதங்கம், மிருகேந்திரம் முதலிய ஆகமங்கள் கிரியா பாதம் பற்றிய முக்கியமான விதிகளைத் தந்துள்ளன. காரணம், காமிகம், முதலியனவும் கோயில் கிரியை மரபுகள் பற்றிப் போதியளவு செய்திகளைத் தந்துள்ளன. மேற்குறித்த ஆகமங்களில் கோயிற் கிரியைகள் பரார்த்தமானவை எனவும், அதனை மூன்று விதமாக ஆற்றும் வழிமுறைகளும் பேசப்பட்டுள்ளன.

அவையாவன, கர்ஷணம் அல்லது கோயில் அமைப்புக்கள் (Temple Structure), பிரதிஷ்டா அல்லது உற்சவங்கள், பிராயச்சித்தக் கிரியைகள் என்பனவாகும்.[5] இவை ஆலயக்கிரியைகளின் பிரதான அம்சங்களாகும். பெரும்பாலான ஆகமங்களில் கிரியாபாதமானது மந்திராவதார படலம், தந்திராவதாரபடலம் என இரு பெரும் பிரிவுகளைக் கொண்டுள்ளன. மந்திராவதார படலமானது மந்திர உச்சாடனம், பஞ்சாட்சர ஜெபம், ஸ்வருபம் (Real Form), அனுபூதியடைதற்கான வழிகள், (Mystic Syllable) முதலியவற்றினை அனுட்டிக்கும் உபாயக் கிரமங்களைச் சொல்கின்றது.[6]

மேலும் கிரியாபாதமானது உணர்வுபூர்மான கலைகள், கலாச்சாரமரபுகள், விக்கிரகக் கலைவார்ப்புவிதிகள், உருவவழிபாடு,

என்பனபற்றியும் விபரிக்கும். அவற்றின் வாயிலாகப் பக்திபூர்வ மான, தூய்மையான கலைநோக்கிலே உலகப்படைப்பின் உட்பொ ருள், பாசங்களினினால் ஏற்படும் துயரம், ஆன்ம விடுதலையின் அவசியம், சுதந்திரம் என்பவற்றினையே கிரியைகள் முதலிய குறியீடுகள் மூலம் சிவாகமங்கள் உணர்த்தி நிற்கின்றன எனலாம். அத்துடன் செயல்வழி மனிதனை உற்சாகப்படுத்திச் செயலாற்றத் தூண்டுவதன் வழி ஒழுக்க நியமங்களுடன் கூடிய வாழ்க்கை நெறியினை இயல்பாகவே கடைப்பிடித்தொழுகுமாறு செய்வதும் அவற்றின் பிரதான இலட்சிய மெனவும் கருதலாம்.

வேதகாலப் பிராமணக்கிரியைகள், யாகக்கிரியைகள் என்பன அவற்றின் இலக்குகளின்றும் தவறிப் பொருளை மட்டும் அவாவும் நிலைக்குத் தாவியபோது அக்கிரியைகளிடத்து மக்கள் நம்பிக் கையிழந்து போனதை உபநிடதங்கள் எடுத்துக்காட்டி -அவற்றினை ஞானமுறைமைகளாக மாற்றிக் கொடுத்தன. அந்நிலை மீண்டும் ஏற்படாவண்ணம் சைவ சித்தாந்தக் கிரியை மரபானது சிவாக மங்களில் மிகவும் அவதானமாக அணுகப்பட்டுள்ளது எனலாம். ஏனெனில் வேதகால வேள்விகளையும், யாகக்கிரியைகளையும் அபிஷேகக் கிரியைகளாகவும், கும்பாபிஷேகங்களாகவும், அர்ச்சனா முறைகளாகவும், சதநாமாவளிகளாகவும், ஹோமங்களாகவும் சிவாகமங்கள் மாற்றிக் கொடுத்தன. உதாரணமாக கணபதிஹோமம், சண்டிஹோமம் என்பன அவற்றில் சிலவாகும். உலகமென்னும் யாகசாலையினை ஆலயமாகவும் அதில் ஆத்மதியாகம் என்னும் கிரியைகள் மூலமாக மனிதன் தன்னல மறுப்பின் அவசியத்தையும் மனித நேயத்தின் அத்திவாரத்தையும் உணரவேண்டுமென அன்றே அழகுற அவை எடுத்து விளக்கியுள்ளதெனலாம்.

யாகக்கிரியைகளை ஆத்ம தியாகக் கிரியைகளாக மாற்றிய மைத்த பெருமை சிவாகமங்களையே சாரும். கிரியை வழிபாட்டின் அடிப்படைக் குறிக்கோளே பிறருக்காகத் தம்மைத்தாமே தியாகம் செய்யும் மனப்பாங்கினை வளர்த்துக் கொள்வதேயாகும். ஆகையி னால் தான் ஆலயங்களிலே பூசை, பொங்கல், படையல் என்பன வற்றினை அவற்றின் உட்பொருளுக்கமைய ஆயலத்திற்கு வரும் அடியார்கட்குத் தானமாகக் கொடுத்துவிட்டுப் போகும் வழக்கமும் ஏற்படுத்தப்பட்டது. ஆனால் இன்றோ தானக்கிரியைகள் பலவும் தன்னலக்கிரியைகளாக மாறிவரும் போக்கானது சைவ சித்தாந்தக் கிரியை மரபிலேற்பட்டுவரும் வீழ்ச்சியை அடையாளம் காட்டுவ தாகவும் கருதலாம்.



சைவசித்தாந்தக் கிரியை மரபானது நாற்பாதங்களையும் உள்வாங்கி வளர்ச்சியடைந்த ஒன்றாகும். மொத்தம் முப்பத்தியாறு படிநிலைகளில்[7] அவை உபாயச்சரியை, உண்மைச் சரியை முதலாக உண்மைச் செயல்வழியும் இறுதியில் மெய்ஞானமாக முற்றுப் பெற வேண்டுமென்றே சித்தாந்தமானது வலியுறுத்துவதாயுள்ளது. அப்படி முற்றான ஞானம் கைகூட வில்லையெனில் அத்தகைய கிரியை முறைகளால் எத்தகைய பயனுமில்லையென்பதே சித்தாந்தமுடி பாகும். ஆதலால் செயல்வழி, அறிவுவழி இரண்டினது இலட்சிய மும் ஞானமார்க்கத்தில் நிலை பெறுதலேயாகும். சைவசித்தாந் தத்தின் சமயப்பகுதி சரியை, கிரியை என்னும் இருபிரிவிலும், அதன் தத்துவப்பகுதி யோகம், ஞானம் என்ற இருமார்க்கங்களிலும் நிறுவப்பட்டுள்ளதெனைக் கூறலாம். உதாரணமாக யோக மார்க்கத் திலும் யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை என இருபகுதிகள் அதன் ஆரம்பப்படி நிலைகளாகக் கூறப்பட்டுள்ளன இங்கு கூறப் படும் சரியை வழிபாடும் கிரியை வழிபாடும் உடற்பயிற்சியாகவும், ஆன்மீகப்பயிற்சியாகவும் மலர்ச்சியடைய வேண்டுமென எ[illegible] கப்படுகின்றது.

இக்கிரியைமுறைகள் யோக பாதத்திலே இயமம், நியமம் ஆசனம் என்னும் செயல்முறைப்பயிற்சியாக அறிமுகப்படுத்தப்பட் டுள்ளன. உடற் பயிற்சியுடன் கூடிய இயமம், நியமம், ஆசனம் என் பன ஹடயோகமாகவும், பிராணாயாமம், பிரத்தியாகாரம் என்பன இராஜ யோகமாகவும், தாரணை,தியானம் சமாதி என்பன ஞானயோ கமாகவும் கூறப்படும். சைவசித்தாந்தத்திலே அது 'பிரசாதயோகம்' எனவும் சிறப்பிக்கப்படும் இவ்வாறாக அட்டாங்கயோகத்திலே மூன்று விதமான செயல் வழிக்கிரியைகளும் ஞானயோகத்திலே ஆன்மாலயமடைதற்குரிய உபாயங்களாகவே பேசப்பட்டுள்ளன. சுப்பிரபேதம், கிராணாகமம், மிருகேந்திரம் முதலிய சிவாகமங்கள் இப்பிராசாத யோகத்தின் சிறப்பியல்புகளைத் தெளிவுபட உரைக் கின்றன.[8] பக்தியோகமானது பிரசாதயோகமாகி ஞானமார்க்கத்திலே நிலைபெறுதற்குச் சைவசித்தாந்தக் கிரியை மரபின் ஆரம்பமே வழிகாட்டியாக விளங்குகின்றதெனலாம்.

இயமமும் நியமமும் கூட ஒருவகையில் கிரியை முறைக ளைத்தான் சுட்டுகின்றன. பொதுவாக பூர்வ, அபரக்கிரியைகளைத் தான் 'கிரியை' என நாம்கருதுகிறேமேயன்றி ஏனைய செயல்முறை களும் 'கிரியை' என்னும் பொருளைத் தான் அறிவிப்பனவாகக்

கருதுவது கிடையாது. அப்பரும், சம்பந்தரும் உழவாரப் பணியாலும் தலயாத்திரையாலும், புறப்பூசை அகபூசைகளிலும் தேர்ச்சி பெற்றுப் பக்தியோகத்தில் நிலை பெற்றுத் தானக்கிரியை, தவக்கிரியை முதலியவற்றிலும் ஈடுபாடு கொண்டு, செயலாற்றிய நெறியினை பலரும் உணர்ந்ததாகத் தெரியவில்லை. இவ்விரு நாயன்மார்களும் சரியையில் ஞானமும், கிரியையில் ஞானமும் கைவரப் பெற்ற அனுபூதிமான்களாவார்கள். அவர்களிருவரும் சாதாரண உலக வாழ்வின் துன்பங்கட்கு மத்தியிலும் எவரொருவராயினும் சரியை, கிரியை மார்க்கங்களைச் கடைப்பிடித்து மிகச்சுலபமாக இம்மை, மறுமை இன்பங்களையும் அடையமுடியும் என்பதனை மக்கட்கு வாழ்ந்து காட்டப் பிறந்த சான்றோராவார்கள். எனவே சரியை, கிரியை நெறியுடன் அம்மகான்கள் தமது வாழ்வை நிறைவு செய்து கொண்டதாகக் கருதுவது மகா தவறாகும்.

யோக மார்க்கத்திலும் யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை என்ற நெறிகள் இயமம், நியமம் என்னும் மார்க்கங்களில் அடங்குவதனைக் காணலாம். அகிம்சை, நேர்மை, இரக்கம், பரிவு, பொறுமை, வைராக்கியம், கடமையில் கருத்தூக்கம், உடற் தூய்மை, உள்ளத்தூய்மை, சத்தியம் என்னும் பத்து வகையான அகப்பண்புகள் இயமக்கிரியைகளாகக் கூறப்பட்டுள்ளன. ஆலயப்பூசைக்கிரியைகளை மேற் கொள்ளும் பலரும் புறச்சுத்தியிருந்தால் போதும் என எண்ணுகின்றனர் போலும் இப்புறத்தூய்மை அகத்தூய்மையாக மாற்றமடையும் போது தான் 'ஞானத்தில் ஞானம் ' என்பது கைகூடும் ஆதலால் சரியை, கிரியை என்பன புறப்பூசை என்னும் நிலையிருந்து அந்தர்யாகமாக - அகப்பூசையாக மாறவேண்டும் என்பதனை அப்பர் சுவாமிகள்,

''காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலாய் நிறைய நீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே''

என்று அழகுற வெளிப்படுத்தினார் இக் கருத்தானது.

''உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோபுர வாசல்
தெள்ளத் தெளித்தாக்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே''



எனத் திருமந்திரமும் அகப்பூசையின் முறைமையினை விளக்கியுள்ளது சித்தாந்தக் கிரியை மரபின் ஆணிவேராக இருப்பது சிவஞானத்தை வளர்க்கும் அகப்பூசையேயன்றிப் புறக்கிரியைகளை மட்டும் வளர்க்கும் புறப்பூசைகளல்ல என்பதனைச் சித்தர் மரபும் தெளிவுபடுத்தும்.

''கோயிலாவதே தடா குளங்களா வதேதடா...
கோயிலும் மனதுள்ளே குளங்களும் மனதுள்ளே''

என்றார் சிவவாக்கியசித்தர்.

யோகமார்க்கத்திலே நின்று யோகத்தில் ஞானம் பெற்ற சுந்தரமூர்த்திசுவாமிகளும் சிவபூசைக் கிரியையாற்றி வழிப்பட்டமையினைப் பெரியபுராணம் எடுத்துக் கூறும். இதனை யோகத்தில் கிரியை எனலாம். இசையாலும் இறைவனுக்கு அர்ச்சனை செய்வதும் கிரியை வழிபாட்டிலோர் அம்சமாகும் ''நற்றமிழால் நாளும் இசைவளர்த்தவர் ஞான சம்பந்தராவார். 'அர்ச்சனை பாட்டே யாகும்'' என்றார் சேக்கிழார் பெருமான், சோழர் காலக் கோயில்களில் தேவாரப் பண்கள் பாடித் திருமுறைகளை ஓதுவோர்க்கு 'ஓதுவார்' என்ற சிறப்புப் பெயரிருந்ததை அக்காலக் கல்வெட்டுக்களால் அறிகிறோம். ஆனால் மக்கள் பலரும் இன்று பணம் மட்டும் கொடுத்துச் செய்யும் 'தீபாரதனையே' அர்ச்சனை என எண்ணிக் கொண்டிருக்கின்றனர். 'பாட்டினால் என்னை அர்ச்சனை செய்வதே நீ எனக்குச் செய்யும் சிறந்த வழிபாடு' எனச் சுந்தரரக்கு இறைவன் ஆணையிட்டதனை

''அருச்சனைபாட்டேயாகும் ஆதலால்
மண்மேல் நம்மைச் சொற்மிழால் பாடுக''

எனக் கூறியிருப்பதனைப் பெரியபுராணத்தினாலும் அறியலாம்.[5] ஆதலால் தேவாரத் திருமுறைகளால் பாடி ஈசனைத் தொழுவதும் சிறந்த கிரியை வழிபாட்டு முறைகளுள் ஒன்றாகும் எனச் சைவசித்தாந்தம் காட்டுகின்றது.

ஆகையினால் எந்தக்கிரியையினாலும் இறைவனை வழிபட முடியும் ஆனால் அது இறுதியிலே ஞானத்தில் ஞானமாக நிறைவெய்தவேண்டும் என்பதுதான் சித்தாந்தமெனலாம். ஒருவன் தன்னை இறை பணியில் அர்ப்பணித்தலாவது பூரணமான இறை நம்பிக்கை கொள்வது, சரணாகதி அடைதல், மந்திர ஜபம், பிற

உயிர்களிடத்து இரக்கம், அன்பு, கருணை, சாந்தம் போன்ற நற்பண்புகளை தன்னிடத்து விருத்தி செய்தலுமாகும். நியமக் கிரியைகள் இவற்றினைப் பற்றி மேலும் விபரிக்கும். இவையே உபாயக் கிரியைகளினின்றும் உண்மைக் கிரியை வழிபாட்டில் ஒருவனை அடைவிக்கும் மார்க்கங்களாகும். பலரும் உபாயக் கிரியைகளுடன் நின்று விடுதலால் அறிவுபூர்வமாக முன்னேறி புறத்தைவென்று அகத்திலும் அன்பாகிய (சிவத்தினை) ஆண்டவனைக் காணத் தவறிவிடுகிறார்கள். அனைத்துக் கிரியை முறைகளும் செயல் வழிச்சென்று அறிவுபூர்வமாக இறைமையில் சங்கமமாவதே சைவசித்தாந்தக் கிரியை மரபின் அடிப்படைக் குறிக்கோளாகும். ஞானமார்க்கத்தில் இக்கிரியைகள் யாவும் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடுதல் என நான்கு[10] வகையாக முதிர்ச்சி பெறவேண்டும் இதனையே

''பக்தன் சரியை கிரியை பயில்வுற்றாலும்...
ஞானத்தால் இறுதியிலே சித்தம் குருவருளால் சிவமதாகும்''

எனத் திருமந்திரமும் விளக்கியது இப்படியாக ஞானத்தில் ஞானம் கைகூடலும் கூடுமாம்.

அங்ஙனம் கைகூடும் பக்குவம் வராவிட்டாலும் அடுத்தடுத்து வரும் பிறவிகளில் கைகூடும் என்பதனாலேயே அவை முதலில் பதமுத்திக்கு வழிகாட்டுவதுடன் ஞானத்தில் ஞானமாக நிறைவடையும் போது 'பரமுத்தி' என்னும் பிறவா நிலையில் சிவத்துடன் இரண்டறக் கலந்து பேரின்ப நிலையடைகின்றன. எனச் சித்தாந்தம் முடிவு செய்திருக்க வேண்டும். இவ்வாறாகவே பாசஞானமும் பசுஞானமும் இறுதியிலே பதிஞானமாக மலர்ச்சியடையும் நிலை இங்ஙனமாக நிகழ்கின்றது. இந்நிலையே சமயங்களையும் கடந்த 'ஆன்மநேய ஒருமைப்பாடு' என்னும் சமயாதீத நிலையினை ஒருவர் அடைவதற்கு வழிகோலுகின்ற தெனலாம். இப்படியான நிலை கைவந்தோர் ஆற்றும் எழில் ஞான பூசை எப்படிப்பட்டதாக அமையும் என்பதனை மெய்கண்டசாத்திர நூல்களும் சிறப்பாக எடுத்துரைக்கும்.

ஞானநிலையில் நிறைவு பெற்றவர்களின் இயல்புகள் பற்றியும் அவர்கள் எவ்வாறு நான்கு மார்க்கங்களையும் கடைப்பிடித்து கிரியை மரபுகளின்றும் தம்மை ஞானமுறைமைகட்கு செலுத்தினர் என்பதனைச் சிவஞான சித்தியார் என்ற நூலில்காணும் பின்வரும் பாடலால் உணரலாம்.



''புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும்... ஆச்சிர அறத்துறைகள் அடைந்து அருந்தவங்கள் புரிந்தும், அருங்கலைகள் பல தெரிந்தும் ஆரணங்கள் படித்தும், சிறப்புடைப் புராணங்கள் உணர்த்தும் வேத, சிரப்பொருளை மிகத் தெளிந்தும் சென்றார், சைவத் திறத்தடைவர் இதில் சரியை கிரியை, யோகம் செலுத்திய பின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்'' [12]

என்பது சைவசித்தாந்த நிலைப்பாடாகவுள்ளது அத்துடன் நான்கு நெறிகளிலும் நின்று பெறும் விடுதலையின்பத்தை விட ஞானத்தால் அடையும் முத்தி நிலையின்பம் மேலானது என்பதனை

''....ஞானயோக நற்கிரியா சரியை
நவிற்றுவதும் செய்வர்....சன்மார்க்க
முத்திகள் சதுர் விதமாம்....ஞானத்தால்
எய்தும் முத்தியே முடிவென்பர்...''[13]

என்றிவ்வாறு சித்தியார் எட்டாம் சூத்திரம் வாயிலாகச் சைவசித்தாந்தக் கிரியைகள் யாவும் ஞானத்திலே முற்றுப் பெறுவதனை விரித்துரைத்துள்ளன.

புறத் தொழில், அகத்தொழில் இரண்டுமின்றி அறிவுத் தொழில் மாத்திரையால் எல்லாவற்றுக்கும் முடிவும் முதலுமான அகண்டாகார நித்த வியாபக சச்சி தானந்த ஜோதியாய் நிற்கும் சிவத்திற்குச் செய்யும் ஞானக் கிரியையானது இறைவனையடைவிக்கும் எழில் ஞானபூசை... வீடறிந்தோர் ஞானத்தால் அரனை அர்ச்சிப்பர் [14] என்பதால் புறப்பூசை ஞானபூசையாக நிறைவடைவதே சித்தாந்தக் கிரியை மரபு போதிக்கும் உண்மை நிலையெனலாம். அறிவுமார்க்கத்தினைக் கடைப்பிடித் தொழுகுவோரின் உயர்நிலைப் பண்பாவது தான தருமங்களை அனுட்டிப்பதும், சிவஞானியர்களை வழிபடலும், அவர்கட்குத் தருமம் செய்தலும், அறத் தொழில் ஒன்றே தமது மரபாகக் கொண்டு வாழ்வதும் ஆதலால் கிரியை மரபானது அவர்களைத் தானதருமக் கிரியைகள் வாயிலாகவும் ஞானமார்க்கத்தினை அடைவிக்கும் சாதனமாக விளங்குகின்றது. இக்கருத்தானது.

''சிவஞானச் செயலுடையோர் கையிற்தானம் திலமளமே
செய்திடினும் நிலமலைபோல் திகழ்ந்து..... தவமாகும்

பிறப்பொன்றில் சாரப் பண்ணிச் சரியை கிரியா யோகம்
சாராமே, நவமாகும் தத்துவஞானத்தை நல்கி, நாதனடிக்க
மலங்களை நணுகுவிக்கும்''[15]

என்ற பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆகையினால் ஞானமார்க்க மாவது உயர்நிலை அற விழுமியமாகவும், அதுவே ஆன்மீக விடுதலைக்குரிய உயர் கிரியா மார்க்கம் என்பதும் சித்தாந்த சாஸ் திரங்களின் குறிப்பாகவும் கொள்ளலாம்.

இறுதியாகச் சைவசித்தாந்தக்கிரியை மரபு ஆணித்தரமாகக் கூறுவது யாதெனில், நாற்பாதங்களில் முறைப்படி நின்றொழுகி ஞானத்தில் ஞானம் எனப்படும் பூரண அன்பினாலும், அறத் தொழிலாலும் அனைத்து மக்களையும் இறைவனின் அம்சமாகவே அரவணைத்து ஆராதிப்பதே எழில் ஞான பூசைக்கிரியை என்பதா கும். அப்படிப்பட்ட மனித நேயமிக்க சிவஞானியர்க்குச் சமய, நியமங்களின் சங்கற்பம் எதுவும் கிடையாதென்பதும் சிவாகமங்க ளின் கொள்கையென்பதனை,

''சரியை,கிரியை,யோக நியமங்கள்
செறிவு அன்னா ஆச்சிரமங்கள் முதலாய
நிகழ்த்தும் தேசகாலம் திக்கு
சிவஞானிக்கு ஆகா'' [5]

என்னும் சர்வஞானனோத்தராகமச் செய்யுளாலும் அறிய முடியும். இவ்வாகமம் சகலாகமசாரமாக விளங்குவதெனவும் கருதப் படுகின்றது.[17]

இவற்றினை வழிமொழிந்த சிவாகமங்களின் சாரமாக விளங்கும் மெய் கண்ட சாத்திரங்களும் சாதாரண மக்கட்கே அவர்கள் ஞானவழிக்குத் தம்மைப் பக்குவப்படுத்தும் பொருட்டு நான்கு மார்க்கங்களும் கூறப்பட்டனவேதவிர, சிவ சித்தர், சிவஞானியர் கட்கெல்லாம் இவற்றினைப் பயில வேண்டிய அவசியமில்லை எனவும் புகட்டியுள்ளன.

''ஞானமதில் ஞானநிட்டையுடையோர்க்கு, நன்மை
யொடு தீமையில்லை நாடுவதொன்றில்லை, சீல
மில்லை விரதமொடு ஆச்சிரமச் செயலில்லை தியா
னமில்லை சித்தமலமில்லை, கோலமில்லை புலனில்
லைக்கரண மில்லை, குணமில்லை குறியில்லைக்



குலமுமில்லை பாலருடன் உன் மத்தர் பிசாசர்
குணமருவிப் பாடலினோடு ஆடல் இவை பயின்றிடி
னும் பயில்வர்''[18]

ஆதலால் சமயாதீதம் கடந்த சிவஞானியர்கட்கு ஆசார நியமங்கள் அவசியமில்லை என்பதும் பெறப்பட்டது இவற்றி லிருந்து சமயாதீதம் கடந்த சமரச சன்மார்க்க நிலையே முடிவான விடுதலையைத் தர முடியும் என்பது சைவ சித்தாந்தக் கிரியை மரபில் பயில்வோர்க்கு எளிதில் புலனாகும்.

## அடிக்குறிப்புக்கள்

1. Indian Philosophy, Vol II, Dr. S. Radhakrisnan, See Mimasa Section.
   இந்திய தத்தவம், பகுதி 2, எம் ஹிரியண்ணா, பூர்வ மீமாம்சை என்னும் பகுதி பார்க்க.
2. உப நிஸத்ஸாரம் (ஈ ச, கேன, கடோப நிடதங்கள்). தமிழில் உரையாசிரியர், அண்ணா, ஈசாவஸ்யம், சு.9.
3. உபநிஸத்ஸாரம், (முண்டக,மாண்டூக்ய,ஐதரேயம்). தமிழில் உரையாசிரியர், அண்ணா, முண்டகம் சு.1.1.7.
4. சைவத்திருக்கோயிற் கிரியைநெறி, பேராசிரியர் கா. கைலாசநாதக்குருக்கள்; இந்நூலில் மேலதிக விளக்கங்களைக் காண்க.
5. Saivagamas M.Arunasalam, Madras, 1988, P. 27.
6. Op. cit. P. 28.
7. திருவருட்பயன், சிவபாத சுந்தரனார் விளக்கவுரை, சைவநாற் பாதங்கள் என்னும் பகுதி பார்க்க.
8. Saivagamas, M. Arunasalam, P. 28.
9. பெரிய புராணம், சேக்கிழார், தடுத்தாட் கொண்ட புராணம், பாடல் 70 .
10. சிவப்பிரகாசம்; திருவிளங்கம் புத்துரை செட்டியார் அச்சகம், யாழ்ப்பாணம், 1974, ஆன்மலாபம், பக். 200.
11. திருமந்திரம், 5 ம் தந்திரம், பாடல், 1455.
12. சிவஞான சித்தியார், சுபக்கம், சிவஞான சுவாமிகள் பொழிப் புரை, சைவசித்தாந்தக் கழக வெளியீடு, திருநெல்வேலி, 1928 சூ.8.2.11.
13. சித்தியார், சூ.8.2.18 .

14. சித்தியார் 8.2.உ
15. மேற்படி, 8.2.26.
16. சர்வஞானோத்தராகமம், ஞானபாதம், தமிழில் : பொ. முத்தையா பிள்ளை, சென்னை, 1923, பாடல், 23.
17. மேற்படி, பக் . 94.
18. சித்தியார், சூ.8.2.352.

**உசாவிய நூல்கள் சில :-**


சைவக்கிரியை விளக்கம், எஸ். சிவபாதசுந்தரனார்.

A Vedic Reader for Students, A.A.Macdonell Oxford university press, 1965.

Outlines of Indian Philosophy, Vol-I M. Hiriyanna.


# சைவசித்தாந்தத்தில் ஒழுக்கவியல்

இயற்கைக்கு அப்பாற்பட்டு விளங்கும் ஒரு பேருண்மையில் நம்பிக்கை கொள்வது சமயம் எனக் கொண்டால் - இந்த நம்பிக்கை காரணமாக எழும் உணர்வானது மனிதனை அந்தப் பேருண்மை யினை நாடிக் குறிப்பிட்ட சில செயல்களைச் செய்யும் படி தூண்டு கின்றது. புராதன வரலாற்றின்படி நோக்கினால் சமயத்திற்கும் ஒழுக்கத்திற்கும் சமயத்திற்கும் அறத்திற்கும், நெருங்கிய தொடர் பிருத்தலை அவதானிக்கலாம். அற வழக்கங்களைத் தோத்தெடுக்கு முன்னரே மக்கள் சமய நெறியினை அடிப்படையாகக் கொண்ட ஒழுக்கங்களை மேற் கொண்டிருக்க வேண்டுமெனத் தோன்றுகின் றது. மனிதனுக்குச் செய்யும் கடமைகளிலும் இறைவனுக்குச் செய்யும் கடமைகளிலும் பின்னர் ஏற்பட்டவேறுபாடுகளிலிருந்து இவைபுலனாகின்றன. மக்கட்குச் செய்யும் கடமைகள் இறைவனால் ஆணையிடப்பட்டவை எனக் கொண்டால் சமயநெறியும் அறநெறி யும் இன்றுவரை ஒரே கடமைகளையே தம்முள் கொண்டுள்ளன என்பது புலனாகும். ''பலவகைச் சடங்குகளைச் செய்து பலியிட்டு வாழ் வதைவிட நேர்மையாக வாழ்வதும் கருணையை விரும்பு வதுமே இறைவனுக்குப் பிடித்தமானவை''. இது எபிரேய மகான்க ளின் (Hebrew) கூற்று, இதனையே சைவசித்தாந்தமும் 'சைவம்' என்ற தனது பெயரின் ஆரம்பத்திலே கொண்டிருப்பது இவ்வுண்மை யினை எடுத்துக்காட்டும்.

உதாரணமாக உணவுப் பாகுபாட்டினைக் கொண்டு ஒருவரைச் சுட்டும் போதும் பொதுவாக சைவம், அசைவம் என்ற பகுப்பு அங்கு உணர்த்தப்படுகின்றது. கொல்லாமை அல்லது புலால் உண்ணாமை என்கின்ற அறத்தை வற்புறுத்துவதனையே தனது பிரதான ஒழுக்கக்குறிக்கோளாகக் கொண்டுள்ளது சைவசித்தாந்தம் என்பது இதிலிருந்து பெறப்படும். இதன் வழி அன்பு,இரக்கம், கருணை ஜீவ் காருண்யம், அகிம்சை, ஆன்மநேயம் என்ற நல் ஒழுக்கப் பண்புகளைச் சமூகத்தில் வளர்ப்பதனையே அடிப்படை யாகக் கொண்டது சைவசித்தாந்தம் என்பதனால் அதன் சமய நெறி சைவம் எனவும், சைவம் சிவசம்பந்த முடையதனால் சித்தாந்தத் தின் முழுமுதல் சிவம் எனவும், அன்பே சிவமாதலால் சைவம் அன்பு மதம் எனவும் திருமந்திரம் வகுத்துக் காட்டியது. பசுக்களின் துயரம் தாளாது சித்தரான திருமூலர் ''அன்பும் சிவமும் இரண்

டென்பர் அறிவிலர் அன்பே சிவமானது ஆரும் அறிகிலர்'' எனச் சகல உயிர்களிலும் ஜீவகாருண்யத்தை வெளிப்படுத்தினார். சிவனை 'அன்பினில் விளைந்த ஆரமுதே' என்றார் மணிவாசகர்.

சமயம் என்ற நிலையிலே நோக்கினால் மேலை நாட்டறிஞர் சிலர் சமயம் என்பதனை விளக்குமிடத்து சமயம் என்பது உணர்வினால் உந்தப்பட்ட அறம்' என விளக்கியிருப்பதனை மத்யூ ஆர்னால்ட் என்பாரது நூலிலே காணலாம். இது ஆய்ந்தறிய முடியாத பேரிரகசிய உணர்வு எனப்பட்டது. இதனை ஒட்டோ (Otto) என்பார் 'நுமினஸ்' (Numinus) எனக்குறிப்பிடுவர். அதாவது இதன் பொருள் 'தூய்மையின் சன்னிதி முன்தோன்றும் பக்தி உணர்வு' எனப்பட்டது. ஆதிகால மக்களின் கருத்துப்படி இத்தூய் மையின் கண் அறத்தூய்மையும் அடங்கும் என்பர் De Burgh என்ற அறிஞர், எனவே சமயம் என்ற விடத்து நடத்தையையும் அறிவை யும் பரந்த முறையிலே குறிப்பது முக்கியமானதாக அங்கு இடம் பெறுகின்றது. இந்த அறிவைப்பெறவே 'ஒழுக்கம்' என்ற பெயரி லே சில செயல்களைப் பின்பற்றுகிறோம் என்பது டிபேர்க் என்பா ரின் விளக்கமாகும். ஆனால் அறத்தை இவ்வாறு கருதுவது கடின மானது. சமயத்திலே அறிவு என்பது நற்கருமங்களைச் செய்வதற்குத் தேவையான ஒரு கருவியாகவே ஒரோரிடத்தில் பொருள் கொள் ளப்படும். அமைகின்றது ஏனெனில் மேலான அறிவுபடைத்த எவ ரும் விடுதலையடையலாம் எனக் கொள்வோமானால் ஒழுக்கவியற் கோட்பாடுகட்கே அர்த்தமில்லாமற் போய்விடும். காரணம் அறிவாளிகள் பலரில் அயோக்கியர்களும் இருக்கக்கூடும். எனவே தான் சித்தாந்தம் ஞானமுடையார்க்கே இறுதி விடுதலை சாத்தியம் என்ற முடிவிலும் கூட அந்த ஞானமாகிய பேரறிவானது ஒழுக்க நெறிகளின் வாயிலாகவே அடையப்பட்டிருக்க வேண்டும் என்பதனை தனது ஒழுக்கவியற் கோட்பாடுகளிலே வற்புறுத்தியிருக் கின்றது.

## அறமும் ஒழுக்க நேர்மையும் :

இறைவன் ஆதாரமாகக் கொள்வது சமயம் எனவும் மனிதன் தனது வாழ்விற்கு ஆதாரமாகக் கொள்ளவேண்டியது அறம் எனவும் கருதப்படும். அதனால் மனிதனானவன் தனது ஒழுக்க நடத்தை கட்காக அந்த அறத்தினால் கண்காணிக்கப்படுகின்றான் என அர்த்தமாகின்றது. வேதகால ரிதக் கொள்கையும் இதனையே



புலப்படுத்தியது என்றால் தவறாகாது. அறத்தினால் தென்படும் ஒருவகை உணர்வு அல்லது உந்தல் (Urge) இயற்கைக்கப்பாற்பட்ட ஒன்றாகவுமிருக்கலாம். மனச்சான்றைக் கடவுளாகக் கொள்வோர் இதனை ஏற்பதுண்டு. ஒன்றினை ஏற்பதும் மறுப்பதும் அவரவர் தனிப்பட்ட விருப்பு வெறுப்புக்களைச் சார்ந்ததே ஆனால் ஒன்றுமட்டும் உறுதி; நமது இயல்பிலே அடங்கி நம்மை மேல் நிலைக்கும் நன்னிலைக்கும் கொண்டு செல்லும் ஒரு வகை 'உள்ளுணர்வு' பற்றி இயற்கை விதிகள் ஒரு போதும் விளக்க முடியாது. புலனுணர்வுகளால் வரும் திருப்தியை விட நாம் வாழ்விலே ஒரு பெரும் உள்பொருள் பொதித்துள்ளது. நம்மைச் சீராக்கும் ஓர் உணர்வு நம்மிடம் அடங்கியுள்ளது, நாம் புரியும் நற்செயல்கள் வாயிலாக ஒரு குறிக்கோளை அடையுமாறு இவ்வுணர்வு நம்மைத் தூண்டுகின்றது. நம்முள்ளே மாபெரும் மானிடப் பண்பு கிளர்ந்தெழுமிடத்து 'நான்' என்பது அழிந்து விடும் என்பதனை இது உணர்த்தவும் கூடும். ஆதலால் உருவமற்ற ஆணைக்குப் (Law of Karma) பணிவதனை விட நம்மிடத்திலேயே நாம் நம்பிக்கை கொள்வதனை வலியுறுத்துவது 'அறம்' என்பதே பொருத்தமானது. இவ்விடத்திலே சுவாமி விவேகானந்தர் கூற்றி னை நினைவு கூரலாம்'

> ''கடவுளிடம் நம்பிக்கையற்றவனை நாத்திகன் எனப் பழைய மதம் கூறும். தன்னம்பிக்கையற்றவனை நாத்தி கன் என புதிய மதங்கள் கூறும். சொற்களை விதம் வித மாக உச்சரிப்பது- நூல்களை விதம் விதமாக விளக்கு வது-இவையெல்லாம் அறிவாளிகளின் இன்பத்திற்கே உதவும் ஆத்மவிடுதலைக்கு உதவாது''

என்றிவ்வாறு தன்னம்பிக்கையின் அவசியத்தை சுவாமி விவேகா னந்தர் வலியுறுத்தினார்.

இவற்றினைப் பற்றித் தெளிவாக விளக்கக்கூடியது சமயம் தான் ஏனெனில் 'தனியொரு தருமத்திற்கோ அல்லது சத்தியத்திற்கோ அல்லது பரம் பொருளிற்கோ கடமைப்பட்டிருக்கின்றோம் என்பதனை விளக்கக்கூடியது சமயம் ஒன்று தான்'' என்ற திரு. லில்லி வில்லியம் என்பவரது கருத்தும் இங்கு சுட்டிக்காட்டத்தக்கது அதனால் மனித ஆத்மாவிற்கு அழிவில்லை என்ற நம்பிக்கையினை சமயங்களே மக்கட்கு ஊட்டின. அறத்தின் மேலாணையினை (Law

and order) விளங்கிக் கொள்ளும் ஒரு பகுதியாகவே ஒழுக்கவியல் அமைகின்றது. "APTEN' என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது Virtues' என்ற ஆங்கிலச் சொல் 'மேம்பாடு' என்பது இதன் உட்பொருளாகும். எனவே Virtues என்றால் மனித மேம்பாடுகளை அல்லது நல்லொழுக்கத்தைக் குறிக்கும் என்பது அறிஞர் கருத்தாகவுள்ளது. மனிதனின் நேர்மையான பண்பினை யோ அல்லது செயல்முறையிலே காட்டும் நேர்மையினையோ நல்லொழுக்கம் எனக் கருதலாம் என்பர் Laird என்ற அறிஞர். இந்த வகையிலே நல்லொழுக்கம் எனப்படுபவற்றினை மக்கட் சமுதாயம் முழுமைக்கும் வழக்கத்திலே கொன்டு வரும் நிலை 'மரபொழுக் கம்' எனப்படும். இந்த மரபு காலப்போக்கிலே முன்னேற்றக் கருத்துகட்கு இடமளிக்காதவிடத்து மேனிலைக்கு வர முயற்சிப்ப வர்களைத் தடுக்குமிடத்து, அதனால் ஒழுக்கப்பண்புகள் வலு விழந்து போவதுடன் சமுதாயத்திலே பேராபத்தையும் விளைவிப்ப துண்டு இதனால் பகுத்தறிவு (Reson) தான் மனிதனின் முக்கிய ஒழுக்கப்பண்பு என்றார் அரிஸ்டோட்டில் 'அறிவே அறம்' என்ற சோக்கிரதீஸின் அறிவுறுத்தலும் இவ்வாறு மேலான ஒன்றைக் குறிப்பிடுகின்றதென்பதில் சந்தேகமில்லை. ஆதலால் நல்லோரின் வாழ்வைச்சான்றாக கொள்ளுவதும் செயல் முறை அனுபவத்திலே பயிற்சி பெறுவதுமே நன்னடத்தை அல்லது சிறந்த ஒழுக்கத்திற்கு வழிகோலும் எனக் கூறப்படுகின்றது.

ஞானம் அல்லது அறிவு என்பது சைவ சித்தாந்த்திலே வாழும் நெறியைப்பற்றிய ஒரு வாழ்வியல் மார்க்கமென்றே கருதப்பட்டது. அதாவது கருத்திலும் கொள்கையிலும் இருக்கவேண்டிய ஒழுங்கு முறை தகுதியும் பொருத்தமும் பெறவேண்டுமானால் அதனை உணர்வுபூர்வமாகப் பண்படுத்த பழக வேண்டும் அதுவே நிச்சி ரேயஸ் எனப்படும் இறுதி உறுதிப் பொருளின் பயனைப் பெறுவ தற்கான நல்லவழி எனக் கொள்ளப்படுகின்றது. சைவசித்தாந்தத்தின் லட்சியமே மனிதனுக்கு உலகத்துன்பங்களில் இருந்து விடுதலை அளித்து மீட்சி கொடுப்பது தான். விடுதலை என்பதனைச் சுதந்திரம் எனக் கொள்வோமானால் ஆத்ம சுதந்திரம் அடைதலே மெய்யடி யார்களது குறிக்கோளாக காணப்பட்டது. இது அரசியல் பொருளா தார சமூகசுதந்திரங்கட்கும் அப்பாற்பட்டதாக சித்தாந்த சிந்தனை யாளரால் விளக்கப்பட்டது. இத்தகைய விடுதலைப் பேற்றினை ஒருவர் அடையவேண்டுமானால் அவர் எத்தகைய ஒழுக்க நடத்தைகளைப் பின்பற்ற வேண்டும் என்பதனை அறிமுகப்படுத்து



வதே சைவசித்தாந்த ஒழுக்கவியற் கோட்பாட்டின் பிரதான அடிப்படையாக அமைந்துள்ளது.

## நால்வகை ஒழுக்கநெறிகள்

'இவற்றிலே நால்வகை ஒழுக்கநெறிகள் சித்தாந்தத்திலே சிறப்பிடம் பெறுகின்றன. சித்தாந்தமானது ஒழுக்கநெறிகளைப் போதிப்பதிலே தன்னை ஒரு சமயமாகவும், செயல் வழியில் அவற்றினை நடைமுறைப்படுத்தும் ஒரு வாழ்வியலாகவும், இறுதி விடுதலையடைவதிலே அறிவு வழி நின்று ஞானநிலையில் தன்னை ஒரு தத்துவமாகவும் அமைத்துக் கொண்டுள்ள தென்றால் அது மிகையாகாது. அதனால் 'மேன்மை கொள் சைவநீதியிலே' 'மிகுசை வத்துறை விளங்கவும் நான்மறை அறங்கள் ஓங்கவும்' சித்தாந்த நூல்களிலும் சித்தாந்த சாஸ்திரங்களிலும் சைவசித்தாந்தத்தின் ஒழுக்கத்துறைகள் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளன. சிவஞான சித்தியார் பின்வருமாறு இத்துறைகளை அறிமுகம் செய்கின்றது.

> ''சிறப்புடைப் புராணங்கள் உணர்த்தும் வேத சிரப்பொ
> ருளை மிகத் தெளிந்தும் சென்றார், சைவத்திறத்தடைவர்
> அதில் சரியை, கிரியை, யோகம், செலுத்திய பின் ஞானத்
> தாற் சிவனடியைச் சேர்வர்'' *(8.2 263)*

என்பதனால் முற்சொல்லப்பட்ட நான்கு மார்க்கங்களும் நால்வகை ஒழுக்க நெறிகளாகச் சித்தாந்தத்திலே போற்றப்படுகின்றன. இதனைச் சிவாகமங்கள் இருபத்தெட்டும் 'நான்கு பாதங்கள்' எனச் சிறப்பித்துள்ளன பாதம் என்பது நடத்தல் என்ற தொழிலைக் குறிக்கும். இதிலிருந்து நடத்தை எனப்படும் ஒழுக்கம் என்பது எவ்வாறு பின்பற்றி நடத்தற்குரியது என்பதனைச் சிவாகம நாற்பாதங்களும் சித்தாந்த சாஸ்திரங்களும் எடுத்துக்கூறியுள்ளன எனக் குறிப்பிடலாம்.

ஒழுக்கம், ஒழுகுதல், ஒழுகலாறு, எனவரும் சொற்களை நோக் கினால் அவை குறித்த ஒரு நிலையிற் தம்மைச் செலுத்துதல் என்ப தனைக் குறிப்பதாக இருப்பதனைக் காணலாம், ஆற்று நீரை வரம்பு கட்டி வயலுக்குச் செலுத்துவது போலச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நால்வகை ஒழுக்க வரம்புகள் மூலமாக மனித வாழ்வினைச் செம்மைப்படுத்துதல் சிறந்த உபாயம் எனச் சிவாக மங்கள் உணர்த்துகின்றன. 'மனம் போன போக்கிலே செல்லாது

குறித்த ஒரு பாதையிலே தன்னைச் செலுத்துவதனையே இவ்வொழுக்க நிலைப்பாடுகள் குறித்து நிற்கின்றன.

'சங்கரனையடையும் நன்மார்க்கம் நாலவை ஞானயோக
நற்கிரியா சரியா வென நவிற்றுவதும் செய்வர்'

என்ற சித்தியார் கூற்றிற்கு அமைய சைவ நாயன்மார்களான அப்பர் சரியா மார்கக்த்திலும், சம்பந்தர் கிரியா மார்க்கத்திலும் சுந்தரர் யோக மார்க்கத்திலும் மாணிக்கவாசகர் ஞான மார்க்கத்திலும் வாழ்ந்து காட்டிய ஒழுக்க முறைகள் சைவத்திருமுறைகளில் பெரிதும் போற்றப்படுவனவாகும்.

இந்த ஒழுக்கநெறிகள் எவற்றினை வெளிப்படுத்துகின்றன என்பதனைத் திருமந்திரமும் பின்வருமாறு வகைப்படுத்தும்.

''சார்ந்த மெய்ஞானத்தோர் தானவனாயினோர்,
சேர்ந்த வெண்யோகத்தோர் சித்தர் சமாதியோர்,
ஆய்ந்தகிரியையோர் அர்ச்சனை தப்பாதோர்,
நேர்ந்த சரியையோர் நீள் நிலத்தோரே''

எனக்குறித்துக்காட்டியது. பொதுவாக இறைவனின் ஆற்றல் சக்தி இரண்டு வகைப்படும் என சித்தாந்தம் விளக்கும். ஒன்று செயல், மற்றது அறிவு. இது கிரியா சக்தி எனவும் ஞான சக்தி எனவும் கூறப்படும், இவ்வாறு சித்தாந்தம் செயல்வழியினை சரியை, கிரியை என்ற முதலிரு பாதைகளிலும் அறிவு வழியினை யோகம், ஞானம் என்ற இரு பாதைகளிலும் வைத்து வழிப்படுத்துவதாகக் காணப்படுகின்றது. மேலும்

''வாழ்த்தவாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்ததலைவனை
சூழ்த்தமாமலர் தூவித்துதியாதே
வீழ்த்தவாவினையேன் நெடும்காலமே'

என்ற பாடலிலே சரியையின் நிலைப்பாட்டினை அப்பரும் 'பூவா மலர் கொண்டடியார் தொழுவார்' எனக் கிரியை நிலைப்பாட்டை சம்பந்தரும், 'எத்தால் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை' என்பதால் யோக நிலைப்பாட்டை சுந்தரரும் 'சிவன் அவன் என் சிந்தையுள் நின்றான்' என ஞான நிலப்பாட்டை மணிவாசகரும் செப்பிவைத்தனர். மும்மல அழுக்கும் நீங்கி 'சுத்தசைதன்யவஸ்து'



எனப்படும் ஞான சொருப நிலையினையடைதலே இவற்றின் நோக்கமாகும் என்பதனை,

'சரியையில் ஆணவம் கால், சரிந்திடும்
கிரியையில் அரைமலம் கெடுதியுற்றிடும்
மருவு யோகத்தில் முக்கால் மடிந்திடும்
விரி சிவஞானத்தில் முற்றும் வியுமே'

எனச் சித்தாந்த நூல்கள் தெளிவுபடுத்தின. அத்துடன் இந்த நால்வகை ஒழுக்க நெறிகளிலும் ஞானமே அனைத்தினது குறிக்கோள் என்பதனையும் சரியையிற் சரியை முதல் ஞானத்தில் ஞான மீறக 32 உபாயங்களாகச் சாத்திர நூல்கள் வகுத்துத்தந்துள்ளன.

உதாரணமாக அப்பர் சுவாமிகள் சரியையில் நிலை பெற்றவராயினும் யோக மார்க்கத்திலும் தேர்ந்தவர் என்பது 'கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர் ஒடும் செம்பொன்னும் ஒக்கநோக்குவர்' என்ற பெரிய புராண கூற்றால் இனிது விளங்கும். இதுவே கீதை புகட்டும் 'சமத்துவம் யோகம்' என்ற மனச்சமநிலையாகும், பற்று விடுதலும் பாசநீக்கமும் யோக நிலையாகும். விடுபடுதல் மட்டுமல்ல மீண்டும் பரந்த ஞானத்துடன் தன்னை இணைத்துக் கொள்வதும் யோகத்தின் மறுபக்கமாகும். Re-Liger என்ற கிரேக்க சொல்லிலிருந்து வந்ததே Religion என்ற ஆங்கிலச் சொல்லாகும் அதன் பொருள் 'மீண்டும் இணைதல்' என்பதனைக் குறிக்கும். சமயம் என்பதன் பொருள் இதுவென அகராதியும் கூறும். உலகப் பந்தங்களிலிருந்து தன்னை விடுவித்த மனிதன் தான் எந்த நிலையில் எங்கிருந்து வந்தானோ அதனுடன் மீண்டும் தன்னை இணைத்துக் கொள்ளுதல் என்பதே சமயம் காட்டும் உட்பொருளாகும். இவ்வாறு இணைகின்ற பாதைகள் எவை என்பதனையே சித்தாந்தம் நாற்பாதங்கள் வாயிலாகக் காட்டியுள்ளது

## வழிபாட்டு நெறி :

சிவாகமங்களில் சிவவழிபாடானது ஆன்மார்த்தம், பரார்த்தம் என இருவகைப்படுத்தப்பட்டுள்ளன. ஆன்மார்த்தமானது காமிய வழிபாடாகும். தனக்கென சில ஒழுக்கமுறைகளை இறைவழிபாட்டிலே தேர்ந்து கொள்ளுதல் எனலாம். வழிபடுதல், வரம்கேட்டல் வணங்குதல், பிரார்த்தனை செய்தல், நித்யபூசை, திருவிளக்கிடுதல், திருநந்தவனம் அமைத்தல், திருக்குளம் செய்வித்தல் முதலிய

சிவாலயத்தொண்டுகளையும் தனிமனித வழிபாட்டு நெறியானது உள்ளடக்கியுள்ளது. பரார்த்தமாவது கூட்டு வழிபாடு அல்லது நிஷ்காமிய வழிபாடு எனலாம். இவற்றினையே சிவாலயங்கள் நித்ய, நைமித்ய பூசைக்காலங்களில் மேற்கொண்டு வருகின்றன. நித்ய நைமித்ய பூசைகள், திருவிழாக்கள் ஆலய மகோற்சவங்கள் முதலியன இவற்றிலே அடங்கும். இவையிரண்டும் இகபர நன்மைகட்காக வீட்டிலும் ஆலயங்களிலும் மக்களால் பின்பற்றப் படும் வழிபாட்டு ஒழுக்கக்கிரமங்களாக உள்ளன.

ஆலயங்களையும் மக்களையும் ஒழுக்க நெறியில் இணைக்கும் சாதனங்களில் விரதக்கிரியைகள் பெரும் பங்குவகிக்கின்றன. முக்கியமாக விநாயக சஷ்டி, கந்தசஷ்டி, சிவராத்திரி, நவராத்திரி, ஏகாதசி, பிரதோஷம், சோமவாரம், திருவெம்பாவை போன்றனவும் வரலச்சுமிவிரதம், கௌரிவிரதம் பௌர்ணமிபூசை முதலியனவும் விரத ஒழுக்கங்களிலே சிறப்பிடம் பெற்றுள்ளன. விரதங்களிலுள்ள ஒழுக்க நியமங்களுள் மிகவும் முக்கியமானது புறத்தூய்மை, அகத்தூய்மை என்பனவாகும். அவற்றுள் ஆசாரம், அனுட்டானம், வீபூதி, உருத்திராக்கம், காவியுடை முதலிய சிவசின்னங்களைத் தரித்தல், பஞ்சபுராணம் ஓதுதல், திருமுறை ஓதல், புராணபடனம் செய்தல், என்பன விரதிகட்குரிய ஒழுக்கமுறைகளுள் சிறப்பாகப் பின்பற்றப்படுதற்குரியவை எனச் சிவாகமங்கள் கூறும்.

> ''விரதம் என்பது மனம் பொறி வழிபோகாது நிற்றல் பொருட்டு உணவை விடுத்தேனும் சுருக்கியேனும் மனம், வாக்கு, காயம் மூன்றினாலும் கடவுளை விதிப்படி மெய்யன்புடன் விசேடமாக வழிபடுதலேயாகும்''

என்பர் நாவலர் பெருமான். இவ்வாறு திரிகரண சுத்தி இருந்தாலே விரதங்களினாலோ ஏனைய வழிபாடுகளினாலோ காரிய சித்தியுண்டாகும் என்பது சாஸ்திரங்களின் கூற்றாகும் இவ்வழிபாட்டு நெறிகளாவன ஒரு வகையில் சரியை கிரியை என்பவற்றினை உள்ளடக்கியன என்றே கூறலாம். அதனால் தான்

> ''சரியை கிரியை யோகம் செய்துழி நன்நெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லாது மோட்சத்தைக் கொடாவாம்''

எனச் சிவஞான போதம் உணர்த்திற்று.



## குருவழிபாடும் பஞ்சாட்சர மகிமையும்

வழிபாட்டு ஒழுக்க நெறியிலே பஞ்சாட்சர ஜெபம் மிகமுக்கியமானதாகக்கொள்ளப்படும். இதற்குரியவாறு சைவர்கள் ஒவ்வொருவரும் குறைந்தபட்சம் சமயதீட்சையாவது பெற்றிருக்கவேண்டும் எனச் சித்தாந்தசாஸ்திரங்கள் உணர்த்தியுள்ளன. குருவழிபாடு இத்தீட்சை முறையுடன் நெருங்கிய தொடர்புடையதாகும். குரு, லிங்க, சங்கம சேவைகளும் இவ்வாறு சைவசித்தாந்த ஒழுக்க நெறியில் முக்கியம் பெற்றுள்ளன. இவை பற்றிச் சித்தாந்த நூல்களில் சாதனை இயல், பயன் இயல் என்பவற்றிலே விரிவான விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. ''நாடும் நகரமும் நற்திருக்கோயிலும், தேடித்திரிந்து சிவபெருமான் என்று பாடுமின், பாடிப்பணிமின்'' என்றார் திருமூலர்

> ''மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
> ஆலயம் தானும் அரன் எனத் தொழமே''

எனச் சிவஞானபோதமும் திருமூலர் கருத்தினை மீண்டும் உறுதிப் படுத்தியது. சிவநிந்தை குருநிந்தை, மிகப் பெரிய பாவம் என்பதனையும்,

> ''பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
> சித்தம் கலங்கிடச் சிதைவுகள் செய்தவர்
> அந்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாய்ந்திடும்...''

என்பது திருமந்திரப் பாடலாகும். இக்கருத்தினை ''மன்னுமருட் சத்தி குருவாகி வந்து பல மகற்றித் தானாக்கி'' (8 ம் சூ) என்று சித்தியர் குறிப்பிடும். குருமூர்த்தமானது தென்னாட்டுக் கோவில்களிலேயே எங்குமில்லாதவாறு வழிபாட்டு நெறியிலும் வேருன்றியுள்ளது. தட்சணாமூர்த்தி மூர்த்தமானது சிவாலயங்களிலும் முருகக் கடவுளின் சிவகுருநாத மூர்த்தத்திற்குக் கும்பகோணம் சுவாமிமலையும் பெயர் பெற்றவையாகும். மெய்கண்டார் சந்தானபரம்பரையிலும் திருக்கைலாய ஞானபரம்பரையினரின் குருமரபு வழி வழி போற்றப்பட்டு வருவதற்குச் சித்தாந்த சாஸ்திரங்களே சிறந்த உதாரணங்களாகும்.

சமயதீட்சை என்ற ஒழுக்கமானது இத்தகைய ஞான குருவிடமிருந்தே பெறுவது அவசியமானது எனச் சித்தாந்தம் கூறும்.

குருவானவர் மனிதர்களை ஞான நிலைப்படுத்தும் பக்குவம் வந்ததும் தீட்சை மூலம் அத்தகைய ஒழுக்கசீலர்களை ஆட்கொள்வ ரென்பது சைவசித்திருமுறைகளிலும் பரவலாகக்காணப்படும் விடயமாகும். இவ்வாறு ஏழுவகைத் தீட்சைமுறைகளைச் சித்தாந்த நூல்கள் அறிமுகம் செய்திருக்கின்றன. அவையாவன நயன, பரிச, மானச, வாசக, சாத்திர, யோக, ஒளத்திரி தீட்சை என ஏழுவகைப் படுகின்றன. தீட்சைபெற்றவர்களால் சிவபூசை முதலியனவும் சந்தியாவந்தனம் முதலிய விதிகளையும் ஒழுங்காகப் பின்பற்றி ஒழுகத்தக்கனவாம் எனச் சித்தாந்தம் கூறும். இவற்றிலே பஞ்சாட் சரம் ஓதுதல்' சிறப்பான விதியாகக் கொள்ளப்படுகின்றது.

''உராத்துணைத் தேர்த்தெனப் பாசம் ஒருவ - தண்ணிழ
லாம் பதிவிதி எண்ணும் அஞ்செழுத்தே''

என்ற சிவஞான போதக் கூற்றின்படி பஞ்சாட்சரத்தை உச்சரிப்ப தனால் யோக நிலையிற் சேர்ந்து சமாதி நிலையிலே சிவோகம் பாவனை கைகூடும் எனச் சித்தியாரும் பின்வருமாறு கூறும்.

''அஞ்செழுத்தால் ஐங்கர நியாசம் ஆன்மாவில்
அஞ்செழுத்தால் இதயத்திலர்சிச்சித்தல்
அஞ்செழுத்தில் குண்டலினியில் அனல் ஒம்பி......''

சோ+அகம் என்றபடி நான்+அவன் என்னாது சிவோகம் பாவனையிலே'' சிவம் நான் எனப் பாவனை செய்வது அவசியம் எனப்பட்டது.

''பண்டை நான்மறைகள் அது நானே எனப் பாவிக்கச்
சொன்னது இப்பாவகத்தைத்தானே''

எனச் சித்தியாரில் சிவோகம் பாவனையின் பொருள் விளக்கம் விபரிக்கப்பட்டுள்ளது. 'நமச்சிவாயக்கனி மென்று தின்றால் அது மெத்தென்றிருக்கும்' என்றது திருமந்திரம். அதனால் 'நன்நெறிக் குய்ப்பது நமசிவாயவே'' எனச் சம்பந்தரும், 'நமசிவாயவே நன்னெறிகாட்டுமே' என அப்பரும், 'நற்றவா உனை நான் மறக்கி னும் சொல்லுநா நமச்சிவாயவே' எனச் சுத்தரரும் 'நமசிவாய வாழ்க' என மணிவாசகரும் இச் சிவோகம் பாவனையின் பொரு ளுணர்ந்து சொல்லிச் சென்றனர். ''பொருளுணந்து சொல்வர் செல் வர் சிவனடிக்கீழ்'' என்பது மணிவாசகர் திருவாக்காகும். எனவே



'பொருளுணர்ந்து சொல்லார் செல்லார்' என்பதும் இதிலிருந்து பெறப்படும் ஒரு விடயம் எனவும் கருத இடமுண்டு. அதனால் திருவருட் பயனும் 'அஞ்செழுத்தருள் நிலை' என ஒரு தனி அதிகாரத்திலே அதன் பெருமைகளை விளக்கியது இப்பஞ்சாட்சரம் ஓதும் முறை இரண்டு வகையாகக் கூறப்பட்டுள்ளது. நமசிவாய என்ற தூலபஞ்சாட்சரம் இல்லறத்தாருக்கும் 'சிவாயநம' என்ற சூக்குமபஞ்சாட்சரம் துறவறத்தாருக்குமாகப் பேசப்பட்டுள்ளன. 'சிவாயசிவ' என்னும் அதிசூக்கும பஞ்சாட்சரம் என்பது சித்தர் கட்கும் சீவன் முதகர்கட்கும் சிறப்பானதாகச் சித்தாந்தம் குறிப் பிட்டு தனிஞான நிலைக்கு முதன்மையளிப்பதனையும் காணமுடி கின்றது. ''சிவாய சிவ சிவ' என்றே 'சிந்தை அவாயம் கெட நிற்றல் ஆனத்தமாமே' என்ற திருமூலர் கூற்றும் இதனை மெய்ப்பிக்கும்.

''சிவாயநம என்று சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒரு
நாளுமில்லை''

என்ற ஒளவையாரின் வாக்கும் இங்கு நினைவு கூரத்தக்கது அதனால் சைவ சித்தாந்த ஒழுக்கநெறிகள் பக்தர்கட்கும், பொது மக்கட்கும், சித்தர்கட்குமாக தனித்தனி எளிமைப்படுத்தப்பட்டிருப்பதனை இவை புலப்படுத்தும்.

இத்தகைய ஒழுக்க நெறிகளைப் பின்பற்றுவோர் அடையும் பலன் யாதெனில் நால்வகை முத்திப்பேறுகள் எனச் சைவசித்தாந் தம் கூறும்.

''பாசம் பசுவானதாகும் சாலோகம்,
பாசம் அருளானதாகும் சாமீபம்,
பாசம் சிவமானதாகும் சாரூபம்,
பாசம் கரை பதி சாயுச்சிமே''

என்பது திருமந்திரக்கூற்றாகும். நால்வகை முத்திப் பேறுகளும் பதமுத்தி, பரமுத்தி என இரண்டுவகையில் அமைந்துள்ளன. சாலோக, சாமீப, சாருப முத்திகள் சிவலோக பதவிகளில் கிடைப் பவை எனவும் சிவசாயுச்சிய முத்தி சிவனுடன் அத்துவிதக்கலப்பு நிலையில் உண்டாவது எனவும் இது பரமுத்தி எனவும் நூல்கள் விளக்கும். பதமுத்தியடைந்தவர்களும் பின்னால் ஏற்படும் ஞான விளக்கநிலையிலே நிறைவடைந்ததும் பரமுத்திக்கு ஆளாகின்றார் கள் என்பது ரௌரவாகமத்தின் கருத்தாகும். பதமுத்தி, பரமுத்தி

நிலைகள் அவரவர் ஒழுக்க நிலையினையும் ஆன்ம பக்குவ மலபரிபாக நிலைகட்கேற்ப அமையுமே தவிர முத்தி நிலை எனப்படும் விடுதலைப்பேற்றிலே பேதமென்றாகாது எனக் கிரணாகமமும் கூறும்.

''யாவருக்கும் அருள் செய்பவராகிய சிவன் அறிவையு டைய ஆன்மபக்குவமுடையோர்க்கே ஞானம் நல்குவா னேயன்றி உயிர்களின் சாதியை உடைய உடலுக்கல்ல''

எனக் கிரணாகமதீட்சாகன்ம படலம் தரும் விளக்கத்தை இங்கு குறிப்பிடுவது பொருத்தமானதே. ஞானம் என்பது பொய், தவறு முதலிய குற்றங்களினின்றும் நீங்கிய அறிவாகும் எனப்பௌஷ்கரம் கூறும். தத்துவஞானத்திற்குரியவர்கட்கும் கிரியை முதலிய நெறிகட்குரியவர்கட்கும் அவற்றின் வழியே வீடு பேறளிக்கப்படும் இதன் காரணமாகவே நியமதத்துவம் வேண்டப்பட்டது. வகுப்பிலே ஆசிரியர் எல்லா மாணவர்கட்கும் ஒரே விதமாகவே கற்பிப்பதுண்டு பரீட்சையிலே வினாக்களும் ஒரே விதமாகவே கேட்கப்படுவதுண்டு. ஆனால் சிலர் திறமைச் சித்தியும் சிலர் சதாரணசித்தியும், சிலர் சித்தியடையாமலும் போவதுண்டு. அது ஆசிரியரின் கற்பிக்கும் ஆற்றலைப் பொறுத்தல்ல. மாணவர்களின் கிரகிக்கும் ஆற்றலையும் ஒழுங்கான வரவையும் பொறுத்ததாகும். இதனைப் போன்றதே முத்தி நிலைப்பாடுகளுமாகும் என்பது இங்கு பெறப்படும். சைவசித்தாந்த முத்தி 'பரமுத்தி' ஒன்று தான். பதமுத்திகளாவன பர முத்திக்கான ஒழுக்கப்பாதைகளேயாகும்.

இவ்வாறு ஆத்மீக ஒழுக்கக் கல்வி நிலைங்களாக நால்வகை பயிற்சி நிலையங்களும் அமைத்துள்ளன. ஒழுக்கக் கல்வி பற்றிய கணிப்பிலே சுவாமி விவேகானந்தரின் பின்வரும் கருத்து சிறப் பானது ''கல்வி என்பது மூளைக்குள் பலவிடயங்களைப் போட்டுத் திணித்து வைப்பதல்ல. நல்லொழுக்கத்தை வளர்க்கக்கூடிய கருத்துக்களை கிரகித்து அதனை வாழ்விலும் நடத்தையிலும் ஊடுருவி நிற்கச் செய்தால் ஒரு பெரிய நூல் நிலையம் முழுவதை யும் மனப்பாடம் செய்தவனைவிட இப்படிப்பட்டவர்களே அதிகம் கற்றவர்களாக இருப்பதைக் காணலாம். பொது மக்களை வாழ்க்கைப் போராட்டத்திற்கு தகுதி பெற்றதாக இருக்கச் செய்யாத கல்வி உறுதியான நல்லொழுக்கத்தையும் பிறர்க்குதவும் ஊக்கத்தையும் மன உறுதியையும் வெளிப்படுத்தப்பயன்படாத



கல்வி அதனைக் கல்வி என்று சொல்லுவதே பொருந்துமா?'' என்பது சுவாமிகளின் சந்தேகம், நாயன்மார்களிடம் இத்தகைய மிகுந்த ஒழுக்கப்பணிவு காணப்பட்டது. பணிவு என்பதும் நற்பண்புகளில் ஒன்றாக எண்ணப்பட்டது. மனிதர்களிற் சிலரால் இத்தகையோரிடம் காணப்படும் பணிவு, தன்னடக்கம் என்பன அடிமைத்தனமாகவும் கோழைத்தனமாகவும் கூட விமர்சிக்கப்படு வதுண்டு. அடக்கம் என்பது அடிமைத்தனமன்று. மன உறுதி, வைராக்கியம் இவற்றினைப் பேணியொழுகுதலையே தன்னடக்கம் என்பது குறிக்கும் எனலாம். அத்துடன் தற்துணிவு நிறைந்தவர்கள் இன்னும் சொல்லப் போனால் அஞ்சாமை, ஆன்மவீரம், தார்மீகக் கோபம் என்றும் கூட இவற்றிற்குப் பொருள் கொள்ளலாம். இது ஆணவம், அகங்காரம் தற்செருக்கு என்ற இயல்புகட்கு முற்றிலும் மாறானது. ஒழுக்கநேர்மை இருப்பவர்களிடம் இத்தகைய இயல்புகள் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் அதனால் தான் பல்லவ மன்னன் ஆணைக்குப் பணியவேண்டிய அவசியம் தனக்கில்லை என்பதனை 'நாமாக்கும் குடியல்லோம் (ஏனெனில்) தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான சங்கரனுக் ஆளானவர் பொய்மைக்கு அடிபணிவதில்லை' என வாழ்ந்து காட்டினார் அப்பர் சுவாமிகள்.

''நிமிர்ந்த நடையும் நேர் கொண்டபார்வையும்
திமிர்த்த ஞானச் செருக்கு முள்ளதால்
செம்மைமாதர் திறம்புவதில்லையாம்''

என்ற பாரதி வாக்கு இந்த ஆன்மவீரத்தை இன்னோர் வகையில் வெளிப்படுத்தியுள்ளதெனலாம்.

## கருமக் கொள்கையும் அறவியலும்

சைவசித்தாந்தத்திலே அடுத்து முக்கியம் பெறுவது கன்மக் கோட்பாடு எனலாம். இக்கொள்கை தனக்கெனத் தனியான முக்கியத்துவத்தைக் கொண்டதுடன் செயல் வழியிலே மறுபிறவிக் கோட்பாட்டுடனும், அறவியலுடனும் பின்னிப்பிணைணந்துள்ளது. இவ்வுலகமானது நல்லவர்களை மட்டு மன்றிக் கொடியோர்க ளையும் துஷ்டர்களையும் கூடக் கொண்டுள்ளது. எனவே எளியாரை வலியாரிடமிருந்து காப்பாற்றுவதும் அவசியமாகின்றது.

''விஞ்ஞான அறிவின் வளர்ச்சியினால் தூண்டப்பட்ட அகந்தையினாலும், அறிவியல் வளர்ச்சிப் பெருமையி

னாலும் முழுமையான அறிவினை வளர்த்துக் கொள்ளும் முன்னரே எல்லாம் அறிந்து விட்டோம் என்ற தற்பெருமையினாலும் எதையுமே எள்ளி நகையாடித் தூக்கியெறிந்து கிண்டல் செய்யும் மனோபாவம் உள்ளவர்கட்கு மத்தியிலே தன்வயமிழந்து சஞ்சலத்தினால் அலைந்து தனித்துத் தவிக்கும் நம்பிக்கையுடைய மக்களைக் காப்பாற்றவே கீதை எழுந்தது''

என்கிறது சனாதன சாரதி இதழ். அதனால் அரசினால் இயற்றப்படும் சட்டங்களும் போதிய பாதுகாப்பு வழங்கமுடியாத போது சட்டங்களையும் மீறிக் குற்றம் புரிபவர்கள் இருக்கின்ற வரையிலும் ''இவ்வுலக வாழ்விலே செய்யப்படும் செயல்கட்குரிய பலன்கள் செய்தவனைத் தவறாது சென்று பலனளிக்கும்'' என வற்புறுத்திக் கூறுவதன் வழியாக மறுபிறவி சொர்க்கம், நரகம் பற்றிய கருத்துக்களை முன்வைப்பதன் மூலமும் துஷ்டச் செயல்களைச் செய்வோரை அச்சுறுத்தி சமூகத்திற்கும் நாட்டிற்கும் பயனுள்ள ஒழுக்கவாழ்வை வாழச் செய்ய முடியும் என்று சித்தாந்த சிந்தனையாளர்கள் நம்பினர்.

''தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத் தொன்றும்
துன்னற் தீவினைப்பால்''

என்றவாறு தன்னைத்தான் நேசிப்பவன் பிறர்க்குத்தீவினை நினைக்கமாட்டான் என்பதனூடாக மிகப் பெரிய சமூக ஒழுக்கம் இவ்வாறு முன்வைக்கப்பட்டது.

ஆகவே அடுத்துக் கர்மா என்ற சொல்லின் பொருளை நோக்கினால் 'செயல்' என்பது அர்த்தமாகும். கிரியை என்பதே கர்மா என்ற சொல்லின் அர்த்தமாகும் சிறு ஒவ்வொரு செயலும் ஒரு நிச்சயமான பலனை உருவாக்கும் - அதிலிருந்து எவரும் தப்ப முடியாது. இது கர்மக் கோட்பாட்டின் அடிப்படை நியதியாகவுள்ளது ஒவ்வொரு தாக்கத்திற்கும் சமனும் எதிருமான மறு தாக்கமுண்டு (Every action has a reaction) என்ற நியூற்றனின் மூன்றாவது இயக்க விதி பௌதிகத்திற்கு மட்டுமல்ல கருமக் கொள்கைக்கும் பொருந்துவது எனலாம். காரணகாரியத் தொடர்பு பற்றிய இவ்விரக்க மற்ற விதியைக் கன்மக் கொள்கை உளவியல், ஒழுக்கவியல் செயல் எல்லைவரை விரிவுபடுத்தியுள்ளது. இது ஓர் யந்திரரீதியான விதியல்ல அது ஒழுக்கம் அல்லது ஆன்மீகத்தேவை எனப்படும்.



எவ்வாறாயினும் அவதானிக்கப்பட்ட உண்மைகளிலிருந்து உய்த்துணரப்பட்ட தென்றோ செயல் முறையில் சான்றாதாரம் காட்டத்தக்கதென்றோ உறுதி கூறுவது கடினமாகும். இது ஒரு புனைவுகோள் அல்லது அனுமானம் எனவும் கூறலாம். இவ்விடயம் தொடர்பாக மற்றய சாதுர்யமில்லாத குழந்தைத் தனமான கோட்பாடுகளை விட இது அதிகளவு சிறப்பு வாய்ந்தது என்பது அறிஞர் பலரது கருத்தாகும்.

மேலும் கன்மக் கொள்கையானது சித்தாந்தத்திலே இரண்டு விதமாகப் பேசப்படுகின்றது. ஒன்று கருமம் இது செயல் முறையிலே தொழிற்படுதலைக் குறிக்கும். மேற் குறிப்பிட்டவாறு ஒவ்வொரு செயலும் ஒரு பலனைக் கொண்டதாக அமையுமிடத்து அந்தப் பயனிலே பற்றில்லாமல் செயலாற்றுமிடத்து அது கருமமாகவும் குறித்த பயனில் பற்றுவைத்து செயலாற்றுமிடத்து அது கன்மமாகவும் பொருள் கொள்ளப்படுகின்றது. பற்றில்லாத செயலினால் அதன் விளைவுகட்கு ஒருவன் பொறுப்பாளியாவதில்லை. பயனில் பற்றுவைப்பது அச் செயலுக்கு அவனைப் பொறுப்பாளியாக்குகிறது. எனவே எதிர் விளைவுகள் சித்தாந்தக் கோட்பாட்டிலே இருவினைக் கோட்பாடாக உருவாக்கம் பெற்றன. நல்வினை தீவினை எனப்பட்டன. அவை புண்ணியம் - பாவம் எனவும் விளக்கமுற்றன.

''இன்பம் இடர் என்று இரண்டுற வைத்தது முன்பவர்
செய்கையினாலே முடிந்தது''

என்ற திருமந்திரக் கருத்து இதனை வலியுறுத்தியது. ''அறம் பாவம் என்னும் அரும் கயிற்றால் கட்டி'' என்றார் மணிவாசகர், இந்த வகையிலே கன்மக் கொள்கையானது ஒழுக்க நெறியூடாக அறவியலுடன் தொடர்புபடுகின்றமையினையும் அவதானிக்கலாம். இரண்டுமே மனிதனது நடத்தையிலே அக்கறை கொள்கின்றது. நடத்தையிலே எது நல்லது, சரியானது, என்பதனைக் குறித்துக் காட்டுவதே அறவியலாயின் நன்மை, தீமை, சரி, பிழை ஆகியவற்றின் நோக்கிலிருந்து தீர்மானிக்கப்பட்ட மனித நடத்தையினை அறவியல் கவனத்திற் கொள்கின்றது.

Gut என்ற ஜேர்மனியச் சொல்லிருந்து உருவாகிய Good என்ற ஆங்கிலச் சொல் முடிவுக்கு அல்லது நோக்கத்திற்கு பயன்படக் கூடிய ஒன்றைக்குறிக்கும். 'விதி முறை' அல்லது 'நேரான' எனப்

பொருள்படும் rectus என்ற லத்தீன் சொல்லிருந்து 'சரி' எனப்பொருள்படும் Right என்ற ஆங்கிலச் சொல் உருவானது. பொதுவாக நடத்தையை நல்லதாக அல்லது சரியானதாகச் செய்யும் அகநோக்கு நடைமுறைகளை அறவியல் கருத்தில் கொள்கின்றது. எது நல்லது சரியானது எனப்பகுத்துணரும் அறிவினை மனிதன் கொண்டுள்ளான். இப்பகுத்துணரும் அறிவே அவனை மிருகத்திடமிருந்து வேறுபடுத்தும்.

''பசி, உறக்கம், பயம், பாலுணர்வு ஆகியன மனிதர்கட்கும் மிருகங்கட்கும் பொது வானவை ஞானமே மனிதனுக்குச் சிறப்பாக உரியது அதில் அவன் குறைவுடையவனாயின் மிருகங்களில் ஒருவனாவான். ஞானமே மனிதனை விலங்கு நிலையின்றின்று வேறுபடுத்திக் காட்டுவதாகும்''

என்ற இதோபதேசப் பாடல் மனிதனது ஆற்றலையும் சரியானவற்றை, நல்லவற்றை வேறுபடுத்தியறியும் அறிவையும் அவன் தனக்கும் சமூகத்திற்கும் செய்ய வேண்டிய கடமைகளையும் நினைவூட்டுகின்றது. கன்மக் கொள்கையூடாகச் சித்தாந்தம் இத்தகைய அறஒழுக்கத்தையும் நிலை பெறச் செய்ய விரும்புகின்றது.

அதனால் ஒருவன் தனது செயல்களின்றும் தப்பமுடியாது எனவும், செயல்களின் தரத்திற்கேற்பவே மறுபிறவியை அவன் பெறுவான் என மீண்டும் மீண்டும் வலியுறுத்திச் செயல்களின் தரத்தை உயர்த்த வேண்டியதன் அவசியத்தை சைவசித்தாந்த நூல்கள் சுட்டிக்காட்டுகின்றன. ஒரு சரியீட்டுக் கோட்பாடாகிய (Law of Compensation) 'கர்மம் தவறாது நீதி வழங்க வல்லது' என அழுத்திக் கூறுவதன் மூலம் மனித நடத்தையை ஒழுங்குபடுத்துவதே சித்தாந்தத்தின் தலையாய குறிக்கோளாக இருக்கின்றது. சைவ சித்தாந்தக் கன்மக் கொள்கையினை சுருக்கமாகப் பின்வருமாறு கூறலாம். சித்தாந்தம் கன்மக் கொள்கையின் வழியாக அறநெறிக்கும் ஒழுக்கவியலுக்கும் முக்கியத்துவம் கொடுத்து இல்வாழ்வினை முறைப்படி வாழ்ந்து பாசபந்தங்களிலிருந்தும் விடுபட்டு விடுதலையடைவதனையே குறிக்கோளாக் கொண்டுள்ளது என்பதே அதன் தாற்பரியமாகும்.

பாசங்களுள் நிலைபேறுடையவற்றிலே ஒன்றான கன்மம் அநாதியானது என்பதனை ஏற்றுக் கொள்ளும் சித்தாந்தம் அதனை மூன்று விதமாகப் குறிப்பிடுகின்றது.



''உயிருண்டாவே உளது மலமலமுளதா வொழிந்த
வெல்லாம் நெல்லின்முளை தவிடுமி போல்
அநாதியாக நிறுத்திடும் இது சைவம்''

என்பது சிவப்பிரகாசச் செய்யுளாகும். இவை அநாதி எனக் குறிப்பிடும். முளை - கன்மம், தவிடு - மாயை, உமி - ஆணவம், அரிசி - ஆன்மாவுக்குமாக உவமிக்கப்பட்டது. கன்மம் - சஞ்சிதம், பிரார்த்துவம், ஆகாமியம் எனப்படும் மூன்றிலே சஞ்சிதம் பழவினை இதற்கீடாகவே ஆன்மாக்கள் சரீரங்களை அடையும். பிரார்த்தமாவது சுகதுக்கங்கட்கீடான விடயங்களை சஞ்சித கன்மத்தின் ஒரு பகுதியை எடுத்துவரும் பிறவியில் அனுபவத்திற்கு விடுதல் 'நிகழ்வினை' எனப்படும். ஆகாமியம் பிறவி எடுத்த பின்னர் ஒருவன் செய்யும் புதுவினை அல்லது, எதிர்வினை எனப்படும். பல பிறவிகளில் ஈட்டப்பட்ட இரு வினைப் பயன்களின் தொகுப்பு சஞ்சிதம். இதிலிருந்து இப் பிறவிக்கு வழங்கப்பட்டது பிரார்த்துவம் ஆகாமிய வினையில் மட்டும் ஒருவனுக்குப் பூரண சுதந்திரம் உண்டு★ இப்பிறப்பிலே செய்யப்படும். இருவினைகள் மறுபிறப்பிலும் அவற்றின் பயனைத் தருவதாக அமையுமிடத்து அப்பயனை அனுபவிக்கும் தோறும் செய்யப்படுவனவெல்லாம் நல்வினை தீவினைகளாய் அமையும், இதனை

''நாம் செய்யும் வினைகளெல்லாம் ஏலத்தான் பலமாய்ச்
செய்யும் இத மகிதங்கட் கெல்லாம் மூலத்ததாகி வந்திடும்
முறைமைபோல்''

எனச் சித்தியாரும்.

''செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்
உய்வானுளன் என்றுணர்''

என்று திருவருட்பயனும்,

''அவையே தானே யாய் இருவினையின் போக்குவரவு
புரிய ஆணையின் நீக்கமின்றி நிற்கும்''

எனச் சிவஞான போதமும் இருவினைப் பயன்கள் உயிர்கட்கு ஆணவத்தால் அறிவின்றிக் கிடத்தலால் அவை செய்த முறைப்படி முதல்வன் ஆணையில் சேர்க்கப்படும் எனவும் கூறுகின்றன.

---

★ சிப்பிரகாசம், இருவினைப்பயன், செய்யுள் 29 - 31 வரை

இவற்றிலிருந்து ஒருவனின் கடந்த காலக்கன்மம் அவன் நிகழ்கால வாழ்வினைத் தீர்மானிக்குமாயின் மனிதனாவன் இப்பிறவியிலே கன்மத்தின் கைப் பொம்மையாகவேயிருப்பான். நற்செயல்களைச் செய்வதற்கும் தூண்டுதல் ஏற்படாது ஆதலால் சித்தாந்தக் கன்மக்கொள்கையானதுஒரு மனிதன் தன் நிகழ் காலவாழ்வின் போது தனது முன்னய செயல்களால் வடிவமைக்கப் பட்ட எல்லைக்குள் (சீட்டுக்கள்) ஓர் வாழ்க்கையினை வாழும் அதேவேளையில் நற்செயல்கள் செய்வதற்கு ஏற்றனவாக அவனுக்கு இயற்றி நிலையிலே சுதத்திரத்தை கன்மக் கொள்கை வழங்கியுள் ளது. (freedom of will) நல்லொழுக்கத்தின் வாயிலாக எதிர்காலத்தை உருவாக்குதற்கு நிகழ்காலவாழ்வின் சுதந்திரமும் இயற்றிநிலைச் சுதத்திரமும் உண்டு என்பது இங்கு முக்கியமான அம்சமாகும். அறவியற் பெறுமதிக்கு இயற்றி நிலைச் சுதந்திரமே அடிப்படை யானது. ஆயினும் இயற்றி நிலை சுதந்திரத்திற்கு சார்பான கருத்துக்கள் இருந்தபோதும், நியதிவாதத்தை ஆதரிக்கும் கருத் துக்களும் சித்தாந்தத்திலே மேலோங்கிக் காணப்படுகின்றன.

எவ்வாறாயினும் செய்த வினைகளின் பயனை அனுபவிக்கும் போது செய்யப் போகும் செயல்களில் சுதந்திரம் வழங்கியதன் மூலம் வாழவேண்டிய ஓர் வாழ்வியல் நெறிக்கு சித்தாந்தம் வழி யமைத்துக் கொடுத்துள்ளது. அதே சமயம் ஏற்கனவே செய்த வினை களின் பயன்கள் தெய்வம், பௌதீகம், ஆன்மீகம் வாயிலாக என மூன்றின் வாயிலாகவும் இப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் இனிவரும் பிறவிகளிலும் அனுபவத்திற்கு வந்தேதீரும் எனச் சிவப்பிரகாசம் கூறுமிடத்து நியதிவாதம் பேசுவதாகக் காணப்படினும், மனித வாழ்விலே ஏற்படும் ஏற்றத் தாழ்வுகட்கு கஷ்ட நஷ்டங்கட்கும் மனிதனது சொந்தச் செயல்களே காரணமன்றி அவை கடவுளால் விதிக்கப்பட்டவை என்ற கருத்தும் இங்கு நிராகரிக்கப்பட்டது மனிதனது வாழ்விற்கு அவனது செயல்களே காரண மென்பதால் அவன் உலகத்துன்பங்களிலிருந்தும், பிறவித்துயரிலிருந்தும் விடுபடுவதற்குரிய சில உபாயங்களையும் சித்தாந்தம் கூறியுள்ளது.

''ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உறவு
சீலம் வழுக்கிலாத்தவம் தானங்கள் வத்தித்தல் வணங்கல், வாய்மை
அழுக்கிலாத்துறவு அடக்கம் அறிவொடு அர்ச்சித்தலாதி
இழுக்கிலா அறங்களானால் இரங்குவான் பணியறங்கள்''



என்பது சித்தியார் தரும் உபாயங்களாகும். இத்தகைய ஒழுக்கம் முதலிய நற்பண்புகளைப் கடைப்பிடித்து ஒருவரை அவரது அறங் கள் அனைத்தையும் தன் பணியாக ஏற்று இறைவன் அருள்வான் என்பதாம்''

ஆதலால்,

''யார்க்குமிடுமின் அவர் இவர் என்னன்மின்- பார்த்திருந்
துண்மின் பழம் பொருள் போற்றுமின்''

எனவும்

''யாவர்க்குமாம் இறைவற் கொரு பஞ்சிலை யாவர்க்கு
மாம் பசுவிற் கொருவாயுறை யாவர்க்குமாம் உண்ணும்
போதொரு கைப்பிடி, யாவர்க்கு மாம்பிறர்க்கின்னுரை
தானே''

என திருமந்திரம் மனிதரது ஒவ்வொரு பேச்சினாலும் செயலிலும், சிந்தனையிலும் அற ஒழுக்கம் எவ்வாறு இணைய வேண்டும் என்று அறிவுறுத்தியுள்ளது. 'செய்யாதது எதுவும் அனுபவத்திற்கு வராது' எனச் சிவப்பிரகாசம் குறிப்பிடுவதன் மூலம் நல்ல பயனைப் பெற நல்லவற்றைச் செய்யுங்கள் என மனிதர்களைத் தூண்டுவதாகவு முள்ளது. கன்மத்தின் பயனும் செய்த முறையிலன்றி பக்குவப்பட்ட முறையிலே அனுபவத்திற்கு வரும் என்பதனை பின்வரும் உதாணமூலம் சித்தாந்தம் விளக்கும். பனை, வாழை, கீரை முதலிய பயிர்களை நாட்டிய முறையிலன்றிக் கீரையினை இரண்டு வாரத் திலும் வாழையின் பயனை ஆறுமாதத்திலும் பனையின் பயனை 25 வருடத்தின் பின்னரும் அனுபவிப்பது போல செய்த கன்ம ஒழுங் கிலன்றி பக்தவப்பட்ட முறையிலேயே கன்மம் பயனை வழங்கும் என்பதும் மனித குலத்திற்கு மிகவும் ஆர்வமுண்டாக்கும் விடய மெனலாம். அத்துடன் பாவகன்மங்களை நீக்குவதற்கான பிராயச் சித்தங்களும் சிவாகமங்களில் சொல்லப்பட்டுள்ளன. இடைவிடாத துன்பங்கள் தொடருமிடத்து மனிதர் சலிப்படைந்து போகாதிருக் கும் பொருட்டும் இதனைக் கூறியிருக்கலாம். ஆதலால் ஆன்மாக் களை விடுதலையடையும் இலட்சியத்தில் திருப்பவே சித்தாந்தம் இடைவிடாது கன்மக் கொள்கை மூலமும் ஒழுக்கமுறைகட்கு அழுத்தம் கொடுத்துள்ளதெனலாம்.

இவ்வாறு பண்டய ஞானிகளின் அனுபவவாயிலாக அறியப் பட்ட காரணகாரியத் தொடர்பு பின்னர் விஞ்ஞானத்தினாலும் விளக்கப்பட்டது. நீயூற்றனின் மூன்றாம் இயக்கவிதி மட்டுமன்றி அயன்ஸ்ரீனின் (Einstean) என்ற விஞ்ஞானி கண்டு பிடித்த

''பிரபஞ்சம் ஒரு வளைவை அல்லது நேர்கோட்டிலிருந்து கோடிய கோட்டம் (Curvative) ஒன்றைக் கொண்டுள்ளது''

என்ற உண்மையும் கர்மக்கொள்கைக்கு ஓரளவு விஞ்ஞான ரீதியான விளக்கம் பெற உதவியது. அதாவது

''சக்தி அல்லது ஓர் அலை தனது தொடர்ச்சியான வட்ட மான கட்டத்தில் தொடங்கிய இடத்திற்குச் சிறிதும் விசை குறையாது திரும்பவரும்''

என்ற பௌதிக விதி ஒருவன் செய்த செயலானது ஒரு வித தொடர்ச் சியில் சிறிதும் விசை குறையாது அவனிடமேதிரும்பவரும் என்ற கருமக் கொள்கை விதிக்கும் பொருத்தமானதே.

'செயலைச் செய்தவன் அதன் பிடியிலிருந்து தப்ப வியலாது' என்ற கன்மக் கொள்கையின் கடுமையான விதி மனிதப்பண்புகளை மேம்படுத்தச் சித்தாந்தத்திலே பெரிதும் பயன்பட்டது. அதற்குச் சமயமும் கடவுள் பற்றிய நம்பிக்கையும் பக்கபலமாக அமைந்தன. ஒழுக்கப் பண்புகளை மேம்படுத்துதற்கு முத்தி ஒரு இலக்காக வைக்கப்பட்டது. எதிர்கால வாழ்வினையும் பிறவினைகளையும் அதன் தன்மைகளையும் தானே நிர்ணயிக்கும் சுதந்திரத்தையும் இதன் பயனாகக் கன்மக் கொள்கை வழங்கியுள்ள தெனலாம்.

## வர்ணதருமம்

சைவ சித்தாந்த தத்துவமானது தனது சமூக ஒழுக்கக் கோட் பாடுகளில் வர்ண தருமம் பற்றிய கருத்தோட்டங்கட்கு சிவாகமங் களில் இடமளித்தற்கான குறிப்புக்கள் எதுவும் இது வரை கிடைத் தில் வேதங்கள் நான்கு குலங்கள் பற்றிக் குறிப்பிடும் போது சித் தாந்த முதல் நூலான திருமந்திரம் 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பதனையே சுட்டி நிற்கின்றது. வேதகால நால்வகை வர்ண வேறுபாடுகளை ஒட்டிய தொழிற் பிரிவுகளைத் பழந் தமிழ் நூல்களில் காணுமிடத்து ஆங்கும் அந்தணர், அரசர், வைசியர்,



வேளாளர் போன்ற தொழிற் பிரிவுகள் இடம் பெற்றிருக்கின்றன. அவர்களிலே அந்தணப்பெருமக்கள் சிவாசாரங்களோடு தொடர்பு பட்ட சிவாச்சார்யார்களாகச் சிறப்பிக்கும் மரபு சித்தாந்த நூல்க ளிலும் தொடர்கின்றது. 'பிறப் பொக்கும் எவ்வுயிர்க்கும்' எனக் கூறிய குறளில் 'அந்தணர் என்போர் அறவோர்' எனவும் 'அந்தணர் என்போர் அறு தொழில் பூண்டுளோர்' எனத் திருமந்திரமும் அந்தணரொழுக்கத்தைச் சிறப்பித்துள்ளன. சிவாகமங்களிலும் அந்தணர்கள் சிவாச்சார்யார்களாகவும் ஞானாசிரியர்களாகவும் மக்கட் சமூகத்தை நல்வழிப்படுத்தும் சேவையிலே சிவாலயங்களு டனும் தொடர்புபடுத்திப் போற்றப்பட்டுள்ளனர்.

'சித்தாந்தம் சிவனடியார்களையும் பத்தர்களையும், சீவன் முத்தர்களையும், சித்தர்களையுமே உயர்த்தகுலமாகச் சித்திரிக்கின் றது. திருமந்திரம் குறிப்பிட்ட 'ஒன்றேகுலம்' என்பது 'தொண்டர் குலமே தொழுகுலம்' எனப் பெரிய புராணத்திலும் விளக்கப்பட் டது. சிவப்பிரகாசம் 29 ம் செய்யுளும் உயர்களது சாதி, ஆயுள், போகம், என்பன அவரவர் கன்மத்தால் வருவதன்றிச் சென்மத்தால் வருவதில்லை எனக் குறிப்பிட்டதும் இங்கு கவனத்திற்குரியது. மேலும் சைவ நாயன்மாக்கள் அனைவரும் பல்வேறு சமூகப்பிரிவு களிலிருந்து வந்தாலும் தொண்டர்குலம் என்பதில் ஒருமைப்பட்ட வர்களாக விளங்கினார்கள். சம்பந்தரும் அப்பரும் தந்தையும் மகனும் போலக்கூடிப்பக்தி நெறி பரப்பியவர்கள். சுந்தரர் கணிகை யரான பரவையாரை அவரின் சிவபக்திக்காக மணம்புரிந்து கொண்டதுடன் அவர்களை சிவனே இணைத்து வைத்ததும் பெரிய புராணம் காட்டும் வரலாறு. அத்துடன் பெரிய புராண அடியார்க ளான கண்ணப்பரும், நந்தனாரும், திருநீலகண்டரும், எறிபத்த நாயனாரும் இன்னும் பலரும் பல்வேறு சமூகப் பிரிவுகளிலிருந்து சித்தாந்த சமூகத்திலே பத்தியொழுக்கத்தின் உயர்வினை நிலை பெறச் செய்து மேலான நிலை அடைந்தவர்களாவார். எனவே 'முத்திக்கு வித்தாவது நல்லொழுக்கம்' என்பதே சித்தாந்தம் போதிக்கும் உண்மையாகும்.

## கற்பொழுக்கம்

இறுதியாகச் சித்தாந்த சமூகத்திலே இல்லறமும் துறவறமும் மிகச் சிறந்த அற ஒழுக்கங்களைச் செயற்படுத்துகின்ற இருவேறு துறைகள் எனச் சைவ சித்தாந்தம் நம்புகின்றது. இரண்டிற்கும்

பொதுவாக அறம் பேசப்பட்டபோதும் குறிப்பாக ஒரு விடயத்தை மட்டும் இங்கு கருத்தில் கொள்ளலாம். சைவசித்தாந்தக் கொள்கையில் கற்பொழுக்கத்தின் பங்கு என்ன என்பது பலரது ஐயப்பாட்டிற்குரிய விடயமாகும். அறம் பொருள் இன்பம் என்பவற்றை முறையாகப் பின்பற்றி ஒழுகியவர்க்கு இல்லறம், துறவறம் இரண்டிலும் வீடு பேறு சாத்தியம் என்பது பொதுவான கொள்கையாகும். இவற்றிலே இல்லறத்தாருக்குரிய ஒழுக்கங்களிலே கற்புநெறி இன்றியமையாததென்பது தமிழ் இலக்கிய நூல்களிலும் வற்புறுத்தப்பட்ட விடயமாகும்.

'பெண்ணிற் பெருந்தக்க யாவும் கற்பெனும்
திண்மையுண் டாகப் பெறின்'

எனக்குறளும், 'கற்பெனப்படுவது சொற்றிறம் பாமை' என அறநூலும் பேசும். உதாரணமாகத் திருமணச் சடங்கிலே கணவன் மனைவியாகிய இருவரும் 'இன்பத்திலும் துன்பத்திலும் பிரியாதிருப்போம்' என பெரியோர் சாட்சியாக வாக்குறுதி எடுக்கின்றனர். அம்முறைமைக் கேற்ப மணமக்கள் இருவரும் சொன்ன சொல் தவறாது ஏற்று வாழ்வதுதான் 'சொற்றிறம் பாமை' என்பதன் பொருளாக அமைந்தது. எனவே சொன்ன சொல் தவறாது நடத்தல் என்ற ஒழுக்கம் நேர்மை அல்லது கற்பு எனப்பட்டது.

''கற்பென்று சொல்ல வந்தால் அதனை இருபாலார்க்கும்
பொதுவில் வைப்போம்''

என்ற பாரதியார் வாக்கிற்கமைய ஆண் பெண் இருபாலாருக்குமே கற்பெனப்படுவது சொற்றிறம் பாமை என திருமணக்கிரியையில் வலியுறுத்தப்பட்டது.

சித்தாந்தத்துவத்திலே இவ்வரிய ஒழுக்கத்தத்துவம் சிவசக்தி தத்துவமாகப் பேணப்பட்டுள்ளது.

''சக்தியும் சிவமுமாய தன்மையில் வுலகமெல்லாம்
ஒத்தொவ்வாணும் பெண்ணும் உயர் குண குணியுமாகி''

எனவரும் சித்தியார் குறிப்பு இங்கு கவனிக்கத்தக்கது. சைவத்திருமுறைகளிலும் பரவலாக இத்தத்துவம் போற்றப்பட்டுள்ளது. சிவனும் சக்தியும் இருவரில் ஒருவராய் கலந்திருக்கும் தன்மை அர்த்த நாரீஸ்வரமூர்த்தமாகச் சிறப்புப் பெற்றதாகும். 'மாதொரு



பாகன்' என்றும் 'பாதி பெண்ணுரு வாயினான்' என்றும், 'வேயுறு தோளி பங்கன்' எனவும் 'உமையொரு பாகன்' எனவும் இந்த இணைப்பு பலவாறு ஆங்கு புகழப்பட்டுள்ளது.

''மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றெருத்தி
சலமுகத்தால் அவன் சடையிற் பாயுமது என்னோடி'

என்ற பாடலில் அப்படிக் கங்கை நதியாகப் பாயா விட்டால் அது பெரும் கேடாகும் என மணிவாசகர் திருச்சாழலில் சுட்டியுள்ளார்.

சித்தாந்தத்தின் கற்பொழுக்கத்திறனுக்கு இது ஒரு சிறந்த உரைகல்லாகும். அது மட்டுமன்றிச் சைவசித்தாந்தத்தின் முழுமுதலான சிவம். சிவசக்தி ரூபத்தில் சிவாலயங்களில் சிவலிங்க மூர்த்தமாகச் கலைக் கோலத்திலும் வெளிப்படுத்தியிருக்கின்றதெனலாம்.

'அவளால் வந்த ஆக்கமிவ் வாக்கமெல்லாம் இத்தையுமறி
யார் பீடலிங்கத்தியல் புமேரார்'' *(1.2 89)*

என்ற சிவஞான சித்தியார் செய்யுளிலேலிங்க வடிவமானது சிவமாகவும் பீடவடிவமானது சக்தியாகவும் விளக்கம் பெற்றுள்ளதுடன் உலகின் உற்பத்திக்குத்தாயும் தந்தையுமாகியும் உலக உயிர்கட்கெல்லாம் அம்மையப்பனாகவும் அருள் புரியும் நிலையினை சிவலிங்கமூர்த்தத்தின் அருவுருத்திருமேனியானது சுட்டி நிற்கின்றதெனலாம். இது சச்சிதானந்தக் கலப்பு நிலை எனப்போற்றப்படும். விஞ்ஞான ரீதியிலும் எலக்ரோன், புரோட்ரோன் என்னும் அணுக்களில் ஒன்று ஆண்தன்மையும் மற்றது பெண்தன்மையும் கொண்டதெனவும்; இவையிரண்டும் இணையும் போதே உலகிலே உயிரினங்கள் தோன்றுகின்றன எனவும்; சடப் பொருட்களாவதற்கு இரண்டிற்கும் பொதுவான நியூட்ரோனே காரணம் எனவும் விளக்கம் பெற்றுள்ளன. இதுவே சிவலிங்க அமைப்பின் உட்பொருளாகவும் அமைந்துள்ளனதெனக் கருதலாம்.

இத்தகைய ஒழுக்கத்திறத்தையறியாது அதனை லிங்கயோனியான வணக்கமென இழித்துரைப்போர் சிவன் மன்மதனைக் கண்ணால் எரித்தவர் என்பதனையும் சித்தர்களும், சிவயோகியரும் போற்றும் மகாயோகி என்பதனையும் உணராதவர்கள் என்றே கூறலாம் இதனைத் 'தெய்வீகமாகப்பார்த்தால் தெய்வீகம் ஆபாச

மாகப்பார்த்தால் ஆபாசம்' நம்பினார்க்குக்கடவுள் நம்பாதவர்கட்குகல் என்பது போன்றதே இந்நிலைமையாகும் சிவோகம் பாவனையின் மிக உயர்வான நிலையிலே சீவாத்மா தன் பரமபதியான பரமாத்மாவுடன் இரண்டறக் கலக்கும் தெய்வீக நிலையே பேரின்ப வீடு எனச் சித்தாந்தம் விளக்கி நிற்கும். இக்கலப்பு நிலையினை 'சிவத்துவம்' என்கிறது சித்தாந்தம். 'சமத்துவம்' என்கிறது வேதாந்தம். கலந்த நிலையிலே தனிச்சுவையிருப்பதனையே சித்தாந்தம் மேம்படுத்தும் பாலுடன் சர்க்கரை கலந்தால் ஒரு சுவை; கறியுடன் உப்புக் கலந்தால் ஒரு சுவை. பாலுடன் பாலையோ உப்புடன் உப்பையோ கலப்பதிலே தனியான இனிமைகிடையாது என்பது வெளிப்படை. அதனையே

> ''கறந்த பால் கன்னலொடு நெய் கலந்தாற்போல
> சிறந்தடியார் சிந்தனையில் தேனூறி நின்று''

என மணிவாசகராலும் போற்றப்பட்டது. இக்கலப்பு நிலையே ஜீவாமிர்தம் அல்லது தேவாமிர்தம் எனவும் சிவசாயுச்சிய நிலை எனவும் சிவயோகியராலும் புகழப்பட்டது. இச்சைவசித்தாந்தத் தேனமுதருந்திருனர் சிலர் எனக்குமரகுருநாதபரசுவாமிகளும் இந்நிலையினை மெய்மறந்து பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## கட்டுரையாக்கத்திற்கு ஆதாரமாகஇருந்த நூல்கள்


சிவஞானபோதம்., - சிவஞான சுவாமிகள் சிற்றுரை, ஆறுமுக நாவலர் பதிப்பு, சென்னை, சர்வதாரி வருடம்.

சிவஞானசித்தியார்., - மு. திருவிளங்கம் உரை, கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்பு கழகம், யாழ்ப்பாணம், *1971.*

சிவப்பிரகாசம்., - மு. திருவிளங்கம் உரை, கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்புக் கழகம், யாழ்ப்பாணம், *1974.*





திருமந்திரம்., - திருபனந்தாள் காசிமட வெளியீடு, ஸ்ரீ வைகுண்டம், *1968*

திருவருட்பயன்., - சிவபாதசுந்தரனார் உரை, கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்புக் கழகம், யாழ்ப்பாணம்.

பௌஷ்கராகமம்., - தமிழில், சண்முகசுந்தர முதலியார், சென்னை, *1881*

செயல் முறை வேதாந்தம்., - சுவாமி, விவேகானந்தர், தமிழில்: செல்வி., ஆர். நிவேதிதா, ராமகிருஷ்ண மடம், சென்னை, *1986.*

புதிய இந்தியாவைப் படைப்போம்., - சுவாமி விவேகானந்தர், தமிழில்: சுவாமி கமலாத்மானந்தர், இராமகிருஷ்ண மடம், சென்னை, *1983.*

அறவியல் ஓர் அறிமுகம்., - லில்லி. வில்லியம், தமிழில்: கோ. மோ. காந்தி, தமிழ் வெளியீட்டுக் கழகம், *1983.*

Ethical Philosophies of India., - I. C. Sharma, Jonson Publishing Company, U.S.A, 1965

Saivagamas., - M. Arunasalam, Kalakshetra Publications, Truvanmiyur, Madras, 1983.

Literature and Dogma., - Mathew Arnold

The Relations of Morality to Religion., - De. Burgh.

| | | |
|---|---|---|
| Kiranagamam., | - | Sivagamasiddhanta pari palanasangam, Devokottai, 1952 |
| Mirugendragama., | - | Sivagama Siddhanta Paripalanasangam, Devakottai, 1928. |
| The Rourava Agama., | - | Twoparts Vidyapada and Kiriyapada in with English notes. |
| | | Edited by : French Institute of Indology, PondiCheri, 1961. |
| Matanga parameswara Agama., | - | Sivagama Siddhanta paripalana sangam, Devakottai, 1924. |




# சைவசித்தாந்த அறவிழுமியம்

சமுதாய நிகழ்வுகள் சாதாரணமானவையல்ல. சரித்திரச் சின்னங்களாக மாறக்கூடியவை. புதிய சகாப்தத்தின் வரலாற்றுக் காட்சிகளான அவை; எதிர்காலத்தில் அதன் சாட்சிகளாகவும் மாறுவன. மாற்றம் காணவேண்டிய வரலாற்றுத் தடயங்களை தக்கவிதத்தில் தரிசிப்பதவசியமானது. சைவசித்தாந்தம் தனது மானுட நேயம் தழுவிய அறவியற் சிந்தனைகளைத் தான் எழுந்த காலமுதல் தமிழ்ச் சமுதாயத்திற்குப் புகட்டி வந்திருக்கின்றது. அறம் என்பதனை முன்னோர் எவ்வாறு சிந்தித்தனர், செயலாற்றினர் என்பதனை உற்று நோக்கின், தற்காலத்து விமர்சகர்கள் அவற்றினை எவ்வாறு எதிர்கொள்கின்றனர், ஏற்புடையதாக்குகின்றனர் என்பதும் சிந்தனைக்குரியது. ''தமிழர்களின் அறம் அடிப்படைத் தத்துவ இயலையும் சமயத்தையும் சார்ந்து நிற்பதனால் அற ஆராய்ச்சிகள் ஓங்கித் தழைக்கவில்லை''[1] என்றோர் குறைபாடு நவீன அறிவியல் வளர்ச்சியினை முதன்மைப்படுத்துவோரிடையே நிலவுகின்றது.

தத்துவ இயலானது வாழ்வியலுக்குப் புறம்பான சிந்தனை' என்ற நிலைப்பாடு மனிதன் சிந்தனையில் இருக்கும் வரை இக் குறைபாட்டினை விலக்குவது கடினமே. அற ஆய்வுகள் வளர்ச்சியடைந்தால் மட்டும் போதாது. அவற்றினைக் கடைப்பிடிக்கும் மன உறுதியும், திடசித்தமும், வைராக்கியமும் வாழ்விலே ஒருவருக்கு இன்றியமையாது இருக்க வேண்டும். ஆய்வுகளைச் செய்து நூல்களில் எழுதிவைப்பதனால் பலனில்லை. இந்து தத்துவம் என்னும் 'சத்திய தரிசனத்தை வாழ்க்கைக்கு அன்னியமாகக் கருதும் வரை தார்மீக சிந்தனைகளை அகநோக்காகக் கொண்டு சித்தசுத்தியடையாதவரை மனிதவாழ்வு உயிரற்ற வெறும் வாழ்க்கை யந்திரமாகத் தான் ஓடிக் கொண்டிருக்கும். புறவாழ்க்கையை பெரிதென மதிக்கும் ஓர் சமுதாயத்திலே விஞ்ஞான வசதிகள் வழங்கும் வாழ்க்கைத்தரம் உயர்ந்தது என்பதில் ஐயமில்லை. ஆனால் உயர்ந்த அறிவுத்தேடலானது ஆன்மீகத்தேடலாக மாற்றமடையாதவரை புறவாழ்வின் வாழ்க்கைத் தரத்திலே அமைதியின்மைகள் நிகழ்ந்துகொண்டேயிருக்கும்.

> ''அறிவின் இயல்பே வாய்மை, மகிழ்ச்சி, அகிம்சை, பொறுமை, சேவை, தூய்மை, நேர்மை, உறுதி, தன்னடக்கம் என்பதேயாகும்''[2]

இதனையே சைவசித்தாந்தமும் 'ஞானத்தால் அரனை அர்சிப் போர் வீடெய்தல் அறிந்தோர்[3] எனவும் 'ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணகமங்கள் சொல்லும்''[4] 'அஞ்ஞானம் விடப் பந்தமறும்'[5] எனக் கூறுவதும் இதனையொட்டியே அமைந்தது.

ஆகையினாலே தத்துவஞானம் என்பதே இங்கு 'சிவஞானம்' எனப்பட்டது. சிவஞானம் என்பதே உயிர்களில் எல்லையற்ற அன்பினைச் செலுத்துவதும் அனைத்து உயிர்களிலும் இறைமை யைக் காணும் பேரன்பு பூணுவதுமாகும். ''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலர்,[6] என கற்றறிந்தும் மனித நேயமற்றவர் களின் செயற்பாடுகளைச் சித்தாந்தம் கண்டிக்கவும் தவறவில்லை. ஆதலால் அறிவில்லாதவரே அன்பையும் சிவத்தையும் பிரித்துப் பார்ப்பவர். 'பிறரது துயர்கண்டு மனமுருகுபவனே உண்மை இந்து' எனச் சாத்திரம் கூறும். அதனையே

''அறிவினால் ஆகுவது உண்டோ பிறிதன் நோய் தன்நோய்
போல் போற்றாக்கடை''

எனப் பிறர் துயரம் கண்டு இரங்காதவரது அறிவினால் என்ன பயன் எனத் திருக்குறளும் சாடியது. நீதியும் அன்பும் நிறைந்த மானுட சமுதாயத்தையே சித்தாந்தம் நேசித்தது. இன்றைய போராட்டங்க ளும் இத்தேவைகளையே உணர்த்தி நிற்கின்றன.

ஆதலால் சைவசித்தாந்தத்தின் அறவியற் சிந்தனைகளைக் குறியீடுகளைத் தொலை நோக்குக் கண்ணோட்டத்துடன் ஆராய வேண்டும். சமூக, பொருளாதார,நீதிகளை முறைப்படி ஆய்வு செய்தே நெறிப்படுத்த வேண்டும். நன்மை தீமைகளின் தாக்கங்க ளைச் சமூகம் உய்த்துணர வைக்கவேண்டும். உலகவளம், அதிகா ரம், பொறுப்புணர்வு யாவும் பகிர்ந்து கொள்வதில் ஏற்பட்ட மோச டியான ஏற்றத்தாழ்வு காரணமாகவே இன்று உலக நடைமுறைகள் சின்னாபின்னமாகியுள்ளன. தனிமனிதன், நாடுகள், குழுக்கள் என எங்குமே அடிப்படை மனித உரிமைமீறல்கள் அடிக்கடி நடைபெறு கின்றன. சத்துணவு, ஆடையின்மை, கல்வி வசதியின்மை யாவும் விஷம் போல ஏறுகின்றன. சகமனிதரை மதிக்கும் மனோபாவமோ, மனித நேயமோ அருகி மனிதப் பண்புகள் வீழ்ச்சியுறுமோ என்ற அச்சவுணர்வு உயர்ந்த ஆன்மீக சிந்தனையாளர் மத்தியில் வேதனை யைத் தோற்றுவித்துள்ளது.



சித்தாந்த சமய சிந்தனையில் தருமம் அல்லது அறம் இறை மையின் மறு பெயராகவே நிலைபெற்றுள்ளது. தருமம் வேறு இறைவன் வேறு என்று பிரித்துப் பார்ப்பதிலேதான் இன்றைய தவறுகள் பல நடைபெற ஏதுவாகின்றன. தேவர்கள் என்பது நற் பண்புகளின் ஓர் உருவகமெனலாம். கந்தபுராணம் தருமம் என்ப தோர் பொருள் உளது' என்பதனைத் தனது நூலின் இலட்சியமாகக் கொண்டு,

''சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள் மூன்றுள
ஆன்றதோர் தொல்பதி, ஆருயிர்த் தொகை
வான்திகழ் தளை எனவகுப்பர் அன்னவே....''

என்று குறிப்பிட்டது, பதி என்னும் தருமத்தை ஆருயிர்கள் மறந்து வாழ்ந்து அழிந்தமைக்கு 'தளை' எனப்படும் தன்னலம் கருதும் பாசமும், அஞ்ஞானமுமே காரணம் எனச் சித்தாந்தம் விளக்கியது. 'நல்லோரை, தருமத்தைக் காப்பதற்கு உலகிலே அவதரிப்பேன்' எனக் கீதையில் கிருஷ்ணபகவான் கூறினார். அதேபோல தேவர்கள் எனப்படும் நன்மைதரும் நலங்களை உய்வடையச் செய்யும் பொருட்டு எம்பெருமான் ஆலத்தை உண்டு பிறர்க்கு அமுதத்தை அளித்த அறக்கடவுள் எனச் சங்க நூல்களும் பெரிதும் போற்று கின்றன. 'விடை' என்னும் தருமத்தை ஊர்தியாக உடையவன் எனத் தேவாரத் திருமுறைகளும் இறைவனை 'விடையேறும் எங்கள் பெருமான்' எனப் பல இடங்களில் சுட்டிக்காட்டின.

'அறம் என்பதன் பொருளாவது கடமை, தானம்,கற்பு,
இல்லறம், துறவறம், புண்ணியச்செயல் அறக்கடவுள்,
அறக்காடு (சுடுகாடு) எனப் பலபொருளில் வழங்கு'

மெனக் கழகக் கையகராதி விரித்துரைக்கும்[6]. கோயில்கள் பலவும் அற நிலையங்களாகவும் தருமத்திற்கு விட்ட நிலங்களை அறச்சா லைகள், தருமசத்திரங்கள் எனவும் அறச்சோறு, அறக்கொடை எனப்பலவாறு அறமானது தமிழர் சமூகத்தில் பல்வேறு வழிகளில் நடைமுறைப்படுத்தப்பட்டதனையும் இலக்கியங்களில் காணலாம். அதுமட்டுமன்றி மகப்பேறினைப் பெறுவித்தல், பிணம் சுடுதல், சுண்ணம், நோய்க்கு மருந்தளித்தல், சலவையாளி, நாவிதர், கண்ணாடி, காதோலை, பெண் போகம், தண்ணீர்ப்பந்தல், மடம் அமைத்தல், ஆவீன்குற்றி, நந்தவனம் அமைத்தல், விலங்குகட்கு

ணவிடுதல், கன்னிகாதானம், உயிர்காத்தல், கற்பித்தல் அனைத்துமே சீரிய வாழ்வியல் அறநெறிகளாகப் பேணப்பட்டன.[7] அதனால் சித்தாந்தத்தில் சிவனுக்கு 'அறவன்' என்ற ஒரு பெயரும் கூறப்பட்டது.

''அறவா நீ ஆடும்போது மகிழ்ந்து,
பாடி நான் உன்னடிக்கீழ் இருக்க''

என்னும் காரைக்கால் அம்மையார் பாடல் அதற்கொரு உதாரண மாகும்.

சமயமானது அறத்தினைவிடக் கூடுதலான கடமைகளை வற்பு றுத்தும். இறைவனைத் துதித்தல், வணங்குதல், நோன்பிருத்தலும் சமயக் கடமைகளில் சிலவாயினும் கடவுள் என்னும் உருவமற்ற ஆணைக்குப் பணிவதைவிட தன்னிடத்திலே நம்பிக்கை கொள் வதை வலியுறுத்துவதே அறம் என விமர்சிப்பது பொருத்தமென லாம். இறைவனை ஆதாரமாகக் கொள்வது மதம், மனிதன் தனக்கு ஆதாரமாகக் கொள்வது அறம் எனக் கருதினும்[8] சித்தாந்தம் ஒரு படி மேற்சென்று இறைவனையே அறவடிவாகவும் உருவகித்திருப்பது அதன் அற நிலைப்பாட்டின், சிறப்பம்சமாகும். சைவசித்தாந்தம் கூறும் சிவஞானம் என்பது அறவியல் சார்ந்த வாழ்விலே மனிதன் தன்னிறைவு பெறுதலைச் சுட்டும். இதனைக்

''கல்லால நிழலின்கீழ்....நால்வர்க்கு அறமுரைத்த
பொல்லார் இணைமலர் போற்றித் தொழுவோம்''[9] எனவும்

''பண்டு நால்வர்க்கு அறமுரைத்தருளிப்
பல் உலகினில் உயிர்வாழ்க்கை
கண்டநாதனார் கடலிடம் கைதொழ...''[10]

எனவும் சித்தாந்த நூல்கள் தரும் செய்திகள் ஏராளம். 'அறம்பாவம் என்னும் அரும் கயிற்றால் கட்டி' என்றார் மணிவாசகர். இங்கு முன்னதில் அறம் ஞானம் எனவும் பின்னதில் அறம் புண்ணியம் எனவும் கூறப்பட்டது. ''குறைவிலாதுயிர்கள் வாழ்க, நான் மறை அறங்கள் ஓங்க'' எனக் கந்தபுராணம் வாழ்த்துவதும் ''வையகமும் துயர் தீர்க்கவே'' என்ற சம்பந்தர் பிரார்த்தனையும் வாழ்வியலில் அறத்துறை சார்ந்த மனித நேயப்பண்புகளின் வளர்ச்சியை ஊக்குவிப்பதாயமைந்தது. தமிழ் இலக்கியங்களில் அறம் எனப்படு



வது மேன்மைகொள் சைவநீதி எனவும் தமிழ் நூல்களும் புராண நூல்களும் எடுத்து விளக்கின. ''வையத்தில் அறம் பாவம் என்று அறிந்ததன்று இடார்க்கு-வெறும் பானை பொங்குமோ மேல்'' என்றார் ஔவையார். 'அல்லவை செய்தார்க்கு அறம் கூற்றாவது' பற்றிச் சிலப்பதிகாரமும் பேசியது. 'நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே' என ஏழைப் புலவன் தருமிக்காக வாதாடியதும் வைசநீதியை தருமம் அறிந்து போற்றுக என்பதற்காக இறைவன் ஆடிய ஒரு நாடகம் எனவும் கருதலாம். எனவே தனிமனிதனது நலன் பற்றிய சிந்தனையானது காலப்போக்கிலே விரிவடைந்து சமூக நலன் பற்றிய போக்காக மாறுவதற்கு தனி அறவினைகள் வழிவகுக்கின்றதெனக் கருதலாம்.[11]

சைவசித்தாந்த அறக்கொள்கையை இருவழிகளில் பாகுப டுத்தமுடியும் ஒன்று கன்மக்கொள்கை வழியாக; மற்றது சைவசாத னைகளின் வழியாக; இவ்விரண்டு பாதைகளின் ஊடாகவுமே சித்தாந்த சமுதாய அறநெறிகள் நெறிப்படுத்தப்பட்டுள்ளன. முதலாம் இயலில் இதுபற்றிய விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது. கன்மக் கொள்கையிலே ஊழ்வினைக்கோட்பாட்டினையும் நியதிக் கொள்கையினையும் கலந்து சித்தாந்த செய்திகள் சில முரணான விளக்கங்களைப் பிற்காலம் பெற்றதால் அவை 'தலைவிதி' என்னும் மூடக்கொள்கையைக் கற்பிப்பதாக மாற்றமடைந்தன அதனால் 'அறநெறிக் காலத்தைப் போன்று நியதிக் கொள்கைக்கு சித்தாந் தத்தில் சரியான முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை எனவும் கருதப்பட்டது.[12] தலை விதி வேறு நியதிக் கொள்கை வேறு. விதியை முயற்சியாலும் உழைப்பாலும் மாற்ற முடியும். ஆனால் நியதி தத்துவம் அடிப்பட்டதன்று. பௌஷ்கராகமம், மிருகேந்திரா கமம் முதலிய சிவாகமங்களில் கூறப்பட்ட 'நியாமிகா' என்னும் படலம் இவ்வுண்மையினைப் புலப்படுத்தும். இக்கொள்கைக்கு சித்தாந்த அறிஞர்களால் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படா மையே அதன் பிரதான குறைபாடாகும். இவ்வுண்மையை தெளிவு படுத்துவது சித்தாந்த சிந்தனையாளர்களின் கடமையாகும்.

அறநெறிகளை மக்கள் வாழ்வியல் நோக்கிலே பின்பற்றுவதற் காகவே சைவசித்தாந்தத்திலே தானம், தவம்,கல்வி, தொண்டு, பணி, புண்ணியம், ஒழுக்கவியல், தண்டனை, நீதி எனப் பல்வேறு பகுதிகளாக வகுத்து சித்தாந்த நூல்களும் தேவாரத்திருமுறைகளும் அழகுற அறிவுறுத்தியிருக்கின்றன.

''ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உபசாரம் உறவுசீலம்
வழக்கிலாத் தவம், தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை
அழுக்கிலாத்துறவு அறிவொடு அர்ச்சித்தல் ஆதி
இழுக்கிலா அறங்கள்...[13]

எனச் சித்தியார் அவற்றினை ''உயிர்கள் வினைப்பயன்கள்' பற்றிய பகுதியிலே சிறப்புற வகைப்படுத்தியிருக்கின்றது. இவையே 'இறைவனடி அடைவிக்கும் எழில் ஞானபூசை...'ஆனமையால் ஞானத்தால் அரனை அருச்சிப்பர்''[14] சிவஞான முணர்ந்தோர் என்பதில் ஞானம் என்பது அன்பு, அருள், கருணை, தியாகம் எனப்படுவதாகவும் அதனால் 'சேவையே பூசை' என்பதனை உணர்ந்தோர் எல்லாம் ஞானமாகிய அறிவினால் இறைவனை அர்ச்சிப்பதே 'சிவஞானபோதம்' என்பதனை இலகுவில் புரிந்து கொள்ள முடியும். ஆதலால்

''சிவஞானச் செயலுடையோர் கையிற்தானம்
திலமளவே செய்திடினும் நிலமலைபோல் திகழும்...
நவமாகும் தத்துவ ஞானத்தை நல்கி
நாதனடிக் கமலங்களை நணுகுவிக்கும் தானே''[15]

என்ற சித்தியார் வாக்கும் இதனை மெய்ப்பிப்பதாகவே காணப்படுகின்றது. தானம் என்று சைவசித்தாந்தம் ஈண்டு குறிப்பிட்ட பொருள் அறங்கள் யாவையும் குறிப்பிடும் எனச் சிவஞான முனிவரும் குறிப்பிட்டுள்ளார்.[16] அறம் யாதென உணர வேண்டுமே தவிர வெறுமே அறிந்துரைப்பதனால் பயன் விளையும் மென்பதற்கில்லை. அறத்தை அறியமுயல்வதோ, ஆராயமுயல்வதோ பகுத்தறிவிற்கும் அப்பாற்பட்ட சங்கதியாகும். அறத்தினைப் புத்தியால் அறிவது கடினம். பத்தி ஒன்றே அதனை அறிவிக்கும் சாதனமாகும். ஏனெனில் அறவினை என்பது பேச வேண்டிய செய்தியல்ல- செயலில் காட்டவேண்டிய, செய்விக்கவும் தூண்டும் ஆற்றலின் பாற்பட்டதாகும். அன்பில்லாத அறமானது பயன்தராது. பாவத்தைச் சேர்க்கும் என்பதும் சித்தாந்த முடிபெனலாம்.

''தரிப்பித்தலின் நீ தருமம் தரிப்பித்திடாமை
தெரிப்பிக்கும் அதர்மம் எனப் பெயர் செப்புமால் எம்
பொருட்டு புரிபாவமும் புண்ணியமாக்கி எம்பால்
விருப்பற்றவர் செய் அறமும் மறமாக்குவாய்''[17]

எனக் காஞ்சிப்புராணம் இதனை எடுத்துக்காட்டியது.



''தீயவை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன்னுற்றால்
தூயராகி மேலைத் தொல்கதியடைவர்...அடு
சமர் அந்நாட்செய்த மாயையின் மகனுமன்றோ
வரம்பிலா அருள் பெற்றுய்ந்தான்''

என அதன் மேன்மையை கந்தபுராணமும் பேசியது.[18]

''அன்பே அன்பாக அறிவழியும்-அன்பன்றித்
தீர்த்தம், தியானம் சிவார்ச்சனைகள் செய்யும்
அவை சாற்றும் பழம் அன்றே காண்''[19]

எனச் சித்தாந்த நூலும் அன்பற்ற பூசைகள் இறைவனுக்கு உகந்தவை அல்ல எனச் சுட்டியது.

இவ்விதமாக 'அன்பே சிவம்' என்னும் திருமந்திரக் கருத்தும் இதனாற் புலப்படுத்தப்பட்டது. ''யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை....யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி'' என்னும் அறச்செயலே பூசையாகும் என்பதனைத் திருமூலர் உணர்த்தினார். அவ்வாறே நாவலர் பெருமான் அவர்களும் 'பிடியரிசித் தானத்தின்' மூலமாக மக்களை ஊக்குவித்துச் சைவப் பாடசாலைகளை ஏற்படுத்தி அறிவுத் தானத்தை மேற் கொண்டமையும் சித்தாந்த வழிவந்த தார்மீகம் என்பது பலருமறிந்ததே. அதனால் 'தருமமே போற்றிடின் அன்பு சார்ந்திடும் அருள் எனும் குழவியும் அணையும்' என்ற கந்தபுராண அறிவுரையினால் அன்பாகிய சிவம் அறவினை ஆற்றுவோரிடத்து அருள் என்னும் குழந்தையினை மலர்விக்கும் எனக்கூறியதால் அறம் எனப்படுவதும் அன்பினில் விளையும் ஒரு அமுதவாழ்வெனவே சித்தாந்த வாழ்வியல் போதிக்கின்றது.

சித்தாந்த முதலான சிவத்திற்கும் அறத்திற்கும் உண்மைச் சைவர்கள் வேறுபாடு காண்பதில்லை. சிவபுண்ணியங்கள் யாவும் தருமகாரியங்கள் எனப் போற்றுவது உண்மைச் சைவ நெறியாகும். பெரியபுராண வரலாற்றிலே கூறப்பட்ட தருமநெறிகள் பற்றி இன்று பலவிதமான ஐயப்பாடுகள் எழுப்பப்படுகின்றன. இறைவன் தன்னையே சரணடைந்து வாழும் மெய்யன்பு பூண்ட அடியவர்களை அளவுக்கதிகமாக வருத்தினார், சோதித்தார், துன்பங்களை விளைவித்தார், என்றெல்லாம் பல திரிபு வாதங்கள் எழுகின்ற உதாரணத்திற்கு ஒன்றைப் பார்க்கலாம். சிறுத்தொண்டரிடம்

இறைவன் பிள்ளைக்கறி கேட்டார். தன்னைச் சரணடைந்த ஓர் அடியவரைச் சிவன் இவ்வாறு வருத்தலாமா என்பது ஓர் சந்தேகம், சிவமும் தருமமும் வேறல்ல என்பதே சைவசித்தாந்த நிலைப்பாடென்பதனை உணர்ந்து கொண்டால் இத்தகைய ஐயப்பாடுகள் எளிதில் அகன்றுவிடும். சிறுத்தொண்டரென்னும் அடியவர் முன்னாளில் பல்லவ மன்னர் முதலாம் ம் நரசிம்மரது படைத்தளபதியாகவிருந்த பரஞ்சோதி என்பவராவர்.[20] படைத்தளபதியாக இருந்து போரை நடத்திய அவராலும் அவரது தூண்டுதாலும் அரச விஸ்தரிப்பிற்காக பலர் படுகொலைக்கு ஆளானார்கள். அரச தர்மத்திற்காக நடந்த கொலைகளிலும் சாதாரண மக்களும் பாதிக்கப்படுவது இயல்பேயானாலும் தவறு செய்தவர்களைத் தருமம் தவறவிடுவதில்லை. 'தெய்வம் நின்று கொல்லும்' என்னும் தெய்வநீதி-சைவநீதி அது என்பதற்குப் பரம்சோதியாரின் பிற்கால வாழ்வு நல்லதோர் எடுத்துக்காட்டாகும்.

உயிர் கொலைகளின் தீமையை வன்முறைகளின் அழிவை பரம்சோதியார்க்கு உணர்த்தவே சிவன் அப்படியொரு நாடகம் ஆடினார் என்பதே அதன் தாற்பரியமாகும். "எத்தனை கொலைகளைச் செய்ய உடந்தையாக இருந்தவர்க்குத் தனது குழந்தையை அப்படிக் கொலை செய்ய முடியுமா? அப்படிக் கொல்லும் போதுதான் கொலையுண்ட பிள்ளைகளது பெற்றோர் துயரமும் அவருக்கும் புரியும் என்பதை உணர்த்தவே இறைவன் அவரிடம் பிள்ளைக்கறி கேட்ட வரலாறு உணர்த்தி நிற்கின்றதெனலாம். இவ்வாறாக ஒவ்வோர் அடியவர் வாழ்வின் பின்னணியில் ஒவ்வோர் தர்மம் விளக்கப்படுகின்றது.

ஆயினும் பெரியபுராணத்தில் வரும் சம்பவங்கள் எதைச் செய்தாலும் அன்புடன் செய்து வந்தால் அத்தனையும் ஈசனார் அறச் செயலாக ஏற்றுக் கொள்வார் என்றதோர் நியதியும் 'கொடிய பக்தி' என்ற போர்வையிலேயே காணப்படுகின்றது. இதனை 'வன்பக்தி' என்று கூட நவீன மானிடவியல் கருதும். ஆயினும் அன்பினால் ஆற்றப்பட்ட செயல்கள் ஈசனுக்கு இதமாகவே இருந்ததை

"தாதையைத் தாளற வீசிய சண்டிக்கும்....பாதகத்திற்குப்
பரிசுவைத்தானுக்குமே பல்லாண்டு கூறுதுமே"

என்ற மாணிக்கவாசகர் பாடல் எடுத்துக்காட்டும். 'எல்லாம் எமையாளும் ஈசன் செயல்' என்னும் மனோபாவமும் பலன்



கருதாது செயலாற்றும் பக்குவமும் அடைந்துவிட்டால் கொடிய செயலும் இதமாகமாறும். தேவர்கட்கு இதமாக யாகம் செய்த தக்கன் 'ஈசனை மதியாமை' என்னும் ஆணவச் செருக்கால் அது அவனுக்கே விரோதமாக முடிந்தது. ஏனைய மனையறங்களிலும் கல்லால் எறிந்தர்ச்சனை செய்த சாக்கியர், உமிழ்நீரால் அபிஷேகித்த கண்ணப்பர், மூக்கைச் சுட்ட தீபத்தைத் தூண்டி அது திருவிளக்கேற்றியதாகக் கொண்டு மாபலியாய் பிறந்த எலி, யானைக்கும் சிலந்திக்கும் முத்தியருளிய வரலாறு யாவும் பக்தி பாவனையுடன் அனைத்து ஜீவராசிகளும் அன்பினால் ஆற்றிய செயல்களாக இறைவனால் பரிசுத்தமானதாக ஏற்கப்பட்ட அறச்செயலாகவே காணப்படுகின்றனவாகும். இதனை,

"அரனடிக்கு அன்பர் செய்யும் பாவமும் அறமாகும்
அரனடிகன்பிலாதார் செய்த புண்ணியம் பாவமாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமையாகி
நரனிற் பாலன் செய்த பாதகம் நன்மையாய்த்தே"

என்று சிவஞானசித்தியாரும் புலப்படுத்தியதிலிருந்து 'நான் எனது' என்ற ஆணவமொழித்தவர் செயல்கள் உலகியலில் பிறர்க்கு நன்மை பயப்பதாயின் அதுவும் அரன்செயல்-அறச் செயலாகக் கணிக்கப்பட்டது. "நான் கெட்டவா பாடித் தெள்ளேணம் கொட்டோமோ" என்னும் திருவாசகத் தொடரின் உட்பொருளும் அதுவாகவேயுள்ளது.

சைவசித்தாந்தம் அறவியலையும் சமூகவியலையும் பிரித்துப் பார்ப்பதாகக் கருதுவது கடினம், சமூகவியலை அடிப்படையாகக் கொண்டு எழுச்சி பெறுவதே அறவியலாகும். இன்றைய அறவியல் சமூகவியல் என்பன விளக்க விஞ்ஞானத்தை (Discriptive Science) அடிப்படையாகக் கொண்டவை. அறவியலை நேர்நிலை விஞ்ஞானம் அல்லது அறவொழுக்க விஞ்ஞானம் (Possitive Science of Moral) எனவும் வியாக்கியானம் செய்யப்படும். இதனையே அறவிஞ்ஞானம் எனவும் விளக்குவர். (Possitive Science of Ethics)[21] அறத்தை அறிவியலில் இருந்து ஒதுக்கிவிட்டு உழைப்பினையும், தற்செருக்கையும் ஆடம்பரத்தையும் வளர்க்கும் கல்வியறிவே இன்றைய கல்வித்திட்டத்தின் பெறுபேறாக ஆனதோ என்ற மயக்கமும் ஏற்படாமல் இல்லை. ஆன்ம நேயத்தை-அறத்தை பண்பாட்டை-நேசிக்கத் தெரியாத வகையில் கல்விமுறை மாறுமெ

னில் மனிதநேயம் என்னும் அறப்பண்பு வீழ்ச்சியடைவதில் சந்தேகமில்லை. அறவியலும் ஒரு விஞ்ஞானவியலாக வளர்ந்து வரும் தற்காலத்திலே பெயர்ச்சொல்லை மாற்றி மாற்றி உபயோகித் தாலும் அதன் உட்பொருளை மாற்றுவதாக அர்த்தமாகாது. மாற்றம் என்பது அறிவு குறைந்த சடப்பொருட்கட்கு- புறப்பொருட்கட்கு நிர்ணயிக்கப்பட்ட ஒன்றே தவிர அக வளர்ச்சியில் ஆன்மீக ஞானத்திலே - அன்பிலே அறச்செயலின் முழுமையிலே காலப்போக் கில் அனைத்தும் ஐக்கியமாகி விடுகின்றன என்பதே சித்தாந்த சமூக அற நிலைப்பாடாகும்.

## சித்தாந்தத்தில் சைவநீதி

இன்றைய நாடும் மக்களும் போர் மேகங்களால் சூழப்பட்டு ஒளிதெரியாது துயர இருளில் தடுமாறுகிறார்கள். பல்லாயிரக் கணக்கான மக்கள் வாழ்விடங்களை இழந்து தவிக்கிறார்கள். தொழில் வாய்ப்புக்கள் அழிந்து போனதால் சிறு தொழிலாளர் பலர் வேலையின்றி வறுமையில் வாடுகிறார்கள். கோயில்களிலும் மக்கள் பலரும் ஏமாற்றங்களினாலும், துன்பங்களினாலும், சுகவாழ்வை இழந்ததினாலும் வாழ்க்கை வசதிகள் அற்றுப்போனதாலும் தத்தம் வேதனைகளைப் பிரார்த்தனைகளாகக் கூறி ஆங்காங்கு முறையிட்டு வேண்டுதலும் செய்கிறார்கள். வெகுசிலர் காலத்தின் கொடுமை யினை உணர்ந்தோ, பிறர் கஷ்டங்களைப் புரிந்து கொண்டோ, தத்தம் முன்வினைப் பயன்கட்கும், கொடுநோய்கட்கும் பயந்தோ சற்றும் காலம் தாழ்த்தாது அறம் செய்வோம்-தருமத்தைக் கடைப் பிடிப்போம் - பிறர்க்கு உதவுவோம், ஆலயங்கட்கு திருப்பணி செய்வோம் என்பன போன்ற செயற்பாடுகளிலும் அதிக கவனம் செலுத்தி வருகிறார்கள். இவ்வாறாகத் தாம் தாம் படும் துயரங்களில் இருந்து முன்னேற்றம் விடுதலை கிடைக்கும் என்ற நம்பிக்கையிலே சிலரது சிந்தனைகளில் அறச் செயல் நாட்டம் வளர்ந்து வருவது நல்ல பலனைக் கொடுக்க முடியும்.

தற்காலத்திலே பல கோயில்கள் பூட்டப்பட்டு பூசைகளற்ற நிலையிலே இருப்பதைக் காணுமிடத்து ஒவ்வோர் தனிமனிதனும் ஆற்றும் தருமவிரோதச் செயல்கள் யாவும் ஒன்று சேர்ந்து 'கூட்டுக் கர்மா'(Collective Karma) என்னும் நியதியாக தமிழ் மக்களின் தலைமேல் குண்டுகளாக விழுகின்றதோ என எண்ணுமிடத்து எழும் துன்பம் அளவிடற்பாலது. அதனால் மக்களாற்றும் பூசைகளும்



வழிபாடுகளும் கூடப் பொய்யோ எனச் சிலசமயம் தோன்று கின்றது. தருமவிரோதமாக செய்யப்படும் பூசைகள், உற்சவங்கள் போன்றன இறைவனுக்குகந்ததாக இல்லை என்று தான் ஈசனும் திருக் கதவுகளை அடைத்துவிட்டிருக்க வேண்டும். ஒரு சமயம் சைவவரலாற்றிலே தேவாரத்திருமுறைகளைப் புற்று மூடியது போலவும், புறச் சமய வளர்ச்சியிலே சைவாலயங்கள் இடிந்தும், விக்கிரகங்கள் அனைத்தும் கடலிலும், கிணற்றிலும் மறைந்தது போலவே இன்றும் பல சைவாலயங்கள் அடைக்கப்பட்டிருக்கின்ற அவலம் நேர்ந்திருக்கின்றது.

> ''பொக்கமிக்கவர் சொரியும் பூவும் நீரும் கண்டு
> நக்கு நிற்பர் நாயகர் அவர் தமை நாணியே''

என்ற அப்பர் சுவாமிகள் திருவாக்கிலிருந்து 'பொய்யும் வஞ்ச னையும் நிறைந்த மனதுடையார் ஆற்றும் பூசையினைக்கண்டு அவர்களது மறைந்தொழுகும் ஒழுக்கத்தைப் பார்க்கும் ஈசன் தனக்குத்தானே நகைப்பதுடன் அப்பூசைக்கு வெட்கப்பட்டு விலகி நிற்பர்' என்னும் உட்பொருளானது ஆசாரமற்றவர்களது பக்தியை யும் பூசைகளையும் சாடுவதாகவே உள்ளது.

> ''வஞ்சமனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
> ஐந்தும் அகத்தே நகும்''

என வள்ளுவப் பெருமானின் இக்குறளானது ''கரவுடையான் ஒழுக்கத்தினைப் பார்த்து அவனுடன் ஒன்றாக வாழ்கின்ற இயற் கையே எள்ளி நகையாடும்'' எனக் காணப்படுகின்றது.

இன்றைய நாளிலே மீந்திருக்கும் ஆலயங்களில் கூட எவ்வளவு பூசைகள் அபிஷேகங்கள், கும்பாபிஷேகங்கள், சங்காபிஷேகங்கள், மகோற்சவங்கள் எனப் பெருவாரியாக நடைபெறுகின்றன. இருந் தும் மக்களின் துயரக் குரல் எப்போது இறைவன் திருச்செவியைச் சென்றடையும் என்பதே ஏக்கமாகிவிட்டது. ஆகவே மக்கள், பூசைகள், கிரியைகளுடன் மட்டும் நின்று விடாது ஆலயங்கட்குத் திருப்பணி செய்வதில் காட்டும் ஆர்வம் போல, வறுமைப்பட்ட வர்கள், ஊனமுற்றவர்கள், ஆதரவற்றறோர், முதியோர், நோயுற் றோர், குழந்தைகள் என்றிவர்கட்குச் செய்யும் அறப்பணிகளிலும் போதிய ஆர்வம் காட்டுவது அவசியமாகும். அத்தகைய பணி அவரவர் தகுதிக்கேற்ப அமையலாம் என்பதனை,

''யாவர்க்குமாம் இறைவற் கொருபச்சிலை
யாவர்க்குமாம் பசுவிற்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரை தானே''

எனவரும் பாடலில் திருமந்திரம் பகுத்துக் காட்டியுள்ளது. இதனை 'அறம் செயவிரும்பு' என ஔவையும், கூட எடுத்துக் காட்டினார்கள். அப்பர் சுவாமிகளின் உழவாரத் தொண்டு என்பதனடியாகப் பிறந்த சமூகத்தொண்டும், அப்பூதியடிகளாரின் தண்ணீர்ப்பந்தல், அன்னதானமடம் போன்றனவும் சைவ அடியார்களின் அறப்பணிக்கு மேலும் முன்மாதிரியாக விளங்குபவையாகும்.

அறிவியல் முன்னேற்றமும் பொருளியல் முன்னேற்றமும் கண்ட மக்கள் அறவியல் முன்னேற்றத்தை இடையிலே கோட்டை விட்டதனாற் போலும் தாம் அடைய வேண்டிய இலக்கினை இழந்து அல்லலுற வேண்டியுள்ளது. ஆலய நிர்வாகங்கள் கூடத் திருப்பணி உண்டியல் வைத்துத் திருக்கோவில் பணிகளை நிறைவேற்றுவது போல 'அறப்பணி உண்டியல்' என ஒன்றினையும் அருகருகே வைத்து ஆலயத்திருப்பணிக்குப் பொருள் ஈயும் மக்களிடம் 'அறப்பணிக்கும் பொருள் வழங்குக' என ஊக்கமளிக்கும் முறையினை கடைப்பிடித்தும் வர வேண்டும். சமுதாய சேவையினை இவ்வாறு ஆலய நிர்வாகம் வாயிலாகவும் சமூகம் முன்னெடுக்கமுடியும். அல்லாவிடில் நலிந்த சமூகத்தைக் கொண்ட மக்களினால் ஆலயப்பணிகளும் நலிவடைய நேரும். இன்று நித்திய நைமித்திய கிரியைகள் நடைபெறும் பெரும்பாலான கோவில்களிலும் பலசீர்கேடுகள் மலிந்துள்ளதை நீதிமன்றங்கட்கு வரும் கோயில் வழக்குகள் எடுத்துக் காட்டுகின்றன. ஆரோக்கியமான சமுதாயத்திற்கு இந்நிலை உகந்ததல்ல என்பது பெரியோர் உள்ளக் கருத்தாகும். உதாரணமாக:

''ஆதியிலே வழிபாட்டுக் கார்ந்த பெரும்கோயில் பல
சாதி மதச் சாக்கடையாய் சண்டாளர் இருப்பிடமாய்
நீதி அறம் அழிந்துவரல் நின்மலனே நீ அறிவாய்
கோதுகளை அறுத்தொழித்துக் குணம் பெருகச் செய்யாயோ''

என்ற இப் பாடாலானது கோவில்கள் நிறுவப்பட்டதன் நோக்கத்தை அவை இழந்து விட்ட நிலையினையே காட்டுகின்றதா? மக்கள் கூட்டமோ தங்களது துயரத்திற்கு முடிவில்லையா? விடிவில்லையா? என இறைவனிடம் முறையிடுவதனை நோக்குமிடத்து கந்தபுராண நீதிதான் நினைவிலே உறுத்துகின்றது.



சூரபன்மன் மண்ணுலகில் ஆட்சிக்கு வந்து விட்டான் என அறிந்து நடுங்கிய பிரமா, இந்திரன் முதலிய தேவர்கள் திருமாலிடம் சென்று முறையிட்டனர். அதற்குத் திருமால் 'புன்தொழிலுடைய தக்கன் செய்த யாகத்திற்குப் புகுந்த தீமையினால் இது நமக்கு வந்தது. சிவன் தான் இதனை விலக்க வேண்டும். சிவநிந்தை செய்த பாவம் இவ்வாறு வந்தது என்றும் சிவசேவை மகிமையே துன்பத்தை விலக்கவல்லது எனவும் அறிவுரை பகர்ந்தார். 'செய்வினை செய்தவனைச் சென்றடையும்' என்ற சித்தாந்த நீதி இங்குரைக்கப் பட்டது, சைவநீதிக்கு முன் தேவரும் விலக்கல்லவாம். இந்திரனும் திருமாலிடம்,

''அமரர்தம் வெம்சிறை வீடுமாறு
நெடிய தொல் வெறுக்கை தன்னை நீங்கிய
நமது துன்பம் முடிவதுமில்லை கொல்லோ
மொழிந் தருள் முதல்வ...''

என மீண்டும் வினாவினாலும் பின் கயிலை சென்று சிவனை வழிபட்டு வேண்டுதல் செய்யும் போது 'யாரைநோவேன், யாரிடத்துச் சொல்வேன்' கடல் நடுவே காகத்திற்கு மரக்கலமல்லாது பிறிதோரிடமில்லையே' அது போல அடியேம் துயரத்திற்குத் துணைவர் நீரன்றி யாவர் உளர். நஞ்சையுண்டு இறக்கவும் முடியவில்லையே அமிர்தத்தை உண்டு சாகாவரம் பெற்று விட்டேனே' கருணாநிதியே! காத்தருளும்' என வேண்டுகிறான். ஒரு சமயம் சூரனுக்குப் பயந்து மனைவியுடன் தலைமறைவாகியும் விடுகிறான். சயந்தனும் பெற்றவர் சென்ற இடம் தெரியாது கலங்கி சூரனால் சிறைப்பிடிக்கப்படுகின்றான். சயந்தனின் துன்பத்தைத் தேற்றக் கருதிய நாரதர் அவனிருப்பிடம் சென்றார். சயந்தனோ எல்லையற்ற துன்பத்திலே நாரதரிடம்

''ஐயனே! இச்சிறை ஆற்றேன், ஆற்றேன், அறம் தொலைந்ததோ பாவம் சிறந்ததோ, தவப் பயனும் தேய்ந்ததோ, நன்னெறி குறைந்ததோ''

எனப் பலவாறு புலம்பி மயங்கினான். இன்று தமிழ் குழந்தைகளும் பலவழிகளிலே சிறைப்பட்டுச் சிறையிலே வாடுகிறார்கள். அவர்களின் துன்பத்தை ஈசன் எப்போது தீர்த்து வைப்பார் என ஒவ்வொரு பெற்றோரும் புலம்புகின்றனர்.

ஒரு சமயம் பாண்டிய மன்னனும் மணிவாசகப் பெருமானுக்கு வைகைக் கரையிலே அணை உடைப்பெடுத்த சமயம்-அமைச்சரான அவர் உரிய நேரத்திலே அணைக்கட்டு வேலை முடிக்கவில்லையே எனச் சினந்து அங்கு மாணிக்கவாசகருக்காக கூலியாளாக வந்த சிவனுக்கு பிரம்பால் அடித்த அடி அனைவருக்கும் விழுந்த அடியானது. எல்லோரும் துன்பப்பட நேர்ந்ததும் தான் என்ன குற்றம் செய்தேனோ தவறு விட்டேனோ எனப் பாண்டியமன்னன் மனம் நொந்து போனான்.

''ஆதியாம் கடவுள் ஆலவாய் அமலன் மங்கை
பாதியான் கடந்த பூசை பண்டையில் குறைந்ததுண்டோ
நீதியான் தவத்தின் மிக்கார் நெஞ்சகம் புழுங்க மண்மேல்
தீதுயான் செய்ததுண்டோ செப்பும் அமைச்சர்காள்''

என்றவாறு அடியவர்களையோ அறவோர்களையுயோ யான் நிந்தித்த பாவம்தான் இவ்வாறு விளைந்ததோ? என விம்முகிறான். மாணிக்கவாசகப் பெருமானை அவர் பெருமையறியாது நிந்தித்தமையினை பின்மன்னன் உணர்ந்து கொண்டான். இவ்வாறு தக்கன் யாகத்திற்குச் சென்ற தவறு இந்திராதி தேவர்களை தீவினையாகச் சென்றடைந்தது எனவும், பெரியோர்களை அவமதித்ததால் நாட்டில் துயரவெள்ளம் ஏற்பட்டதென்றும் இச் செய்திகளைப் பார்க்குமிடத்து தேவர்களாயினுமென்ன மன்னவனாயினுமென்ன எவ்வளவு பூசைகள், தவங்கள் செய்தாலும் என்ன-செய்த தீவினைக்குத் தண்டனை பெற்றேயாக வேண்டும் என்றே சைவநீதி போதிக்கின்றது. ஆகவே எத்தனை சோதனைகள் வேதனைகட்கு மத்தியிலும் பிறர்மனம் நோக நடவாதிருப்பதும், செய்நன்றி மறவாமையும் ஈசன் பூசைகளில் தவறாமையும் சமூக நலம் பேணுதலுமே உயர்ந்த அறவாழ்வாகச் சொல்லப்படுகின்றன. தாம் தாம் அறிந்தோ அறியாமலோ செய்த தவறுகளே இன்று தண்டனையாக வந்து தம்மை வருத்துகின்ற தென்பதனை இப்புராண வரலாறுகள், மெய்யடியார் வாழ்க்கை முறைகளில் இருந்தும் அறிந்து நடத்தல் வேண்டும் என்பதே அவற்றிலே கூறப்படும் அறிவுரையாகும்.

துயரத்தின் எல்லையில் இருக்கும் இந்திராதி தேவர்கட்கு இறுதியாக நாரதர் 'ஈசனை மதியாத தக்கன் யாகத்திற்குச் சென்ற 'சிவநிந்தை' என்ற பாவமே இங்ஙனம் சூரபன்மன் என்ற துயரமாகச் சூழந்தது. உங்கள் துயரம் ஈசன் அறிவான். ஆயினும் அவரவர்



செய்த தீவினையின் பலனை அவரவரே அனுபவிக்க வேண்டுமல்லவா. அதனால் உங்கள் தண்டனைக்காலம் முடிய சிவனருளால் தோன்றும் சிவகுமாரனால் உங்கள் துயர் தீரும்' எனத் தேற்றுகிறார். எனவே எல்லாவற்றுக்கும் பிராயச்சித்தம் உண்டு. ஆனால் சிவநிந்தை என்ற பாவத்திற்குப் பிராயச்சித்தமே கிடையாது எனக் கந்தபுராணம் விளக்குகின்றது. அப்படி இறைவன் மன்னித்து உடன் வாழ்வு வழங்கினால் யாரும் எதுவும் செய்யலாம். பின்னர் மன்னிப்புக்கேட்டு வாழ்வு பெறலாம் என்ற நிலை ஏற்படுமல்லவா. ஆதலால் இறைவனான தருமமானது அவரவர் செயல்களின் நன்மை தீமைகட்கேற்பப் பலன்களை வழங்கும் நியதி இதனால் பெறப்படுகின்றது. தேவர்கட்கே இந்தநிலை எனில் சாதாரண மானிடர்கள் எம்மாத்திரம் என நினைத்து இறைவனைப் போற்றி, அறப்பணிகளை ஆற்றி ஆறுதல் அடைய முயல வேண்டும். இதுவே புராண வரலாறுகள் கற்பிக்கும் பாடமாகும்.

## கருமமார்க்கமும் தருமமார்க்கமும்

கருமம் என்பதென்ன; தருமம் என்பதென்ன என்பதை விளக்குவதானால் கருமம் எனில் செயல் அல்லது வினை. தருமமும் அதுவேதான் எனலாம். அப்படியெனில் கருமம்-தருமம் என்பவற்றிக்கிடையே உள்ள வேறுபாடுதான் யாது? என்ற கேள்வியும் எழக்கூடும். பலனைக் கருதி அல்லது அவாவிச் செய்யும் செயல்களைக் கருமம் எனவும், பயனில் விருப்பின்றிக் கடமை எனக் கொண்டு ஆற்றும் செயல்களைத் தருமம் எனவும் வேறுபடுத்தலாம். பெரும் பாலோர் புண்ணியம் என்ற பலனை மனதிற் கொண்டே தருமகாரியங்களையும் ஆற்றுவதனால் தருமம் அல்லது அறம் என்பது சாதாரண பொருளிலே செயற்பாடாகக் கருதப்படாது புண்ணியச் செயல்களாகவும் கருதப்படுகின்றது. ஆதலால் கருமச் செயல்களும் தருமச் செயல்களும் இருவினைகளை அடிப்படையாகக் கொண்டமைவதாகச் சைவசித்தாந்தம் போதிக்கின்றது.

'தருமம்' என்பதன் விளக்கத்தை முழுமையாகப் புரிந்து கொள்வோமானால் தருமச் செயலின் அடிப்படையும் கருமச் செயலின் அடிப்படையும் ஒன்றாகவே அமைந்திருப்பதை உணரமுடியும். கருமம் என்பது காமிகம், நிஷ்காமிகம் என இரு பிரிவிலே அழைக்கப்படுதலால்; நிஷ்காமிய கருமம் பலன் கருதாத செயலைக் குறிப்பிடும்போது அது தருமமாகும் தகுதியை அடைகின்றது.

அங்கே கருமத்தினதும் தருமத்தினதும் அடிப்படை நோக்கு ஒத்திருத்தலைக் காணலாம். அதாவது கருமமானது சுய விருப்பினை விலக்கி கடமையினைப் பெரிதென மதித்துச் செயற்படுமிடத்து அதுவேதருமம் தழைத்து வளரும் நிலமாக விளங்குகின்றது. தருமத்தை நிலை நாட்டி அதருமத்தை அழிப்பதை நோக்கமாகக் கொண்டெழுந்த கீதோபதேசமும் 'பலன் கருதாத கருமமே தருமத்தை வாழ்விக்கும்; கருமம் என்பது தனிமனிதனால் பின்பற்றப்படும் உயர்ந்த கடமையாகும்' என்பதையே தனது போதனையாக உணர்த்தியுள்ளது. இங்கு கருமமும் தருமமும் அடிப்படை நோக்கிலே ஒன்றுபடுகின்றன.

> ''தருமம் என்பது உலகினைப் பரிபாலிக்கும் இறைவனின்
> பேராற்றல்''

என சுவாமி கேசவதாஸ் குறிப்பிடுவதும் இங்கு நோக்கத்தக்கது.

குடும்ப வாழ்வினைக் கடந்தோரால் தான் அறச் செயல்களைத் தடையின்றி ஆற்றமுடியும் என்ற தவறான கருத்தொன்றும் பெரும்பாலோரிடையே காணப்படுகின்றது. ஆனால் அறச் செயல்களின் விளைநிலமாக இல்வாழ்க்கை அமைவதன் பொருட்டே இந்துசமயம் அதனை 'இல்லறம்' என இயம்பிற்று என்பதை மறந்து விட்டோம்.

> ''அறத்தாற்றின் ஆற்றின் இல்வாழ்க்கை
> புறத்தாற்றிப் போய்பெறுவதென்'' (குறள்)

என வள்ளுவர் குறிப்பிடுவது இல்லறம் என்பதை மனதிற் கொள்ள வேண்டும். கிருகஸ்தன் ஒருவனது கடமை ஐவகை வேள்வி அறம் புரிதல் என தர்ம சாஸ்திரங்கள் போதிக்கின்றன. பெற்றோர், விருந்தினர், இறைவன், தேவர், பூதங்கள் (மன்னுயிர்கள்) என்ற ஐந்து பிரிவினரையும் ஆதரிப்பது கிருகஸ்த தர்மமாகும். அதனை ஒருவர் உயர்ந்த கருமமாகவோ அன்றிக் கடமையாகவோ கொள்ளின் அவரே தன் சுயகர்மத்தைச் செய்து உயர் நிலை பெற்ற தேவராவார். 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தால், வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்' தகுதி அவருக்குக் கிட்டுகின்றது. பெண்களும் தன்குல ஒழுக்கத்தால் கணவரைப் பிள்ளைகளை - குடும்பக் கடமைகளை பேணுவதில் கணவருக்கு ஒத்துழைப்பதால் அவர்களது 'பதிவிரதா தர்மம்' பேணப்படு



கின்றது. அங்கும் சுயவிருப்புகள் அற்றுப்போவதால் கர்மவிதி அவர்களைப் பந்திப்பதில்லை. எந்தப்பந்தத்திலும் அவர்கள் அகப்படுவதில்லை. அவர்கள் உயர்ந்த கருமயோகி ஆகின்றார்கள். ஸ்ரீராமகிருஷ்ண- சாரதாதேவியாரும், மகாத்மா காந்தி கஸ்தூரிபா அம்மையாரும், இவற்றிற்கு நல்ல உதாரண புருஷர்களாகும்.

மேலும் தெய்வத்திற்கும், இயற்கைக்கும், தேசத்திற்குமுரிய ஒழுக்க நெறிகள் 'ரிதம்' என்ற கோட்பாடு மூலம் வேதகாலத்திலிருந்து அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. இவற்றினை நால்வகை வருணம், நால்வகை ஆச்சிரமம், நால்வகைப் புருடார்த்தங்களாக தர்ம சாஸ்திரங்கள் வகுத்துக் காட்டியுள்ளன. எல்லோரும் எல்லாவித அறநெறிக் கோட்பாடுகளையும், ஒழுக்க விதிகளையும் அனுட்டிக்க வேண்டுமென்ற கட்டாயம் இருக்கவில்லை. தனக்கென அமைக்கப்பட்ட வாழ்க்கை நெறியில் கொடுக்கப்பட்ட நியதிகளை கடமைவழி தவறாமல் ஆற்ற முடிந்தால் அதுவே தர்மமாகும். உதாரணமாக நால்வகை வாழ்க்கை நிலைகளில் மாணவ நிலையில் கற்றலும், கிருகஸ்த நிலையிலே காத்தலும் (ஐம்புல வேள்வி) வானப்பிரஸ்த நிலையிலே கடமையின் தாற்பரியத்தை உணர்தலும். சன்னியாஸ தர்மத்தில் உணர்ந்தததை அறிதலும், பிறருக்கு அறிவித்தலுமாம். இதுவே கடமையின் பாற்பட்ட தர்மமாகும். இக்கடமைகளை ஆற்றுமிடத்து மனிதர்கட்கு ஏற்படும் துயரம், இடையூறு, தடைகள், சோதனைகள், வேதனைகள் இவற்றினைப் பக்குவமாகத் தாண்டுதற்குக் கொடுக்கப்பட்ட பாலங்களே பக்தி, பிரார்த்தனை, ஆலய வழிபாடு, தியானம், யோகப்பயிற்சி என்பனவாகும். வாழ்க்கை இடையூறுகளால் மனிதர்கள் பாதிக்கப்படுமிடத்து மேற் சொன்ன நியதிகளைப் பின்பற்றுவோரது மன ஆரோக்கியமும், உடல் ஆரோக்கியமும் கெடாமல் பாதுகாக்கப்படுகின்றன.

இப்பாலங்கள் தகர்ந்து போனால் பள்ளமாகிய பெருவெள்ளத்தில் விழுந்த நிலைதான் உண்டாகும். கரையேறும் வழியானது அத்தருணம் கர்மம் என்னும் விதியின் கரங்கட்குப் போய்விடும். ஏனெனில் எமது செயல்களைக் கடமை மறந்து எமது விருப்பப்படி ஆற்றுவதானால் அதன் மூலம் எமது எதிர்காலவிதியை நாமே நிர்ணயிக்கிறோம். திருமண எழுத்து நடைபெறும் சமயங்களில் அடிக்கடி சிந்திப்பதுண்டு. ஆம் அங்கு போடும் இருவர் கையெழுத்தும் இருவரது எதிர்காலத்தையும் நிர்ணயிப்பதில்லையா? 'தாரமும் குருவும்' 'தலைவிதி' என முன்னோர் குறிப்பிட்டதும்

இதுவாகத்தான் இருக்க வேண்டும். இந்து ஒருவனின் குடும்ப வாழ்வு சல்லாபத்துக்கானதுமல்ல சன்னியாசமுமல்ல; இது சம்சார மாகும். கிருகஸ்தர்கட்கு சாஸ்திரங்கள் போதிப்பதெல்லாம் கடமை நெறியுணர்ந்த உலக வாழ்க்கையாகும். இந்துக்களின் குடும்ப வாழ்வு ஆன்மீகப்பயணத்திற்கான முதற்படியாகவே சாஸ்திரங்கள் வகுத்துத் தந்துள்ளன. சம்சாரக் கடலில் நீந்துவோர் கடமை என்ற படகில் ஏறி வாழ்வைச் செலுத்தினால் முறைப்படி கரை சேர்வர். அக்கடலில் கடமைதவறி காமத்தில் மூழ்கி. காமிக கர்மத்தில் ஆழ்வோர் ஆழ்கடலில் விழுந்து அவதிப்படுவோராவார். எதுவரி னும் மனத்திடத்துடன்;

''செய்வதுன்கடனே - அறம்
செய்வதுன் கடனே - அதில்
எய்துறும் விளைவினில்
எண்ணம் வைக்காதே''

என்றவாறு வட நாட்டு பக்தர் அஸ்வினி குமாரின் பாடலும் நிஷ்கா மிய கர்மத்தையே விளக்குகின்றது.

கடமையுணர்வினை உலகவாழ்வில் பின்பற்றுவது பாசத்திற் கடிமையான எம்போன்றோர்க்கு மிகக்கடினமானது. அப்படியான சமயங்களில் நாம் கர்மவிதியின் கைப்பொம்மைகளாகிறோம். நாமே பற்று வைத்ததன் விளைவாக எமது அடுத்த வாழ்விற்கான பற்று-வரவையும் எம்மையறியாமலே எழுதிவிடுகிறோம். ஆனால் அது எமக்குப் புரிவதில்லை. அவைகள் எமது புண்ணிய பாவக்க ணக்கிலே சேருகின்றன. இது புரியாததால் கடவுளைக் கணக்காளன் - விதியின் தந்தை எனக் கண்டிப்பதுமுண்டு. நாம் செய்தவை நமக்கு வருகின்றன என்பதை உணர்வது கடினமே. ஏனெனில்,

'புண்ணியமாம் பாவம் போம் போன நாட் செய்ததவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்த பொருள் - எண்ணும் கால்
ஈதொழிய வேறில்லை எச்சமயத்தோர் சொல்லும்
தீ தொழிய நன்மை செயல்'

என்ற ஒளவையின் போதனைதான் பலவீனமான மனதைத் திடப் படுத்தும் மருந்தாகும். புண்ணியபாவங்கள் இரண்டுமே பிறவித்



துயருக்கு எம்மை அனுப்பிவைக்கும் சாதனங்களாகும். ஆதலால் கடமையினைச் செய்யும் போது பாசத்தால் வருந்த நேரிட்டால்,

'வருந்தி அழைத்தாலும் வாராதனவாரா
பொருந்துவன போமின் என்றால் போகா
இருந்தேங்கி நெஞ்சம் புண்ணாகி நெடுந்தூரம் தானினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்'

என்று நம்மை நாமே தேற்றப் பழகிக் கொள்ளவேண்டும். அதனைத் தொடர்ந்து மனப்பக்குவமும் நாளடைவில் வந்துவிடும். காமிய கர்மத்தை விடுத்து நிஷ்காமிய கர்மம் காட்டும் தர்மநெறியினைப் பின்பற்றும் மனத் தெளிவுமுண்டாகும்.

'நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே' - மணிவாசகர்
'என் செயலாவது யாதொன்றுமில்லையினித் தெய்வமே எலாம்
நின் செயலென்றுணரப்பெற்றேன்' - பட்டினத்தார்

என முன்னோர் காட்டிய வழியினைப் பின்பற்ற வேண்டும். அந்த நிலையிலே குடும்ப வாழ்வைச் சுமையாக நினைக்காது சுகமாய் நினைக்கப் பழக வேண்டும். கடமையினை மதிக்க வேண்டும். பக்தி நெறி கடமையை மறக்கும்படி இடமளிக்கக்கூடாது. 'சுமையாய் நினைப்பவன் சன்னியாசி; சுகமாய் நினைப்பவன் சம்சாரி' என்ற கவிஞர் ஒருவரின் பாடலின் பொருள் இதுவெ னலாம். சன்னியாசிகளில் சிலரை வேடதாரிகள், ஆஷாடாபூதிகள் என்றும் பொதுவாக இந்து சமயம் நோக்குவதுண்டு. ஆனால் லோகேஷமத்திற்காகத் தன்னலம் துறந்து தவத்திலிருந்து தருமத் தைப் பரிபாலிக்கும் ரிஷிகளையும், தவசிகளையும் இந்து மதம் ஞானிகள் என்றும், ஆன்மீக ஆச்சார்ய சுவாமிகள், மெய்யடியார்கள் என்றெல்லாம் போற்றுகின்றது. எமது வேதங்களை, உபநிடதங் களை, தர்ம சாஸ்திர நூல்களை ஆக்கித் தந்தோர் யாவரும் இறை யருள் பெற்ற குடும்பத்துறவிகளேயாவார். அவர்கள் தத்தம் குடும்பத்தினரை விலக்கிவிட்டு உலகிற்கு உபதேசிக்க வரவில்லை. குடும்பத்திலிருந்து சேவையாற்றி ஞான ஒளி பெற்றவர்களாவர். எனவே கடமை செய்தல், சேவை புரிதல் என்பவற்றால் பெறப்படு வது யாதெனில் 'செயலைத் துறத்தல் அல்ல' தத்தம் 'செயல்களில் துறவு' கொள்ளும் மனப்பான்மையினை வளர்த்துக் கொள்வதே யாகும்.

முனிவர்களையும் ரிஷிகள் என்ற பெயருடையோரையும் அடிக்கடி வேறுபடுத்தி சிந்திப்பதுண்டு. 'முனி' என்றால் முனிதல் அல்லது கோபித்தல் என்பதும் பொருள். கோபத்தை வென்றோர் களை சினத்தைக் கடந்தவர்களை முனிவர்கள் எனப்படுவதுண்டு. ஆனால் நமது முனிவர்களிற் பலர் கடும் கோபக்காரர்கள் எனப் புராணங்கள் சித்தரிக்கின்றன. துர்வாச முனிவரால் சகுந்தலை வாழ்வும், விஸ்வாமித்ர முனிவரால் மேனகையும், கௌசிக முனிவருக்கு உபதேசமளித்த ஒரு பெண்மணியையும் நோக்குமி டத்து இக் கதைகளில் வரும் முனிவர்கள் தமது கோபத்தை தவவலிமைகொண்டு தணிக்காமல் தவத்தினைச் செலவிட்டதுதான் 'முனிவர்' என்று பெயர் பெறக் காரணமோ என எண்ணத்தூண்டு கின்றது. ஏனெனில் சில தவசிரேஷ்டர்களைச் சமய நூல்கள் வசிட்ட மகிரிஷி, வியாச மகரிஷி, சுகப்பிரம்ம ரிஷி எனக் கூறும்போது சிலரை 'முனிவர்' எனக் கூறுவது அத்தகையோரது கோபமாகிய குணவிசேடத்தாலோ எனக் கருதுவதுண்டு. எது எப்படியாயினும் முற்காலத் தவசிகள் அனைவரும் குடும்பவாழ்விலிருந்து கடமை புரிந்து ஜீவன்முக்தராகிய - விடுதலை நிலைக்கு வந்தவர்களாகவே உள்ளனர். அதிலிருந்து பற்றற்ற நிஷ்காமிய கர்மம் - அதர்மத்தை - மறத்தை-அகம்பாவத்தை ஆணவத்தை - அநீதியை அழித்து அற நெறியை நிலைநாட்டத்துணை புரியுமென்பது புலனாகின்றது.

புத்தரும், மகாவீரரும், யேசுவும், காந்தியும் இவ்வுண்மை யினையே தமது தரும போதனைகளில் பின்வந்த காலத்திலும் எடுத்துக்காட்டினர். குடும்பத்திலுள்ளவர்களது தேவைகளைப் புறக்கணித்துவிட்டுத் தருமம் செய்யும்படி ஓரிடத்திலும் தர்ம நூல்கள் விதிக்கவில்லை. அதேபோன்று பெருமைக்காகவும் புகழுக்காகவும் தருமம் செய்வதையும் வேதசாத்திரங்கள் ஒப்புக் கொள்ளவில்லை. இந்துக் கோவில்களில் கிரியை முதலிய சடங் குகள் பற்றின்மையை ஏற்படுத்தவும், மனப்பக்குவத்தை ஊட்டவும், தானதர்மங்களை வளர்க்கவுமே ஏற்படுத்தப்பட்டவையாகும். கடவுள் என்ற கல்லுக்கு இவை அவசியமா என்ற வினா காலம்தோறும் கேட்கப்பட்டாலும் 'சடங்குகள் மூலம் சேதமாகின்றன என நினைக்கும் பொருட்கள் யாவும் கடவுளைவிட மக்கட் கூட்டத் தையே சென்றடைகின்றன என்பது பலருக்குப் புரிவதில்லை. அதுமட்டுமன்றித் திருவிழாபோன்ற பெருவிழாக்காலங்களில் சடங்குகள் பலவகை மக்கட் பிரிவினருக்கும் வருமானம் தேடியும் கொடுக்கின்றன.



மாலைகள் வாங்குவதால் பூக்காரப் பிரிவினருக்கும், இசைக் கச்சேரிகள் மூலமாக கலைஞர்கட்கும், பழவகை அபிஷேகப் பொருட்களை வாங்குவதால் வர்த்தகர்கட்கும், கமக்காரருக்கும், பால் பெருமளவில் தேவைப்படுவதால் பால் உற்பத்தியாளருக்கும் என ஒரே சமயத்தில் எத்தனை பிரிவினர்க்கு வருமானம் கிடைக்க ஏதுவாகின்றன. ஆண்டவனுக்குப் படைத்த பொருட்களிலும் சில அந்தணர்கட்கும், மீதியைப் படைப்போரும் பெறுவதுடன், அதனைப் பிறருக்கும் பங்கீடு செய்கிறோம். பலருக்கு உணவு கிடைக்கிறது. பலருக்குத் தொழில் வளர்கிறது. இத்தனையும் ஆண்டவன் சன்னிதானம் என்ற ஒரு நோக்கத்திற்காகச் செலவழிக்கி றோமேயன்றிச் சாதாரண சமயத்தில் அவ்வாறு பொருளை விரயம் செய்ய யாரும் எண்ணமாட்டார்கள். இதனால் தானதர்மமே கிரியைகளின் அடிப்படைப் போதனை என்பது புலனாகும். வேதகாலயாகாதி கிரியைகளின் மிகுந்த பொருட் செலவைக் குறைக்கும் சுருங்கிய வடிவமே இன்றைய ஆலயக் கிரியைகள் எனலாம்.

## அறமுடிபு :

இன்றைய நிலையிலே உற்சவங்கள் தவிர்ந்த ஏனைய ஆலயத் திலிடம் பெறும் பூசைகள் பலவும் பெரும்பாலும் காமியக் கிரியை களாகவே மாறிவிட்டன எனலாம். கடவுளிடத்துள்ள பிரியமும் நமக்குப் பற்றினைப் போக்குதற்குதவாது என்பதால் தான்,

'ஆசை அறுமின் ஆசை அறுமின்
ஈசனோடாயினும் ஆசை அறுமின்'

என்றார் திருமூலர், செய்கருமத்தில் பற்று விட்டவன் யாராயினும் அவனுக்கு

'அஞ்சுவது யாதொன்றுமில்லை
அஞ்ச வருவதுமில்லை'

என்பதை அப்பர் சுவாமிகளும் எடுத்துக்காட்டினார். எனவே குடும்பவாழ்விலும் சரி, சமூக வாழ்விலும் சரி கருமநெறியானது கடமையின் பாற்படி ஆற்றுமிடத்து அதுவே தருமநெறியாகி விடுகின்றது. நாயன்மார்களும் சமய நெறியாக நால்வகை மார்க் கங்களின் வழி தருமத்தையே போதித்தனர். அரசன் முதல் ஆண்ட

வன்வரை வாழ வாழ்த்தொலி எழுப்பியதுடன் அறம் தழைக்க அறிவுரை வழங்கினர்.

'வாழ்க' அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க'தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க' தீயது, எல்லாம் - அரன் நாமமே
சூழ்க' வையகமும் துயர் தீர்கவே'

என்றவாறு தீயவை கழிந்து தருமத்தின் நாமம் ஓங்கவேண்டும் எனப் போதித்ததைத்தான் மூன்று நூற்றாண்டுகள் கழித்து சேக்கிழார் சுவாமிகளும் பின்வருமாறு சமூகத்திற்கு மொழிந்தார்.

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க - மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்தவம், வேள்வி மல்க
மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்''

இரு பாடல்களும் ஒன்றினையே போதிக்கின்றன. 'வேத அறங்கள் தழைக்கவும், கொடிய வேந்தன் ஆட்சி ஒழியவும், கடவுள் பெயரால் மன்னர் ஆட்சியும், மக்கள் குலமும் வாழ வேண்டும்' என்ற தருமபோதனை மிகப் பழையதுதான், நாமும் மீண்டும் அதைத்தான் நினைத்துப்பார்க்கும் தேவையில் வாழ்கிறோம். புதியனவாக எதுவுமில்லையே எனவும் தோன்றலாம். 'சத்தியம்' 'தருமம்' 'உண்மை' இவற்றுக்கு முற்காலம், பிற்காலம், பழமை, புதுமை எதுவும் கிடையாது என்பதே பொது முடிவாகும். அரைத்தமாவை திரும்பவும் புதிய கலவையில் அரைத்தாலும் முக்காலமும் நிலைத்தபடி உள்ளதே வெளிப்படத் தோன்றும். ஆதிகாலமாம் வேதகாலம் முதல் இன்றுவரை 'தருமம்' ஒன்று தான் கடவுளாகவும் காலமாகவும் கருமவிதியாகவும், கடமைக்கொள் கையாகவும், இயற்கை விதியாகவும் எல்லாச் சமயங்களும், எல்லாத் தரிசனங்களும் கூறி வந்துள்ளன. இந்தியத் தத்துவக் கோட்பாடுகளில் கூடக் வைதீக தரிசனங்களும் சரி, அவைதிக தரிசனங்களும் சரி கடவுட்கோட்பாட்டினை முதன்மைப்படுத்துவதை விட கருமக்கொள்கையினை முதன்மைப் படுத்துவதை நோக்கு மிடத்து இவ்வுண்மை புலப்படாமற்போகாது, இந்துமதம் தனது புராதன பெயராக 'சனாதன தர்மம்' என்ற பெயரைக் கொண்டிருப் பதும் இக்காரணம் பற்றியே ஆகும்.



புத்தரும் மகாவீரரும் அதனால் தான் கருமவிதியினை தரும போதனையாக மேற் கொண்டனர். வேதாந்தமும் பக்தியைவிட கருமயோகத்தையும் பற்றின்மையையும் புலப்படுத்தவே நிர்க்கு ணபிரமத்தை உயர்ந்த போதனையாகக் கொண்டது. சைவசித்தாந்தம் கருமக் கொள்கையின் மேம்பாட்டினைக் கடவுட் கொள்கை மூலம் திட்டமிட்டுக் காட்டியதும் அறக்கோட்பாட்டை வலியுறுத்தும் காரணத்தினாலாகும்.

கருமமும் தருமமும் ஒன்றா வேறா? என்ற சிந்தனையினை சொந்தப் பாவனை மூலமே ஒருவர் உணரமுடியும். இறப்பு - பிறப்பு; இருள்-ஒளி, இன்பம்-துன்பம்; உயர்வு-தாழ்வு; அன்பு - அகந்தை; அறிவு - அறியாமை ஆகிய நேரெதிர் இரட்டைப் பண்பு கள் மனிதராகிய எம்மிடம் உள்ளவரை நாம் ஒருபோதும் கரும - தரும ஒருமைப்பாட்டை உணருவது கடினமேயாகும். இரட்டைத் தன்மைகள் ஒன்றுக்கொன்று முரண்பட்டிருப்பதால் தான் உலகிலே பிரச்சினைகளும், துயரங்களும், வேதனைகளும் எழக் காரணமா கின்றன. 'இரண்டு' என்பது இல்லையாகி 'ஒன்று' என்ற ஐக்கியபா வம் ஏற்படுமானால் அங்கு பேதத்திற்கே இடமில்லை. இதுவே அத்வைத பாவனை சித்தாந்த வேதாந்தம் தெளிவுபடுத்தும் தத்துவபோதனையாகும்.

கன்மமா? கடவுளா?
ஆன்மாவா? பிரமாவா?
அறமா ? ரிதமா?

இச்சிந்தனையின் முடிவு சாதாரண மக்கட் பிரிவினர்க்கு என்றுமே புதிராகத்தான் உள்ளது.

இம்முடிவுகளை விளக்க நினைத்தோமானால் அவை சிலச மயம் வேதாந்த முடிவைச்சாரும். அல்லது சித்தாந்தத்தை தொட்டு நிற்கும். எனவே

இரண்டில் ஒன்றா?
இரண்டும் ஒன்றா?

இதனைத் தெளிவாக்கிக் கொண்டால் சித்தாந்தம். அது தெரி யாமற் போனால் வேதாந்தம் என்பதுதான் இன்றைய பொது முடிவாகும். எப்படி ஆராயினும் 'முடிபு' மேற்குறித்த இரண்டிலே

ஒன்றினைத் தான் சாரும். அதனாற்போலும்; வேதாந்த சித்தாந்தக் கோட்பாட்டின் பின் இந்துமத்திலே புதிய முடிபினைக் காட்டும் தரிசனம் எதுவும் தோன்றாமல் இருப்பதற்கு இதுவே காரணமாயிருக்க வேண்டும்.

அறம் : இயற்கையையும் மனிதனையும் ஆள்கிறது

ஒழுக்கம் : மனித நடத்தையினை ஒழுங்குபடுத்துவது எனக் கருதலாமா?

அறம் : பற்றற்ற தருமம்

ஒழுக்கம் : பலனை நாடும் கருமம்

அறம் : சமூக சேவை

ஒழுக்கம் : தனக்குத்தானே கட்டுப்படுதல்

இவ்வாறு தீர்மானிக்க முடியுமா? அறம் : கடவுளாக, காலமாக; கருமவிதியாக; இயற்கை நியதியாக; கடமைக் கொள்கையாக; பரிணமித்துள்ளதாகக் கூறுவது பொருந்துமா?

## அடிக்குறிப்புக்கள்


1. அறவியல் ஓர் அறிமுகம், லில்லி, வில்லியம் : 1964, முன்னுரை,ப; vi.
2. பகவத்கீதை, 13.7.
3. சிவஞானசித்தியார், 8.2.275.
4. மேற்படி,8.2 279.
5. மேற்படி பாடலைப் பார்க்க.
6. கழகத் தமிழ் கையகராதி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி 1968, பக்.28 (உள).
7. மேற்படி, பக். 305.
8. Relations of Morality to Religion III, Vol.XXI, p.85-90.
9. சிவஞான போதச் சிற்றுரை, கடவுள் வணக்கம்.
10. சுந்தரர் 7 ம் திருமுறை, திருக்கேதீச்சரப் பதிகம்.
11. J.C.Flugel Men; Morals and Socity, The Psycology of Moral Progress, Chap.I,II.
12. தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ஆ.வேலுப்பிள்ளை, ப.170.





13. சிவஞானசித்தியார், 2.2.115.
14. மேற்படி, 8.2. 275.
15. மேற்படி, 8.2, 278.
16. சிவஞானமாபாடியம், சிவஞானமுனிவர் 'இருவினையொப்பு' என்ற பகுதி பார்க்க.
17. காஞ்சிப்புராணம், தழுவக்குழைந்த படலம், பாடல் 77.
18. கந்தபுராணம், சூரபன்மன் வதைப்படலம், பாடல் 496.
19. திருக்களிற்றுப்படியார், பாடல் 55.
20. பல்லவ வரலாறு, இராசமாணிக்கனார், பார்க்க,
21. (An Intruduction to Ethics) அறவியல் ஓர் அறிமுகம், லில்லி வில்லியம் , தமிழில் கோ.மோ.காந்தி,தமிழ் வெளியீட்டுக் கழகம், 1964.


## கட்டுரைக்குதவிய வேறு நூல்கள்


1. The Principal Upanishads, S.Radhakrishnan, George Allen Unwin Ltd. London, 1953.
2. Indian Thought A Critical Survey, K.Damotharan, Bombay, 1967.
3. திருமந்திரம், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமட வெளியீடு, 1968.
4. பன்னிருமுறைப் பெரும் திரட்டு, ப.இராமநாதபிள்ளை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு, 1961.
5. பகவத்கீதை, ஸ்ரீ சங்கரபாஷ்யம், சுந்தரராஜ சர்மா (மொழிபெயர்ப்பு) 1907.
6. கர்மயோகம், மு. ஞானப்பிரகாசம், வட இலங்கைத் தமிழ் நூற் பதிப்பகம், சுன்னாகம். 1968.
7. இந்து தர்மங்கள், ஆச்சார்ய சுவாமிகள், சென்னை, 1976.

# சுவாமி விவேகானந்தரின் மனிதநேய விழுமியங்கள்

ஸ்ரீ இராமகிருஷ்ணரது ஆன்மநேய மரபினைத் தமதாக்கிக் கொண்டு அவரது சிந்தனையின் வித்தை உலகெங்கும் ஊன்றிய அவரது சீடர் சுவாமி விவேகானந்தர் தோற்றத்திலும் நெறிமுறையிலும் அவருக்கு நேர் எதிரிடையான தன்மை கொண்டவர். ராமகிருஷ்ணர் உலக மக்கட்கு மெய்ஞான ஒளி காட்டுதற்காக ஏற்றி வைத்த ஞான விளக்கே சுவாமி விவேகானந்தர். ரா. கணபதி அவர்களது வார்த்தையில் வர்ணிப்பதானால் முன்னவர் 'அருட் புனல்' பின்னவர் 'அறிவுக்கனல்' என்பதே பொருத்தமாக இருக்கும். சுவாமி விவேகானந்தர் இரண்டு வருடகாலம் பாரதம் முழுவதனையும் மூன்று வருடகாலம் மேற்கு நாடுகள் பலவற்றிலும் யாத்திரை செய்தவர். அவரது சுபாவம் இருவகைப்பட்டது. அதில் ஒரு பகுதி சமயத்தையும் மற்றைய பகுதி சமூகத் தேவைகளையும் ஆதாரமாகக் கொண்டது. இரண்டின் பொது நோக்கும் ஆன்மநேயமாகும். மனிதநேய விழுமியங்களாக விளங்கும் அவரது பண்பாட்டுச் சிந்தனைகள் இங்கிருந்துதான் உதயமாகின்றன.

விவேகானந்தர் ஒரு விடயத்தை எடுத்துக்கொண்டாரானால் குறிப்பாக உருவவழிபாடாயினும் சரி, வர்ண அமைப்பாயினும் சரி அவற்றில் காணும் உயர்வான பகுதியை உயர்வென்றும், குறைவான பகுதியைக் குறைவென்றும் கூறத் தயங்குவதில்லை. அவர் ஈடுபாடு கொண்ட அனைத்துத் துறைகளிலும் இச்சுபாவம் இழையோடிருப்பதனைக் காணலாம். இந்து மதத்தின் உயர்நிலையினைப் பேசும்போது ''மனிதப் பிறவியின் கண்ணியத்தை இந்து மதத்தைப்போல் உயர்த்திப் பேசும் சமயம் வேறு எதுவும் உலகிலே இல்லை; ஆனால் இந்து சமயத்தைப் போல் ஏழைகளை, வறிய மக்களை பொருட்படுத்தாத சமயமும் உலகிலே வேறு கிடையாது[1] எனக் கூறுமிடத்து இந்து மதத்தின் மேலான இயல்பும் - இந்துக்களின் கீழான ஒரு பகுதியும் கவனத்துக்கு எடுக்கப்படுகின்றன. இத்தகைய மதப்போக்கிற்கு சுவாமி கூறிய விளக்கம் இந்து சமுதாயம் இப்போது தாழ்ந்த நிலையிலே இருப்பதற்குக் காரணம் மதமல்ல மதத்தை மக்கள் முறையாகப் பின்பற்றாமல் போனதுதான் இப்போதைய வீழ்ச்சிக்குக் காரணம்'' என்றார்.[2] சமுதாயத்தின்



இத்தகைய நிலையினை நாம் மாற்றியாக வேண்டும். அதனை மதத்தை அழிப்பதன் மூலம் செய்யக்கூடாது. மாறாக இந்துமத போதனைகளையும் அதன் பண்பாட்டுக் கூறுகளையும் பின்பற்றுவதன் மூலமே அதனைச் சாதிக்க முடியும் எனக் கருதினார். அதன் காரணமாக ஆன்ம சுதந்திரமும் சமுதாய சேவையுமே அதற்கான சிறந்த விழுமியங்களாக அவரால் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

## குருவும் சீடரும்

இவ்வழியிலே அன்பு, சேவை, தியாகம், துறவு, பிரமச்சாரியம், ஆன்மீகம், நல்லொழுக்கம் போன்ற மனித விழுமியங்களை மக்களிடையே உருவாக்குவதற்குப் பலவகையான பிரசார உத்திகளை மேற்கொள்ள வேண்டியிருந்தது. ஸ்ரீ இராமகிருஷ்ணரே இத்தகைய மனிதநேயத்தின் தாற்பரியங்களை ஆழ்ந்த அன்புடனும், மிகுந்த பரிவுடனும் விவேகானந்தருக்குக் குருவாக இருந்து உணர்த்தியுள்ளார். ஒரு சமயம் பரப்பிரம்மத்தை அடையும் நிர்விகல்பசமாதியை தனக்கு அருள வேண்டுமென விவேகானந்தர் வேண்டியபோது கோபமே அணுக முடியாத குருநாதர் மிகச் சினம் கொண்டவராக அவரைப் பார்த்து,

> ''உனக்கு வெட்கமில்லையா? நீ பெரிய ஆலமரமாய் நின்று ஆயிரக்கணக்கான மக்கட்கு நிழல் தருவாய் என்றல்லவா உன்னை நான் நினைத்தேன். நீயோ உனது விமோசனத்தை மட்டுமே நாடுகிறாய்''

என்று அவரது சமூகப்பணியினை நரேனுக்கு நினைவூட்டினார் பரமஹம்சர். உனது சேவையும் தொண்டும் மிக உயர்ந்த ஞானமாக மனிதவர்க்கத்தின் உயர்ந்த சேவையாகப் பரிமளிக்க வேண்டும்'[3] என்னும் குருவின் அறிவுரையானது சுவாமிஜியின் உறங்கிக் கிடந்த மனிதநேயப் பண்புகளை ஊற்றெடுத்துப் பெருக்கும் தூண்டுகோலாக அமைந்தது. 'தியாகம்' என்பதன் பொருள் இன்னதென உணர்ந்ததும் சுவாமி மனமுடைந்து குருவின் முன் கண்ணீர் சிந்தினார். அது அவரது சுயநலப்பற்றையும் கழுவுவதாக ஆயிற்று.

சுவாமி 18 வயது முதல் 21 வயது வரை *(1880-1884)* வாழ்விலே பல்வேறு நெருக்கடிகளைச் சந்தித்தவர். பிரபஞ்சம் அனைத்திற்கும் பொருந்தும் மேலான பகுத்தறிவுவாதத்தின் மேலாதிக்கத்தை ஏற்க அல்லது திணிக்கவே அவரது மதி நுட்பம் விரும்பியது. அதேசமயம்

தனி நபரின் ஒழுக்கவுயர்வுத் தன்மையை புறக்கணிக்கும் உலகாயதத்தின் மீது வெறுப்பும் எழுந்தது. சித்தாந்த சர்ச்சைகளை, வாதப்பிரதிவாதங்களை, குணதோஷவிமர்சனம், நன்மை தீமை இவற்றினைப் பாகுபடுத்தி ஆராயும் மனப்போக்கானது பின்னர் 'விவேகானந்தர்' என்ற பெயருடைமைக்கும் காரணமானது. இறுதியிலே திடமான ஆன்மீக உணர்வும் சமூகத்தின் மேற் கொண்ட அயராத நேசமும் அவரை ஒரு சிறந்த ஆன்மநேய விழுமியங்களை உடைய பெரும் இந்து மத சிந்தனையாளராக்கியது. விவேகானந்தர் இத்தகைய ஒரு தெளிவிற்கு வருவதற்காக குருநாதர் அவரை அவர் போக்கிலேயே விட்டு வைத்தார். இறுதியில் இரும்பைக் காந்தம் ஈர்ப்பது போல குருநாதரின் இனம்புரியாத சக்தி அவரை ஈர்த்தது. பகுத்தறிவு வாதத்திலே கொண்ட ஈர்ப்பினால் அவரது மனமும் மதியும் ஓயாது போரிட்டன. கர்வத்திற்கும் தெய்வீக அன்பிற்கும் இடையே நடந்த இப்போட்டியை குருநாதரின் தூரதிஷ்டி கண்டுகொண்டது. ஏனையோர் நரேந்திரனைப்பற்றிக் கவலைப்படும் போது ஸ்ரீராமகிருஷ்ணர் பின்வருமாறு அவர்களைத் தேற்றினார். 'துயரம், மிடிமை ஆகியவற்றுடன் நரேன் தொடர்பு கொள்ளும் போது அவனது இயல்புகளில் ஒன்றான கர்வம் கரைந்துருகி எல்லையற்ற பரிவாக மாறிவிடும்; தைரியம் இழந்துள்ள மக்கள் மனதிலே மீண்டும் நம்பிக்கையுடன் கூடிய விஸ்வாசங்களைப் தோற்றுவிக்க அவரால்தான் முடியும். இவ்வாறுதான் பிறரது துயரங்களைப் போக்கும் மனிதநேய விழுமியங்களின் மொத்தப் பரிமாணமுடையவராக விவேகானந்தரால் விளங்க முடிந்தது. அதனடியாக அவரது அறிவுக் கூர்மையும் ஆன்மீகமும் இணைய நீண்டகாலம் ஆயிற்று.

மனித மேம்பாட்டுக்கான விழுமியங்கள் எல்லோரிடமும் இருந்தாலும் அவற்றினை வெளிக் கொணருவதற்கான ஊக்கத்தையும் உற்சாகத்தையும் வழங்கக் கூடியவர்களே இன்றைய நியையிலே தேவைப்படுகிறார்கள். அன்று விவேகானந்தருக்கு இத்தகைய ஊக்கியாக விளங்கிய குருநாதர் போல இன்றைய மக்கட்கு மனித மேம்பாட்டு விழுமியங்களைப் பயிற்றுவிக்கும் ஊக்கியாக சுவாமி விவேகானந்தரின் சிந்தனைகள் விளங்குகின்றன. சத்தியத்தைக் கடைப்பிடிப்பதும் கடமைகளைத் தெய்வ சேவையாகச் செய்வதும் மக்களிடையே மேலான பண்புகளை உருவாக்கும் என்பதால் விவேகானந்தர் தூய்மை, முழுமை, சுதந்திரம் என்பவற்றை உள்ளடக்கிய



பண்புகளாகக் குழந்தைகள் வளருமாறு பெற்றோர்கள் கவனமெடுப்பதனை வற்புறுத்துகின்றார்.

## ஆன்மீக சுதந்திரம்

துறவும் தொண்டுமே இந்து மதத்தின் மேலான லட்சியங்களாகும். துறவு என்பது உள்ளத்துறவினையே முக்கியமாகக் கொண்டது. சமுதாய அரசியற் கருத்துக்களை விதைப்பதற்கு முன்னோடியாக மக்களைப் பண்பாட்டுமயப்படுத்துங்கள். ஆன்ம நேயத்தினூடாகவே ஐக்கியத்தின் உண்மையையும் சுதந்திரத்தையும் எமக்குள்ளே நிலை நிறுத்திக் கொள்ளும்போது எம்மிடத்துள்ள அவமானமும் பொறாமைகளும் கீழ்த்தரமான எண்ணங்களும் தொந்தரவு செய்ய முடியாது. இத்தகைய உள்ளத் தடைகள் நீங்கினால் இயல்பான சுதந்திர உணர்வு வளர முடியும். மக்கள் மகிழ்ச்சியாகவும் ஆரோக்கியமாகவும் உபயோகமான வழிகளிலும் செயல்பட முன்வருவார்கள். இப்படியான சுதந்திர நிலையை ஆன்மீகத்தின் வாயிலாக விருத்தி செய்வதே உயர்ந்த விழுமியங்களை உள்ளடக்கிய ஆன்ம நேயமாக மலரமுடியும் என்பது சுவாமிஜியின் சிந்தனைக்கருவூலமாக உள்ளது.

'உயர்ந்த மனிதத்துவம்' என்பதிலும் இந்துக்கள் ஏனையோரிடமிருந்து வேறுபடுவதனை சுவாமிஜி எடுத்துக்காட்டும் போது

> ''ஆன்மீகப் பண்பாடும் பற்றின்மையும் வாய்ந்த பிராம்மணத்துவமே நமது லட்சியமாகும். 'பிராம்மணத்துவம்' என்பதன் பொருள் லௌகீக குணங்கள் முழுவதும் மறைந்து ஞானம் மிகுந்த காணப்படும் நிலையாகும். இந்து இனத்தின் லட்சியமும் இதுதான்''[4]

சமூக மறுமலர்ச்சிக்கு மனிதத்துவத்தைப் புனிதப்படுத்தும் இத்தகைய வாழ்க்கைத் திட்டமே மனிதநேய மேம்பாட்டு விழுமியங்கட்கான அத்திவாரமாகும் என ஆணித்தரமாகக் கூறினார். ஒவ்வொரு மனிதனும் இத்தகைய விழுமியங்களைப் பேணுவதால் பிராம்மணத்துவத்தை அடைய முடியும் என புதிய பரிமாணத்தை ஏற்படுத்தினார். தனிமனிதனும் நாடும் பெருமையடைய வேண்டுமெனில்; நன்மைதரக் கூடிய சக்திகளில் நம்பிக்கை வைத்தல்; பொறாமை, சந்தேக இயல்புகளை அறவே கைவிடுதல்; நல்லவர்களாகவும்-நன்மை செய்யவும் பிறருக்கு உதவி புரிய விரும்புபவர்க

ளாகவும், தன்னை ஆக்கிக் கொள்ளுதல் இவையே அதிசிறந்த உபாயங்களாக விவேகானந்தரது சொற்பொழிவுகளில் காணமுடிகின்றது.

## வர்ணமும் சாதிப்பிரிவும்

வர்ணத்தின் மூலம் சமூகத்தில் ஏற்படுத்தப்பட்ட சாதியமைப்பு மக்களை மேனிலைப்படுத்தவில்லையெனில் அது அழிக்கப்பட வேண்டியதன் அவசியமும் சுவாமியின் பேச்சுக்களின் உட்பொருளாக உள்ளது. பண்பாட்டு நடத்தையிலே மேனிலையில் உள்ளோர் கீழ் நிலையிலேயுள்ள மக்களை அலட்சியப்படுத்துவதனை அறவே அவர் வெறுத்தார். ஜாதி என்ற சொல் தனிமனித சுதந்திரத்தை வெளிப்படுத்துவதாகவே அவர் பொருள் கொண்டார்.[5] அது தனிமனிதனின் பிரகிருதி இயல்பையும் குணவிசேடங்களையும் குறிக்கப்பயன்பட்டதென கீதையில் இருந்து எடுத்துக்காட்டினார். பிராம்மண, சத்திரிய, வைசிய, ஊழியர் குண இயல்புகள் ஒவ்வொரு மனிதனிடத்தும் அளவில் குறைந்தோ கூடியோ காணப்படுவன. ஒவ்வோர் சமயத்தில் ஒவ்வொருவரிடத்தும் ஒவ்வோர் குண இயல்பு மேலோங்கிக் காணப்படும். ஒரு மனிதன் கடவுளைத் தியானிப்பதிலும், அது பற்றிய உரையாடல்களிலும் காலத்தைக் கழித்தால் அவன் பிராம்மணத்துவத்தை அடைகிறான். இயல்பாகவே ஒருவன் தன் வர்ணத்திலிருந்து தன்னை மற்றொரு வர்ணத்திற்கு மாற்றலாம். அது இயற்கையுமாகும். அப்படி யில்லாவிட்டால் விஸ்வாமித்திரர் பிராம்மணராவதும், பரசுராமர் சத்திரியராவதும் எவ்வகையில் சாத்தியமாகும்? இருக்கருத்து விளக்கமானது விவேகானந்தர் புதிய சமுதாயத்தை எப்படி நெறிப்படுத்தவேண்டும் எனக்கூறும் ஆலோசனையாக அமைந்தது.

> ''புராதன இந்தியாவில் இருமாபெரும் மனிதர்களான புத்தரும் கிருஷ்ணரும் சத்திரியர்களே. இவ்விரு தெய்வீக புருஷர்களும் உயர்ந்தவர், தாழ்ந்தவர் ஏழை, பணக்காரர் என்ற வேற்றுமை பாராட்டாது அனைவருக்கும் ஆத்மஞானத்தின் வாயிற் கதவுகளைத் திறந்து விட்டார்கள் என்பது பலரும் அறிந்த உண்மையாகும். அதனால் ''சமயத்துறையிலே சாதி என்பதே கிடையாது. சாதி என்பது வெறும் சமூக ஏற்பாடே ஆதலால் மதத்தைக் குறைசொல்லிப் பயனில்லை. மக்களைத் தான் குற்றம் சொல்ல வேண்டும்''[6]



என சமுதாயத்தின் பண்பாட்டுக் குறைவை அவர் நொந்து கொண்டார். சைவசித்தாந்த வருண நோக்கினை ஒத்ததாகவே இதுவும் விளங்குகின்றது.

புரோகிதத் தொழில் செய்பவர்கள் பலரிடம் பண்பாட்டு விழுமியங்கள் அற்றுப்போவதையும் சுவாமிஜி பல்வேறு இடங்களில் சுட்டிக்காட்டினார். அவர்கள் ஏழை மக்களிடம் அனுதாபத்துடனும் பரிவுடனும் நடக்காததன் விளைவு அவர்களில் ஆயிரக்கணக்கானோர், தாழ்த்தப்பட்டோர். கிறிஸ்தவத்தை தழுவினர். பசிக்கொடுமை மட்டும்-அல்ல; இந்துக்களிடமிருந்து எந்த வித உதவியும் ஒத்துழைப்பும் கிடைக்காமற்போனதே இதற்குக் காரணமாகும்[7] என்ற சுவாமியின் விமர்சனம் ஏழை மக்கட்காக அவர் படும் விசனத்தையே காட்டுகின்றது.

மதத்தின் உட்கருத்தைப் பாராமல் வெளி ஆசாரங்களைப் பிரமாதப்படுத்துபவர்களாகவும் அவநம்பிக்கை மிகுந்தவர்களாகவும் இருக்கும் வஞ்சகப் போலிகள் தான் இந்துமதத்தின் மனிதநேய விழுமியங்களின் வீழ்ச்சிக்கு காரணமானவர்கள் என்பதனையும் விளக்கினார். இந்து மதத்தின் உயர் நாடியான ஆன்மீகமே சகல மனிதநேயப் பண்புகளையும் வளர்க்கும் ஆற்றல் சக்தியாக மிளிர வேண்டுமென்பதும் சுவாமிஜியின் ஆதங்கமாக விருந்தது.

## அன்பு நெறி

அன்பு நெறி பற்றிய சுவாமிஜியின் விளக்கத்தை ஒரே ஒரு சிறு உதாரணம் மூலம் பார்க்கலாம். 'தனது கால்கள் முள்மீது பட்டதும் இரத்தம் பெருகுவதை உடனே கண்கள் கண்டு கண்ணீர் வடிக்கின்றன. இது கண் கட்கும் கால்கட்கும் உள்ள இணைப்பை வெளிப்படுத்துகின்றது. இவ்வாறு உடலில் உள்ள பல்வேறு உறுப்புக்களின் தொழிற்பாடுகள் ஐக்கியத்தையும் பரஸ்பர உதவியையும் விளக்கும் புற நிலைப் பாடமாக இருக்கின்றன. இது போன்று தன்னியல்பாகத் தோன்றும் அன்பு மானிடத்திலும் தோன்றி வளர வேண்டும். பிறர்படும் துயரத்தை உங்கட்கு உரியதாகக் கருதி நீங்கள் அனுபவிக்கும் போது மனித விழுமியத்தின் ஒரு பகுதி வெளிப்படுத்தப்படுகின்றது. எமது உயிர் வாழ்க்கையை இயக்கும் கோட்பாட்டிலிருந்து அன்பு என்பது இங்ஙனம் உதயமாக வேண்டும். அப்பொழுது தான் அன்பின் தெய்வீகமும் புனிதமும் தோற்றப்படும்.

''இந்து'' என்ற பெயரே புனிதமானது. அது பற்றிய விளக்குமிடத்து ''இந்து'' என்ற பெயரைக் கேட்ட மாத்திரத்து உள்ளுக்குள் ஒரு சக்தி மின் அலையைப் போல் பாய வேண்டும். அப்பொழுது மட்டுமே நீங்கள் 'இந்து' என்ற தன்மையை அடைவீர்கள். 'இந்து' என்ற பெயர் தாங்கிய ஒரு மனிதனுக்கு ஏற்படும் துன்பம் உங்கள் உள்ளத்தைத் தாக்கி உங்கள் குழந்தையே துன்பப்படுத்துவது போன்ற தோர் உணர்வை ஏற்படுத்த வேண்டும். அப்பொழுது மட்டுமே நீங்கள் 'இந்து' என்ற பதத்திற்கு அர்த்தமுடையவராவீர்கள்''[8]

பிறர் துன்பத்தைப் போக்க முயல்பவன் எவனோ அவனுக்கு 'இந்து' என்ற பெயர் பொருந்தும் என்பது இவ்விடத்திலே விவேகானந்தரால் விளக்கம் பெறுகின்றது பெயரளவிலே இந்துவாக இருந்து கொண்டு இந்துக்களாக நடிக்கும் போலிகளையும், வர்ணப்பிரிவினரையும் கடுமையாக விமர்சித்த விவேகானந்தர் 'உண்மை இந்து' சகல உயிர்களிலும் மனித நேயம் மிக்கவனாக விளங்க வேண்டுவதன் அவசியத்தைப் இங்ஙனம் புலப்படுத்தினார்.

## சர்வமத சபையில் மனிதநேய முழக்கம்

1893 செப்டம்பரில் சிக்காக்கோ சர்வமத சபையிலே முப்பது வயது இளம் துறவியாக நின்று ஆற்றிய உரையின் ஆரம்பமே மனிதநேய விழுமியங்களின் உன்னத வெளிப்பாடாக அமைந்தது. மதத்தால் இனத்தால். நிறத்தால், வேறுபட்ட மக்கள் யாவரும் ஒரே இறைவனின் குழந்தைகள், எமது சகோதரர் என்ற எண்ணம் அவரது உள்ளத்தில் பளிச்சிட்டது. அமெரிக்க நாட்டு சகோதர சகோதரிகளே! என விழித்துத் தமது பேச்சை ஆரம்பித்தார். மக்கள் யாவரையும் ஒரே குடும்பமாகக் காணும் இந்த ஞானியார்? எம்மையும் தமது சகோதரராகக் கட்டித்தழுவும் இத் தூரதேசத்துறவியார்? என சபையினர் அவரது ஆரம்ப உரையிலே அவர் வசப்பட்டு நின்றனர். எல்லா மதங்கட்கும் அன்னையான இந்துமதத்தின் சார்பில் - கோடானு கோடி இந்துக்களின் சார்பில் சபையோருக்கு நன்றி செலுத்திய அவரது பண்பினை உலகமக்கள் வியந்தனர்.மேலை நாடுகளில் முதன் முதலாக இந்து மதவிழுமியங்களை வேதாந்தத்தை பிரகடனம் செய்த பெருமை இவ்வாறு விவேகானந்தரையே சென்றடைந்தது.



அது மட்டுமல்லாது 'பிரிவு மனப்பான்மை, மூட நம்பிக்கை இவற்றிலிருந்து தோன்றிய மதவெறி ஆகியன இந்த உலகினை நெடுநாளாகப் பற்றியுள்ளன. வன்முறைகளை நிரப்பியுள்ளன. அடுத்தடுத்து உலகிலே உதிரப்பெருக்கினை ஓடச் செய்தன. எத்தனையோ சமுதாயங்கள் நம்பிக்கையிழந்து விட்டன. இப்ப யங்கரப் பை சாசக் கொடுமைகள் தோன்றாதிருப்பின் மனித சமூகம் இன்றிருப்பதனை விட பெரிதும் உயர்நிலைபெற்றி ருக்கும். அவரது பேசசு சிறிய சொற்பொழிவேயானாலும் அவரது சர்வ சமய சமரசக் கருத்துக்கள் மாநாட்டின் குறிக்கோளை நிறைவேற்றி வைத்தன.

''இன்று காலை இப்பேரவையின் தொடக்கத்தைக் குறிக்க ஒலித்த மங்கல மணி ஓசை எல்லாக் கொடுமைகட்கும், பிரிவினைகட்கும், மக்களிடையே நிலவும் இரக்கமற்ற உணர்ச்சிகள் மறையவும் சாவுமணியாகட்டும்''

என்ற அவரது ஆர்வமான வேண்டுதல் இவற்றினால் சர்வ மத சபையில் கலந்து கொண்டவர்களில் சுவாமி விவேகானந்தர் சந்தேகமற முதன்மையானவர் ஆனார். அவர் பேச்சைக் கேட்ட பின்னர் 'ஞானம் தோய்ந்த இந்திய நாட்டிற்கு மதப்பிரசாரகர்களை அனுப்புவது எவ்வளவு முட்டாள் தனம் என்பதனை உணர்கிறோம்'[9] என அமெரிக்கப் பத்திரிகைகள் அங்கீகார முத்திரை அளித்தமை இந்து மத விழுமியங்கட்கு விவேகானந்தரால் கிடைத்த பெரு வெற்றியாக அமைந்தது.

## கடவுள் வழிபாடும் தொண்டு நெறியும்

உருவ வழிபாட்டில் ''நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்'' என்ற சிவவாக்கியர் பாடலைத்தான் விவேகானந்தரது கடவுள் வழிபாட்டு நெறியும் எடுத்துக்காட்டுகின்றது. இந்த உலகம் துன்பத் தீயில் பொசுங்கும் போது உறங்கலாமா? நம்முள் குடியிருக்கும் கடவுள் விழித்தெழும்வரை நாம் அக்கடவுளரை கூவி அழைக்க வேண்டும். கடவுள் ஒவ்வொரு ஜீவனிலும் குடியிருக்கிறார். இது தவிரத் தனியான கடவுள் எதுவும் கிடையாது. இந்த உண்மையைக் காலம் கழித்தே நான் புரிந்து கொண்டேன். கண்ணுக்குப் புலப்படும் கடவுளாக விளங்கும்[10] உனது சகோதரரை நீவழ படமுடியாவிட்டால் கண்ணுக்கும் புலனாகாத கடவுளை எங்ஙனம் வழிபடமுடியும்?

''நீங்கள் சர்ச்சிலும், மசூதியிலும், கோயில்களிலும் காணும் கடவுள் உயிருடன் உங்கட்குள் இருக்கின்றார். எல்லாப் பிராணிகளின் உடலிலும் உறைகின்றான். அவற்றின் உடல்கள் தான் ஆண்டவன் கோயில். இந்தக் கோயில்லை வழிபட முடியாவிட்டால் எந்தக் கோயிலுக்குப் போயும் பயனில்லை. உருவச்சிலைகளில் கடவுளைக் காணும் நாம் அவரை உயிருடன் உலவும் மனிதரிலும் காணலாம். மனிதரில் வசிக்கும் அவ் இறைவனுக்கு தாம் சேவை செய்வதே அன்பு நெறியாகும்''.[11]

''விவேகானந்தரின் இச்சிந்தனையானது பலநூற்றாண்டுகட்கு முன் திருமந்திரம் கூறிய ''ஊனுடம்பு ஆலயம் உள்ளம் பெரும் கோயில்....'' தெள்ளத்தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்' என்ற பாடலையும் 'நடமாடும் கோயில் நம்பர்க்கொன்று ஈயில்படமாடக் கோயில் பகவற்கதாமே' என்ற பாடல் அடிகளையும் நினைவூட்டும்.

## தியாகம்

''தியாகம்'' என்ற பண்பும் விவேகானந்தரால் பல இடங்களில் ஊக்கப்படுத்தப்படுகின்றது. அவரது வார்த்தைகளில் விளக்கினால்

''எனக்கு மிகவும் வருத்தம் தருகின்ற ஒன்று என்னவென்றால் நாம் செய்யும் தவறுகளைக் காரணங்கள் காட்டி மன்னிப்பதுடன் நமது முட்டாள் தனமான ஆசைகளையும் தேவைகளையும் பார்த்து நம்மை நாமே திருத்தாமல் அதற்குப் பதிலாக இந்த லட்சியங்கள் சிறந்தவை என்று கூறி நம்மைத் தவறாக வழிநடத்தும் மனிதர்களை நாம் அடைந்திருப்பதுதான்''[12]

அத்துடன் மக்களின் உயர்ந்த நன்மைகட்காக அனைவரின் சுகத்திற்காக- உலகிலே தைரியமும் சிறப்பும் வாய்ந்தவர்கர்கள் தங்களைத் தாங்களே 'தியாகம்' செய்ய முன்வர வேண்டும். அப்போது தான் என்றென்றும் மாறாத நிலைத்த அன்பும் கருணையுமுள்ள நூறு புத்தபிரான்களும் யேசுமகான்களும் தோன்ற முடியும்'[13] இதயமே இல்லாமல் அறிவாற்றலை மட்டும் பயன்படுத்தி பயனற்ற விடயங்களை பத்திரிகையில் எழுதிக் கொண்டிருக்கும் எழுத்தாளர்களையும் எழுத்துக்களையும் நீங்கள் அறவேபொருட் படுத்தாதீர்கள். நீங்கள் கிராமம் கிராமமாக சென்று மனித குலத்திற்கும் உலகிற்கும் நன்மை



செய்யுங்கள். மற்றவர்கட்கு முத்தியை வாங்கிக் கொடுப்பதற்கு நீங்கள் நரகத்திற்குச் செல்லவும் தயாரானால் இவ்வாறாக உறுதியாக இருக்கும் உங்களால் நல்லகாரியத்தை நிச்சயம் சாதிக்க முடியும்''[14] சுவாமியின் கருத்திலே இவ்வுயர்ந்த செயற்பாடானது அம் மனிதனை நகரத்திற்குச் செல்லாமலே தடுக்கும் ஆற்றலுடைய தாக்குகின்றமை புலனாகின்றது.

''வழிபாடு'' என்றால் என்ன? என்ற சுவாமியின் விளக்க நிலையின் விழுமியமும் அற்புதமானது, நடமுறைக்குகந்ததாகும். உருவக் கடவுட் கொள்கையானது சுவாமிகள் வார்த்தைகளில் பின்வருமாறு விளக்கம் பெற்றுள்ளது.

''நமது மனிதிலிருந்து உருவக் கடவுளர்கள் தற்காலிகமாக மறைந்து போகட்டும். நம் சொந்த மக்கள் இனமாக உள்ள கடவுளர்கள் விழித்துக் கொள்ளட்டும். விராட்புருட வழிபாடே முதலில் செய்ய வேண்டும். இந்த மக்களும் பிராணிகளுமே நாம் வழிபடும் முதல் தெய்வங்களாகும். ஆதலால் உருவக் கடவுள் வழிபாட்டையும் குறித்த ஒரு நன்மைக்காக தியாகம் செய்யத் தயங்கக்கூடாது''

என்றார்.[15] அத்வைதப் போதனைப்படி மக்கள் யாவரும் சகுணக் கடவுளர்க்குச் சமமானவர்கள். ஆத்மாவின் பிரதிநிதிகள் என்ற உயர் சமத்துவநிலை இங்கு விவேகானந்தரால் முன்வைக்கப்பட்டுள்ளது.

ஆயினும் சுவாமிஜி உருவ வழிபாட்டினைப் பற்றித் தாழ்வாக ஒரு போதும் எண்ணியதில்லை. வழிபடுநெறி பற்றிய விழுமியங்களில் அவர் தனது அசையாத நம்பிக்கையைப் பலவழிகளில் புலப்படுத்தியுள்ளார். ஒரு சமயம் உருவ வழிபாடு பற்றிக் கேலி பேசிய ஆள்வார் சமஸ்தான மகாராஜாவிடம் அங்கு மண்டபத்தில் மாட்டப்படிருந்த முன்னாள் மகாராஜாவின் ஓவியத்தை எடுத்து அதில் எச்சில் உமிழும்படி அவர் கூறினார். மகாராஜா அதிர்ச்சியும் ஆச்சரியமும் அடைந்து அதனை மறுத்தார். ஏன் அவ்வாறு செய்ய முடியவில்லை? என விவேகானந்தர் கேட்ட போது அது தனது தந்தையார் எவ்வாறு அப்படிச் செய்ய முடியும் எனக் கூறினார். வெறும் வண்ணமும் காகிதமும் கலந்த ஓவியம் தானே? அது உமது தந்தையை எவ்விதம் பாதிக்கும்? என வினவியபோது அது எனது தந்தையின் பிரதிபிம்பம் என்றார். அதேபோலவே கடவுளர் உருவங்களும் பரம்பொருளின் பிரதிபிம்பங்களையே நினைவூட்டு

வதாகும். பக்தன் அதில் உறையும் கடவுளை வழிபடுகிறானே அன்றி வெறும் கல்லையும் மண்ணையும் அல்ல என உருவ வழிபாட்டின் உயர் விழுமியம் பற்றி உணர்த்தினார்.[16]

## ஒழுக்கம்

கடவுளர்க்கு உயிர்ப் பலிகொடுப்பது பற்றி விவேகானந்தர் கடும் கண்டனம் தெரிவித்ததுடன்[17] கருணை, இரக்கம், அன்பு, தியாகம், சத்தியம், ஒழுக்கம் இவற்றினை உயர்ந்த மனிதநேய விழுமியங்களாக வளர்ப்பதுடன் அவைகளையே கடவுள் இருப்பிடமாகக் கருதி இவ்வுயர் விழுமியங்களைக் கொண்ட மனிதர்களை உருவாக்க வேண்டுமென்பது அவர் சொற்பொழிவுகளின் லட்சியமாக இருந்தது. சுவாமிஜி கூறுவது யாதெனில், குழந்தாய் நான் வேண்டுவதெல்லாம் இரும்பு போன்ற தசைகள் எஃகு போன்ற நரம்புகள் - அதற்குள்ளே இடியேறு போன்ற மனம், வலிமை, ஆண்மை வீரியம் இவற்றுடன் கூடிய பிரம்ம தேஜஸ் இவையே எனக்கு வேண்டும் எனவும் குழந்தைகட்கான தனது அறிவுரையிலே கீழ்படிந்து நடக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். சொந்த நம்பிக்கையைக் கைவிடக்கூடாது. தலைமைககுக் கீழ்ப்படியாதவரை மனித சக்திகளை ஒன்று திரட்டமுடியாது. தனிமனித சக்திகளை ஒன்று சேர்க்காதவரை எந்தக் காரியமும் சாத்தியப்படாது, பொய்மையில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். பொறுத்துப் போகக் கற்றுக் கொள்வது, ஒழுக்கம் உள்ளவனாக இருப்பது இதயபூர்வமான உறுதியுடன் உழைப்பது பாவத்தை மனதால் கூட நினையாத தன்மை, அதிகார ஆசைக்கும், பொறாமைக்கும் புகழுக்கும் பலியாகிவிடாத இதயம், தன்னம்பிக்கை இவையே வெற்றியைத் தரும்.[18] என அறிவுறுத்தினார். இது சுவாமி அனைத்துலக மக்கட்கும் கூறிய ஒழுக்க விழுமியங்கள் பற்றிய அடிப்படைகள் எனலாம். இச் சிந்தனையானது.

''நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க,
நல்லார் சொற் கேட்பதுவும் நன்றே,
நல்லோர் குணங்கள் உரைப்பதுவும் நன்றே,
நல்லாரோடிணங்கியிருப்பதுவும் நன்றே''

எனவரும் ஔவையார் பாடலடிகளைப் போன்ற நெறிமுறையாகும்.



## தானதர்மம்

பிறருக்கு வழிகாட்ட முயலக்கூடாது. பிறரை அடக்கியாளவும் கூடாது. எல்லோருக்கும் ஊழியனாக உழைக்க வேண்டும். 'கலியுகத்தில் ஒரே ஒரு நல்ல பணி தானம் செய்வதாகும். ஆத்ம ஞானமளிப்பது தானங்களில் மிகச் சிறந்தது என்பது விவேகாந்தர் கருத்தாகும். அதன் பின்னரே ஏனைய தானங்கள், அதிலும் உலகியலுக்குரிய தானங்களை அதிகரிக்கவேண்டும். ஒரு மனிதனின் உயிரைக் காப்பாற்றுவது அடுத்தபடி சிறந்த தர்மமாகும். அதற்கான சிறந்தவழி அவனுக்கு உணவளிப்பதாகும். இவ்வாறு கடவுள் வழிபாட்டை விட இக்காலத்தில் நாம் செய்யக்கூடிய ஒரே வழிபாடு தானதர்மச்செயல்களை நடைமுறைப்படுத்தவதாகும். தானங்களில் தலையாயதான ஆத்மஞானத்தை ஒருவருக்கு வழங்குபவன் மீண்டும் பிறந்து இறக்கும் துன்பத்தை நீக்கியவனாவான். மனிதனுக்கு ஆத்மா ஞானமளிப்பவனே உலகிற்குப் பேருபகாரம் செய்தவனாகின்றான்.[19]

ஆத்மபலமுள்ளவர்கள் உலகிலே எந்தக் தேவைகளையும் இலகுவில் பூர்த்தி செய்ய முடியும். விவேகானந்தரது நோக்கிலே ஏனைய தானங்கள் இதற்குக் கீழ்ப்பட்டதேயாகும். மேலும் நான் ஆத்ம ஞானியுமல்ல, தத்துவஞானியுமல்ல. நான் ஓர் ஏழை. ஏழைகளை நேசிக்கும் துறவி. இந்த ஏழை மக்களுக்காக அனைவரும் கடவுளைப் பிரார்த்திக்க வேண்டும் என்ற விவேகானந்தரது உபதேசங்கள் ஏனையோருக்கும் ஒரு உந்துசக்தியாகியது. இது மட்டுமன்றி வறுமைப்பட்ட மக்கள் நிவாரணப் பணியே அத்தியாவசியமானது என்பதனையும் தமது பேச்சுக்களில் ஆணித்தரமாகக் கூறிவந்தார்.[20]

''பசிபோக்கிய பின் செய்யும் ஆத்மஞானமே அதி உன்னதமானது என்பதனை; மக்கட்கு முதலில் உணவு தரப்பட வேண்டும். பின்னரே ஆத்ம போதனை செய்ய வேண்டும். பசியால் வாடித்துடித்துக் கொண்டிருக்கும் மக்கட்கு அவர்களின் தேவைக்கும் அதிகமான மதபோதனை செய்து கொண்டிருக்கிறோம். எந்தமதபோதனையும் அவர்கள் பசியை நீக்கிவிடாது''[21]

எனக்கூறி தர்மம் செய்வதனை ஊக்கப்படுத்தினார். மக்கட்குத் தத்துவங்களை மட்டு தந்தால் போதாது-முதலில் அவர்கட்கு உணவும்

உடையும் இருப்பிடமும் அளிக்க வேண்டும் என அவர் விரும்பினார்.

## கல்வி

கல்வி பற்றிய விவேகானந்தரின் சிந்தனைகளும் மனித விழுமியங்களின் அடிப்படைகளையே எடுத்து இயம்புகின்றன.

> ''கல்வி என்பது மூளைக்குள் விடயங்களைப் போட்டுத் திணிப்பதல்ல. வாழ்க்கையை உருவாக்கக்கூடிய, மனிதனை மனிதனாக்கக்கூடிய நல்ல ஒழுக்கக் கருத்துக்களை கிரகித்து நடக்கும் ஆற்றல் உள்ள கல்வி ஊட்டப்பட வேண்டும்.ஐந்து உயர்ந்த பண்புகளைக் கிரகித்து அவற்றை உன் வாழ்விலும் நடத்தையிலும் ஊடுருவச் செய்வாயானால் ஒரு நூல் நிலையம் முழுவதையும் மனப்பாடம் செய்தவனைவிட நீயே அதிகம் கற்றவனாவாய்''[22]

ஒரு நாட்டின் முன்னேற்றமும் மனித மேல் நிலைப்பண்பாடுகளும் அந்த நாட்டு மக்கள் பெற்றிருக்கும் கல்வி அறிவாற்றலைப் பொறுத்தே அமைகிறது. 'கல்வி ஒன்றே இன்றைய அடிப்படைத் தேவையாகின்றது. ஐரோப்பாவின் பல நகரங்களிலும் எளியமக்கட்குக் கிடைத்திருக்கும் வசதிகளைப் பார்க்கும் தோறும் நமது மக்களின் கல்வியறிவற்ற பரிதாபநிலையை எண்ணிக் கண்ணீர் விட்டு அழுதிருக்கிறேன்'[23] என சுவாமிஜி கூறுகின்றபோது இரக்கமும் பரிவுமுள்ள அனைவராலும் விவேகானந்தரின் இவ்வுயரிய நேசத்தை உணர்ந்து கொள்ளாமல் இருக்க முடியாது.

அதனால் 'எத்தகைய கல்வி நல்ல ஒழுக்க விழுமியங்களை உருவாக்குமோ மனவலிமையை வளர்க்குமோ, விரிந்த அறிவினைத் தருமோ, ஒருவனைத் தன் சொந்தக் காலில் நிற்கச் செய்யுமோ அத்தகைய கல்விதான் நமது தேவையாகும்' என்பதிலிருந்து கல்வியறிவினால்தான் பல உயர் விழுமியங்களை உருவாக்க முடியும், என்பதனை ஊக்கப்படுத்தி உள்ளார். இன்று கல்வி நிறுவனங்கள் அன்றிருந்ததைவிட எண்ணிக்கையில் பெருகியுள்ளன. ஆனால் கற்றவர்களிடையே பரந்தநோக்கில்லை. தெய்வீக அறிவும் விஞ்ஞான அறிவும் ஒன்றிணைந்து செ யல்பட வேண்டும்.அவ்வாறு



இணையும்போதே உண்மையான ஆனந்தம் உண்டாகின்றது. கெட்டஎண்ணங்கள், கெடுதியான சிந்தனைகள் இவற்றிலிருந்து விடுபடுதற்கு விஞ்ஞானம் உதவமாட்டாது. உலக வாழ்வின் விழுமியங்களை மேம்படுத்த தெய்வீகப் பண்புகளால் மட்டுமே உதவ முடியும். அறச் சிந்தனைகளை, விட்டுக் கொடுக்கும் பொறுமையை, சமநிலையான மனப்போக்கினை இத்தகைய ஆன்மீகக் கல்வியே வழங்கமுடியும் என்பதே சுவாமிஜியின் முடிபாகும்.

## பெண்கள் உயர் நிலை

பெண்கள் பற்றிய சமூக சிந்தனை நிலைப்பாடுகளிலும் விவேகானந்தர் மிக உயர்வான நோக்குடையவராகவே திகழ்கின்றார். ''ஆண் பெண் அனைவரிடத்தும் ஒரே ஆன்மாவே வியாபித்திருக்கின்றது' என வேதாந்தம் போதிக்கின்றது. அப்படி இருந்தும் நம் நாட்டிலே ஆண்களையும் பெண்களையும் நடத்தும் முறையில் ஏன் வேற்றுமை பாராட்டப்படுகின்றதென்பதனை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

> ''எந்த நாடு பெண்கட்கு மரியாதை கொடுக்கவில்லையோ, எங்கு பெண்களை மேனிலைப்படுத்தவில்லையோ அந்த நாடும் சமூகமும் எப்போதும் உயர்வடைந்ததேயில்லை' முதலில் உங்கள் பெண்கட்கு கல்வியறிவூட்டுங்கள். பின் அவர்கள் போக்கில் விட்டு விடுங்கள் எல்லா நாடுகளிலும் நமது நாடு பின்தங்கியிருப்பதற்கு காரணம் பெண்கள் அவமானம் செய்யப்படுவதுதான் கடினமான விதிகளினால் பெண்களை கட்டுப்படுத்தலாம் என நினைத்து ஸ்மிருதி முதலிய நீதி நூல்களை எழுதிய முன்னோர் பெண்களை யந்திரங்கள் ஆக்கி விட்டனர்''[24]

என ஓரிடத்திலே சுவாமிஜி கண்டிக்கின்றார்.

பெண் கல்வி பற்றியவிடத்து முதலில் பெண்ணுக்கு ஆன்மீகக்கல்வி போதிக்க வேண்டும். ஆன்மீகத்துறையினை அடுத்தே ஏனைய துறைசார்ந்த பயிற்சிகள் அமைய வேண்டும். பெண்கள் ஆத்மஞானம், பிரமச்சரிய விரதம் காத்தல், நற்குணங்களைப் பேணுதல் இவற்றிலே மிகுந்த சிரத்தையுடன் கவனித்து நடத்தல் வேண்டும். பாரதப் பெண்கள் விவேகானந்தரது பார்வையில் சீதை,

தயமந்தி, சாவித்திரி, போன்றவர்களின் அடிச்சுவட்டினைக் குடும்ப வாழ்விலே பின்பற்றக் கூடியவர்களாக இருக்க வேண்டும். சிறந்த ஒழுக்கம் நிறைந்த பெண்கள் மிகுந்த ஆத்ம சக்தியும் வலிமையும் பெற்றவர்களாக விளங்க முடியும்[25] "மேலை நாட்டில் பெண்களைப் பெரும்பாலும் தாரமாக நோக்குகின்றார்கள். கீழ் நாடுகளில் பெண்களைப் பெரும்பாலும் தாயாக நோக்குகிறோம்" என விவேகானந்தர் அழகுற விளக்கமும் அளித்தார். இல்லறத்தில் உள்ளவர்கட்குப் பணம் தேடும் முயற்சி அவசிய மானாலும் அதனைக் கொள்ளையடித்தோ, ஏமாற்றியோ தேடக்கூடாது என்பதுடன் வறியமக்கட்கு உதவுதனை எப்போதும் கவனத்தில் கொள்ள வேண்டும்.[26] சுதந்திரமே வளர்ச்சிக்கு முதற்கண் தேவைப்படுவது "பெண் குழந்தைகட்குச் சுதந்திரமளிப்பேன் என யாராவது சொன்னால் அது எவ்வளவு முட்டாள் தனமானது என்பதனை சுவாமிஜியின் பின்வரும் கருத்துக்களினால் அறியலாம்.

> "பெண்கட்கு சுதந்திரமளிப்பபேன் என ஒருவன் கூறுவது முற்றிலும் தவறு என்பேன். விதவைகள், பெண்கள் தொழில் பிரச்சினைகள் என்பன பற்றி என்னிடம் கேட்கிறார்கள். நான் என்ன விதவையா இதற்குப் பதில் சொல்ல? பெண்களின் பிரச்சினைகளைத் தீர்க்க நீங்கள் யார்? நீங்கள் அவர்களை ஆளும் கடவுளா? விலகி நில்லுங்கள்.அவர்கள் தாங்களே தமது பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்வார்கள். உங்களால் தீர்க்க முடியும் என்று சொல்வதற்கு உங்கட்கு யார் அதிகாரம் வழங்கியது? கடவுள் எல்லோரையும் சமமாகவே படைத்துள்ளார். நீங்கள் உங்கள் வேலையைப் பாருங்கள். அவர்கள் தங்கள் வேலையைப் பார்ப்பார்கள்"[27]

என பெண்கள் நிலையில் நின்று அவர்களது பூரண சுதந்திரத்தை அங்கீக ரித்தவராக விவேகானந்தர் விளக்குகின்றார்.

## கடமையுணர்வு

தனிமனிதனின் கடமையுணர்வு பற்றிய விளக்கமும் விவேகானந்தர் பேச்சிலே துல்லியமாகத் தெரிகின்றது. நீங்கள் ஆற்றும் நற்செயல்களும் பின்பற்றும் உயர்பண்பு நெறிகளும் உங்கள் சுயநலத்திற்காகவே செய்யப்படுவன என்பதனைக் கேலியும் கிண்டலுமாக கூகிலியிருப்பது பலரையும் சிந்திக்கத் தூண்டுவதாயுள்ளது.



> "நீங்கள் ஆற்றும் நற்பண்புகள் எல்லாம் உங்கள் சொந்த நன்மைக்காகவேதான். நீயும் நானும் போய்த்தூக்கி விடுவேன் எனக் கடவுள் ஒன்றும் சாக்கடையில் விழுந்து கிடக்கவில்லை. வைத்திய சாலையோ, கல்விக்கூடமோ கட்டிவிட்டு நாம் மக்கட்குப் பேருபகாரம் செய்து விட்டோம் என யாரும் எண்ண வேண்டாம். உலகமாகிய பெரிய பள்ளிக்கூடத்திலே உன்னைப் படிக்கவும் வேலை செய்யவும் கடவுள் அனுமதித்திருக்கின்றார். தனக்கு உதவி புரிவதற்காக அல்ல. நீ உதவி புரியாவிட்டால் அவர் ஒன்றும் செத்துவிடப்போவதில்லை. இறைவனுக்காக வேலை செய்யும் பாக்கியம் நமக்குக் கிடைத்திருக்கின்றது. குஷ்டரோகிகளையும், ஊனமுற்றவர்களையும், துன்பப்பட்டவர்களையும் பார்த்து நான் சேவை செய்யும் போது கடவுள் தன்னை வழிபடுவதற்காகவே இப்படி ஒரு சந்தர்ப்பத்தை எனக்கு தந்திருப்பதாகவே நான் எண்ணுவதுண்டு. நாம் ஒன்றும் அவருக்கு உதவி செய்யவில்லை. 'உதவி' என்ற சொல்லை மனதிலிருந்து அகற்றிவிடுங்கள். நீங்கள் செய்வது உங்களுக்காகவேதான் உங்களால் உதவி பண்ணவே முடியாது. அவரை வழிபட நமக்க அனுமதி கிடைத்திருக்கின்றது. உலகத்தின் முன் அத்தகைய பக்தியுணர்வுடன் இருந்தால் அதுவே 'பூரணபற்றின்மை' அதுவே உனது கடமை. கடமையைத்தான் நீ செய் கின்றாய். கர்ம யோகமும் இதுதான்"[28]

என விளக்கும் போது 'அவனருளாலே அவன்தான் வணங்கி' என்ற பக்கதியோகமும்-கீதையின் கோட்பாடும் அத்வைதவேதாந்த விடுதலை உணர்வும் ஒருங்கு சேர உன்னதமான மனித நேயமாக வெளிக்கொணரப்பட்டிருப்பதை இவ்விடயத்திலே காணமுடிகின்றது.

## சமநிலை நோக்கு

கடமையினை ஆற்றும் வழி எப்படிப்பட்டது என்பதனை விளக்கிய விவேகானந்தர் மனச்சமநிலை' என்னும் விழுமியம் பற்றியும் விவாதிக்கின்றார். மேலை நாடுகளில் ஆற்றிய பேச்சுக்களில் "நல்லதன்" பக்கம் சாயும் மன நிலை மறைய வேண்டும் என அடித்துப் பேசினார். அதாவது பெரும் தன்மையான கண்ணோட்

டத்துடன் மனிதர்களைப் பார்க்க வேண்டும். நல்லவனாக இருப்ப தென்பது அவ்வளவு எளிதல்ல. விடுதலையடையும் வரை உடல் உனக்கு ஒரு கருவியாகும். நல்லவனாக இருப்பதில் பெருமைப்ப டக்கூடாது.

''நீ நல்லவனாக இருப்பது தவிர்க்க முடியாதது. ஆனால் நீ மற்றவர் நிலையிலே இருந்தால் எப்படியிருப்பாய்? திருடர்கள், விலை மகள், கொலைக்காரர்கள், அதர்மவாதி கள் அனைவரும் நீ உனது நல்ல இயல்பை வெளிப்படுத்து வதற்காக பலியிடப்பட்ட கிறிஸ்துவாகின்றார்கள். பலவீனர்கள், சாத்தான்கள், கெட்டவர்கள் அனைவரும் என்னுடைய கிறிஸ்துவே. இதுவே எனது கொள்கை. நான் ஏன் இப்படியானவர்களைப் பார்த்து ஏளனம் செய்ய வேண்டும்? அவர்கள் அப்படி இருப்பதால்தான் மற்றவர் களின் உயர்வு பாதுகாக்கப்படுகின்றது. இதனை அனைவ ரும் எண்ணிப்பார்க்க வேண்டும். உலகில் ஆண்களையும் பெண்களையும் சந்திக்கச் சந்திக்க இக் கருத்தே மேலோங் குகின்றது. இரண்டு பக்கமும் பார்க்கப் பழகுவதே சிறப் பான மனச்சம நிலையைத் தரும் அப்போதே சமநோக்கு உண்டாகும்''[29]

இத்தகைய சிந்தனையானது கடவுள் முன் அனைவரும் சமம் என்ற சிறப்பான மனித விழுமியத்தை வற்புறுத்த சுவாமி எடுத்துக் கொண்ட ஒரு உத்தியாகவும் அமைகின்றது. சித்தாந்தக் கோட்பாட் டிலும் பெரியபுராண அடியார்களில் இயற்பகை நாயனாரது 'தானம்' என்ற கற்பினைக் காப்பாற்றுவதற்காக அவரது மனைவி தன் கற்ப பையே தானமாக வழங்க முன்வந்த ஒரு செய்தியும் விவேகானந் தரது மேற்குறிப்பிட்ட சிந்தனையுடன் ஒப்பு நோக்கத்தக்கதாம்.

## சமயத்தின் இன்றய தேவைகள்:

இத்தனை விழுமியங்களுடாகவும் விவேகானந்தர் நிலைநாட்ட விரும்புவது பாரதம் வழங்கிய ஆன்மீகச் செல்வம் என்னும் அரும்பெரும் பொக்கிஷமாகும். மேலைநாடுகட்கான தனது விஜயத்தை மேற்கொண்டபோது இதனை அவர் தெளிவாகவே பிரதிபலித்திருக்கின்றார்.

''மேலை நாடுகளில் இருந்து நாம் எதனையும் எடுக்க



லாம். விஞ்ஞானம், அரசியல், தொழில் நுட்பம், கல்வி அனைத்தும் நாம் அவர்களிடமிருந்து கற்கவேண்டும். இந்த விஞ்ஞானம் தொழில் நுட்பங்கள் மூலம் இந்தியா தன்னை நிறைய வளர்த்துக் கொள்ள வேண்டும். பாரதம் இன்னும் தன் ஒட்டிற்குள் பதுங்கியிருந்து அதைத் தொடாதே, இதைத் தொடாதே எனக் கூறும் சாதிவெறி, சமையலறை மதம் ஆகியவற்றிலே பெருமைப்பட முடியாது. வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வெளி உலகுடன் தொடர்பு கொண்டு அறிவுநுட்பங்களை மேல் நாட்டின ரிடமிருந்து கற்கவேண்டும். ஆனால்....இதன் காரணமாக இந்தியா தனது ஆன்மீகச் செல்வத்தை - அரும் பெரும் பொக்கிஷத்தை இழக்கலாகாது. இந்த ஆன்மீக அமை ப்பே அகவாழ்வின் அடிப்படை. மேலை நாடுகட்கு நான் ,சென்றதன் முக்கிய காரணம் சர்வமதசபையில் கலந்து கொள்ளவோ-இந்தியாவைக் குபரே நாடாக்கவோ அல்ல; இந்தியாவின் வறுமை நிலைக்குப் பரிகாரம் காண்பதற் கான சாதனங்களைக் கேட்கவேண்டியே அங்கு செல்ல உத்தேசித்தேன். ஆயினும் இந்தியா மேலை நாடுகட்குப் பொருளுதவி வேண்டிப் பிச்சைக்காரனாகச் செல்ல வேண்டியதில்லை. விஞ்ஞானம் தொழில் நுட்பம் இவற் றைக் கற்பதற்குப் பண்டமாற்று முறையிலே மேல் நாடு களில் இருந்து பெறும் உதவிக்குப் பதிலாக உபகாரமாக இந்தியாவில் உள்ள ஆன்மீகச் செல்வத்தை அது தேவை யான அளவு வழங்கி அவர்களை நிறைவு செய்யலாம்''.[30]

மேலை நாடுகளில் உள்ள மனவெறுமையையும் கீழ் நாடுகளில் உள்ள வறுமையையும் இங்ஙனம் செய்வதால் இல்லாமல் ஆக்க லாம் என்பது சுவாமிஜியின் திட்டமாக இருந்தது. 'பசிவர அங்கே மாத்திரைகள் - பட்டினியால் இங்கு யாத்திரைகள்' என்ற ஒரு பாடல் அடிகளை தான் இந்த இடம் நினைவூட்டுவதாகவுள்ளது.

பொதுவாக இந்திய சமுதாயத்தின் மீது விவேகானந்தர் கொண்ட எல்லையற்ற அன்பும் ஆராத நேசமுமே தேசப்பற்றாக மாறியது. அதனால் துயரப்படும் ஒவ்வொரு தனிமனிதனையும் துன்பங்களில் இருந்து ஈடேற்ற வேண்டுமென்ற அவா மானுடம்

தழுவிய மனித நேயமாக மலர்ந்தது. அந்த மனிதநேய விழுமியங் களை அத்வைத வேதாந்தத்தின் மூலம் மறுமலர்ச்சி அடையச் செய்யலாம் என்பது அவரது உறுதியான இலட்சியமாக பரிமளித் தது. அதனால்

> ''மனிதனை மனிதனாக்கும் மதம், மனிதனை மனிதனாக் கும் கல்வி, மனிதனை மனிதனாக்கும் தத்துவங்கள், எல்லாவகையிலும் மனிதனை மனிதனாக்கும் ஆன்மீகம் இவையே இன்றைய இன்றியமையாத தேவைகள்.''

என்பதனையே மேலான மனிதநேய விழுமியங்களாக விவே கானந்தர் தமது சொற்பொழிவுகள்,பிரசங்கங்கள், உபதேசங்கள் வாயிலாக இனம் காட்டி எதிர்கால மக்களும் அவற்றினைப் பேணும் பொருட்டு பெரும் உந்து சக்தியாக விளங்கினார்.

## அடிக்குறிப்புகள்

1. சுவாமி விவேகானந்தர், றோமன்ட் றோலண்ட், சாகித்ய அக்கடமி, புதுடெல்கி,1986, முன்னுரை, பக்.101. (Life of Vivekananda, Roman Rolland, Sahitiya Accademy, Delhi,1986).
2. புதிய இந்தியாவைப்படைப்போம், சுவாமி விவேகானந்தர், தமிழாக்கம், சுவாமி கமலாத்மானந்தர், ராமகிருஷண மடம்,சென்னை, 1983, பக்.2 (ஆங்கிலத்தில்: Rebuild of India).
3. விவேகானந்தர், றோமன்ட் றோலண்ட், பக். 18.
4. 1) புதிய இந்தியாவைப் படைப்போம், பக்.8-10.

   2) The East and West, Swami Vivekananda, Advaita Ashrama, Calcutta, 1971, p. 18-19.
5. மேற்படி, பக்.25.
6. மேற்படி.பக் 28-31.
7. எழுமின் விழிமின், சுவாமி விவேகானந்தர், குமரன் அச்சகம், ஆங்கிலத்தில் ஏக்நாத் ரானடே, தமிழில்: ஸ்ரீ கோபாலன், சென்னை, 1963, பக்.63.
8. மேற்படி, பக்.15.
9. மேற்படி, பக். 95.
10. புதிய இந்தியாவைப் படைப்போம், பக்.82.

    அண்மைக்கால இந்திய மெய்ப் பொருளியல், சி. இராம லிங்கம், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், தமிழ்நாடு 1976, பக் : 117.



11. தியானமும் அதன் முறையும், விவேகானந்தர், தமிழில் ஆத்ரேய சுந்தர நாராயணர், ராமகிருஷ்ண மடம், சென்னை, பக்.61.
12. செயல்முறை வேதாந்தம், விவேகானந்தர், தமிழில்: செல்வி ஆர். நிவேதிதா, ராமகிருஷ்ணமடம், சென்னை, 1986, பக்.10.
13. புதிய இந்தியாவைப் படைப்போம், பக்:83.
14. மேற்படி பக்.85-87.
15. A. எழுமின் விழிமின் பக் 89 ;

    B. Swami. Vivekananda and His Humanism., By. Swami Ranganada, Advitha A shrama., P. 12 - 13.
16. சுவாமி விவேகானந்தர் வாழ்க்கையும் செய்தியும், சுவாமி தபஸ்வியானந்தர், தமிழில்: மங்கையற்கரசி, ராமகிருஷ்ண மடம், 6 ம் பதிப்பு, பக். 80-81.
17. செயல்முறைவேதாந்தம், பக் 11.
18. புதிய இந்தியாவைப்படைப்போம், பக்.94-95.
19. எழுமின் விழிமின், பக்.111-112.
20. புதிய இந்தியாவைப் படைப்போம், பக்.90-91.
21. மேற்படி, பக்.36 ; அண்மைக்கால இந்திய மெய்ப் பொருளி யல், பக் ; 114.
22. மேற்படி, பக்.53.
23. மேற்படி, பக்.54-59.
24. மேற்படி, பக்.23.
25. மேற்படி, பக்.60-63 .
26. கர்மயோகம், விவேகானந்தர், தமிழில்: ஏ.சுப்பிரமணியன், ராமகிருஷ்ண மடம், சென்னை, 1988, பக்.30-31.
27. வேதாந்த சொற்பொழிவுகள், விவேகானந்தர், ராமகிருஷ்ண மடம், சென்னை, 1986, பக். 129.
28. A. எழுமின் விழிமின், பக். 197.

    B. Swami. Vivekananda and His Humanism, P 43 - 45.
29. விவேகானந்தரின் வாழ்க்கையும் செய்தியும், பக்.255-257.
30. மேற்படி, பக்.131-135.

    விவேகானந்தர், றோமன் றோலன்ட், பக்.84.

## ஆய்வுத் துணை நூற்பட்டியல் : Bibliography


### தமிழ் மூல நூல்கள் :

சிவஞானபோதம், சிவஞானசுவாமிகள் சிற்றுரை ஆறுமுகநாவலர் பதிப்பு, சென்னை சர்வதாரி வருடம்.

சிவஞான சித்தியார், திருவிளங்கம், மு. உரை, கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்புக்கழகம், யாழ்ப்பாணம், 1971.

சிவப் பிரகாசம், திருவிளங்கம் மு. புத்துரை, கூட்டுறவுத்தமிழ் நூற்பதிப்புக்கழகம், யாழ்ப்பாணம், 1974.

திருக்களிற்றுப்படியார், திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார், சுப்பிரமணியபிள்ளை, கா., சென்னை, 1961.

திருவருட்பயன், சிவபாத சுந்தரனார் சு. விளக்கவுரை, கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்புக்கழகம், யாழ்ப்பாணம்.

திருமந்திரம், திருப்பனந்தாள் காசிமட வெளியீடு, ஸ்ரீ வைகுண்டம் 1968.

திருமந்திரம், பகுதி I, பகுதி II, திருமூலர், விளக்கவுரை சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக வெளியீடு, திருநெல்வேலி, 1974.

திருவாசகம் மூலம் உரையும், சுப்பிரமணியபிள்ளை கா. சைவ சித்தாந்தமகா சமாஜம், சென்னை. 1933.

திருக்குறள், பரிமேலழகர் உரை, திருப்பனந்தாள் வெளியீடு, 1968.





தொல்காப்பியம், புலியூர்க் கேசிகன்(பதிப்பு) சென்னை, 1967.

பன்னிரு திருமுறைப் பெரும் திரட்டு, இராமநாதபிள்ளை,ப. தொகுப்பாசிரியர் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகவெளியீடு சென்னை, 1961.

### வடமொழி மூல நூல்கள், மொழிபெயர்ப்புக்கள்.

உபநிஸத்ஸாரம், பகுதி I, பகுதி II, தமிழில்: அண்ணா, உரையாசிரியர், ராமகிருஷ்ண மடம், சென்னை.

ஸ்ரீமத் பகவத்கீதை, தமிழில்: சுவாமி. சித்பவானந்தர் ராமகிருஷ்ண தபோவனம், திருச்சி, 1960.

பகவத்கீதை சங்கர பாஷ்யம், தமிழில்: சுந்தரராஜசர்மா, சென்னை, 1907.

பௌஷ்கராகமம், தமிழில்: சண்முகசுந்தர முதலியார். சென்னை, 1981.

Kiranagama., Siddhanta Sivagamaparipalana sangam, Devakottai, 1952.

Matangaparameshwara Agama, Sivagama siddhanta paripalana sanagam, Devakotta; 1924.

Mrgendragama, Vidyapada., Op.cit, 1928.

The Rourawa Agama, Vidya and kiriyapada, with English notes Edited by French Institute Indology, Pondicheri, 1961.

## ஏனைய தமிழ் நூல்கள் :


| | |
|---|---|
| ஆச்சார்ய சந்திரசேகரந்திர சரஸ்வதிஸ்வாமிகள், | இந்து தர்மங்கள்,சென்னை, 1976 . |
| இராமலிங்கம், டாக்டர், சி., | அண்மைக்கால இந்திய மெய்ப்பொருளியல், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், தமிழ்நாடு, 1976. |
| இராசமாணிக்கனார், டாக்டர், மா. | பெரியபுராண ஆராய்ச்சி, பாரி நிலையம் சென்னை, 1978, |
| இராசமாணிக்கனார், டாக்டர், மா. | பல்லவ வரலாறு, சென்னை, 1944. |
| இராமசாமி நாயுடு, (பதிப்பு), | கந்த புராணம், மூலமும் வசனமும், சென்னை, 1928. |
| கணபதிப்பிள்ளை, பண்டிதமணி, சி., | கந்தபுராண கலாச்சாரம், யாழப்பாணம். |
| கலைவாணி இராமநாதன், | வேதபாரம்பரியமும் சைவசித்தாந்தமும், ஸ்ரீ ரெங்கா பிறின்டர்ஸ், மதுரை, 1992. |
| கோவேந்தன், பதிப்பாசிரியர், | சித்தர் பாடல்கள், சென்னை, 1979. |
| கைவசநாதக்குருக்கள், பேராசிரியர், கா. | சைவத்திருக்கோயிற் கிரியை நெறி, சென்னை. |
| சிவஞான யோகிகள், | காஞ்சிப்புராணம், கந்தசாமி முதலியார் பதிப்பு, சென்னை, வெகுதானிய ஆண்டு. |
| சிவபாதசுந்தரனார், சு., | கந்தபுராண விளக்கம், சென்னை, பவவருடம். |
| சுத்தானந்த பாரதியார், | திருமந்திர விளக்கம், சுத்தானந்தாப் பதிப்பகம், கொழும்பு, 1953. |
| ஞானப்பிரகாசம். மு., | கர்மயோகம், வடஇலங்கைத்தமிழ் நூற் பதிப்பகம், சுன்னாகம், 1968. |





| | |
|---|---|
| தபஸ்வியானந்தர், சுவாமி., | சுவாமி விவேகானந்தர் வாழ்க்கையும் செய்தியும், தமிழில்: மங்கையற்கரசி, ராமகிருஷ்ணமடம், சென்னை. |
| றொமெயின் றோலன்ட்., (ஆங்கிமூலம்), | சுவாமி விவேகானந்தர், சாகித்ய அக்கடமிவெளியீடு, டெல்லி, 1986. |
| லொறன் பறோஸ், (ஆங்கில மூலம்), | மனித விழுமியத்துக்கான சத்யசாயிக் கல்வி, தமிழில்: சபா. ஜெயராஜா, சத்யசாயி சேவா நிலையம், தாவடி, யாழ்ப்பாணம், 1992. |
| யோகிராஜ் வேதரத்திரி மகரிஷி., | மனவளக்கலை, தொகுதி 1,2, ஈரோடு, தமிழ் நாடு, 1992. |
| விவேகானந்த சுவாமிகள்., | செயல் முறை வேதாந்தம், ராமகிருஷ்ணமடம், சென்னை, 1986. |
| விவேகானந்த சுவாமிகள்., | புதிய இந்தியாவைப் படைப்போம்,. ராமகிருஷ்ணமடம், சென்னை 1983. |
| விவேகானந்த சுவாமிகள்., | எழுமின் விழிமின், குமரன் அச்சகம் தமிழில்: ஸ்ரீ கோபாலன், சென்னை, 1963. |
| விவேகானந்த சுவாமிகள்., | தியானமும் அதன் மகிமையும், ராமகிருஷ்ணமடம், சென்னை. |
| விவேகானந்த சுவாமிகள்., | கர்மயோகம், ராமகிருஷ்ணமடம், சென்னை, 1988. |
| விவேகானந்த சுவாமிகள்., | வேதாந்தச் சொற் பொழிவுகள், ராமகிருஷ்ணமடம், சென்னை 1968. |
| வில்லியம், லில்லி, (ஆங்கில மூலம்), | அறவியல் ஓர் அறிமுகம், தமிழ் வெளியீட்டுக்கழகம், சென்னை, 1983. |
| வேலுப்பிள்ளை, பேராசிரியர், ஆ., | தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும் பாரிநிலையம், சென்னை 1985. |

ஹிரியண்ணா எம். — இந்தியதத்துவம், பகுதி 1, தமிழ் பாடநூல் வெளியீட்டுக் கழகம், சென்னை.

## அகராதிகள் தமிழ், ஆங்கிலம் :

கழகத்தமிழ்க்கையகராதி, — சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி, 1968.

Encyclopeadia of Religion and Ethics, Vol.V. — Edited by: James Hastings, Newyork, 1912.

## ஆங்கில நூல்கள்

Arunasalam, M., — Saivagamas, Kalashetra publication, Tiruvanmiyur, Madras, 1983.

De, Burgh., — The Relations of Morality to religion. (No title Page)

Damotharan, K., — Idian Thougt-A Critical Survey, Bombay, 1967.

Hiriyanna, M., — Essential of Indian Philosophy, George Allen & unwin ltd, London, 1956.

Macdonnell, A.A., — A vedic Reader for Students, Oxford university Press, London, 1965.

Radha Krishnan, Dr. S. — The principal upanishads, George Allen & unwin Ltd, London, 1953.

Radha Krishnan, Dr.S. — Indian Philosophy, Vol -I, George Allen & unwin Ltd, London.

Rangananda Swamigal, — Swami. Vivekananda and his Humanism, Advaita Ashrama, calcutta, 1991.

Sharma. I. C., — Ethical Philosophies of India, Johnson Publication company,u.s.a 1965.

Swami Vivekananda, — The East and west, Advaita Ashrama, Calcutta, 1971.

## இந் நூலாசிரியர்;



திருமதி கலைவாணி இராமநாதன் நீண்டகாலமாகச் சைவசித்தாந்தச் சிந்தனையுடையவராயுள்ளார். இவர் சைவசித்தாந்தத்தை ஆய்வு நெறியாகவும், பயில் நெறியாகவும் கொள்வது மட்டுமன்றி வாழ்வு நெறியாகவும் கொள்ள வேண்டுமென்ற எண்ணமுடையவர். அவர் கற்பித்தலில் இருபது வருடங்கட்கு மேலான அனுபவமுடையவர். பல்கலைக்கழக முது நிலை விரிவுரையாளர் என்ற வகையிலே ஆய்வு நெறியாகச் சைவ சித்தாந்தத்தை நோக்க வேண்டிய ஒரு துறைசார் தேவை இவருக்குண்டு இந்த வகையிலே இவர் சைவசித்தாந்தம், இந்து சமய விழுமியங்கள் தொடர்பாக எழுதிய கட்டுரைகளின் தொகுப்பாகச் 'சைவசித்தாந்தத்தில் ஒழுக்கவியல் அடிப்படைகள்' என்னும் இந்நூல் அமைகின்றது.

பேராசிரியர். கலாநிதி.
அ. சண்முகதாஸ்
பீடாதிபதி/கலைப்பீடம்,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்,
திருநெல்வேலி, யாழ்ப்பாணம்.

PRINTED BY
KARTHIKEYAN (PVT) LTD.
501/2, GALLE ROAD, COLOMBO-06. TEL: 595875.